# சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் அகப்புறப் போராட்டச் சித்தரிப்பு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேட்டு


ஆய்வாளர்

**ரா.ராமேஸ்வரி**

பதிவு எண்.0543/2012

நெறியாளர்

முனைவர் **கா.பாஸ்கரன்**

தமிழ் உயராய்வு மையம்,

அழகப்பா அரசு கலைக் கல்லூரி,

காரைக்குடி - 3.






## அழகப்பா பல்கலைக் கழகம்

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA:3.64) தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003.

தமிழ்நாடு - இந்தியா

**மே - 2018**

ரா.ராமேஸ்வரி,
*முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்),*
*தமிழாய்வுத்துறை,*
*அழகப்பா அரசு கலைக்கல்லூரி,*
*காரைக்குடி - 630 003.*

*நாள் :*

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் அகப்புறப் போராட்டச் சித்தரிப்பு”** *என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.*

(ரா.ராமேஸ்வரி)
ஆய்வாளர்

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் கா.பாஸ்கரன்,**
*உதவிப் பேராசிரியர் (ஓய்வு),*
*அழகப்பா அரசு கலைக் கல்லூரி,*
*காரைக்குடி - 630 003.*

**முனைவர் கா.பாஸ்கரன்,**

*உதவிப் பேராசிரியர் (ஓய்வு),*

*அழகப்பா அரசு கலைக் கல்லூரி,*

*காரைக்குடி - 630 003.*

*நாள் :*

# நெறியாளர் சான்றிதழ்

**"சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் அகப்புறப் போராட்டச் சித்தரிப்பு"** *என்னும் தலைப்பில்* **திருமதி *ரா.ராமேஸ்வரி*** *அவர்கள் முனைவர்பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.*

முனைவர் கா.பாஸ்கரன்

நெறியாளர்

# நன்றியுரை

இவ் ஆய்வினை மேற்கொள்வதற்கு வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், அழகப்பா அரசு கலைக் கல்லூரி முதல்வர் முனைவர் சி.முத்தம்மை அவர்களுக்கும், தமிழ்த்துறைத் தலைவர் திரு.ம.துரை அவர்களுக்கும், நான் பணியாற்றிக் கொண்டே ஆய்வுப்பணி மேற்கொள்வதற்கு அனுமதியளித்த இதயா மகளிர் கல்லூரி முதல்வர் அருட்சகோதரி முனைவர் ஜோதிமேரி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

காலம் நேரம் பாராது, நான் கேட்கும் ஐயப்பாடுகளுக்கு இன்முகத்தோடு நெறிப்படுத்திய என் ஆய்வு நெறியாளர் முன்னாள் அழகப்பா அரசு கலைக்கல்லூரி தமிழ் உயராய்வுத்துறை உதவிப் பேராசிரியரும், தற்போது தொண்டி அழகப்பா பல்கலைக் கழக மாலைநேரக் கல்லூரியின் இயக்குநருமான முனைவர் கா.பாஸ்கரன் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக் காலத்தில் எனக்கு ஏற்பட்ட சந்தேகங்களுக்கு சான்றுகளோடு தீர்வு வழங்கிய தமிழ்த்துறையின் பேராசிரியப் பெருமக்கள் அனைவருக்கும் எனது நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்விற்கு என்னை ஊக்கப்படுத்திய முனைவர் இரா.சுதமதி அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன். ஆய்விற்கு உதவிய அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேரா.முனைவர் மு.பாண்டி அவர்களுக்கும், என் பேராசிரியப் பெருமக்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினை மேற்கொள்வதற்கு என்னை எப்பொழுதும் ஊக்கப்படுத்திய என் கணவருக்கும், எனது குடும்பத்தார்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

என் ஆய்விற்கு உதவிய பல்கலைக்கழக நூலகத்தாருக்கும், ஆய்வு தொடர்பாக எனக்கு நல்லுதவி புரிந்த அனைத்து உள்ளங்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வினைச் செம்மையாக தட்டச்சு செய்தளித்த மகேஷ் கணினியகத்திற்கு என் நன்றி உரியது.

**ரா.ராமேஸ்வரி**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| உவமை | - | உவமையியல் |
| எச்சம் | - | எச்சவியல் |
| குறள். | - | திருக்குறள் |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| செய்யு. | - | செய்யுளியல் |
| தண்டி. | - | தண்டியலங்காரம் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| நன். | - | நன்னூல் |
| நூ.எ. | - | நூற்பா எண் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பு.பெ. | - | புனைப் பெயர் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| ம.ப. | - | மறுபதிப்பு |
| மு.கூ.நூ. | - | முன்னர் கூறிய நூல் |
| மு.ப. | - | முதற்பதிப்பு |
| மேலது | - | மேலே காட்டிய நூல் |
| மொ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |

# பொருளடக்கம்

# முன்னுரை

*சமூகத்தின் நிறைகுறைகளைச் சுட்டிக்காட்டும் கருவிகளாக இலக்கியங்கள் உள்ளன. இவற்றுள் சமூகத்தை உள்ளவாறு பிரதிபலிக்கும் கலைவடிவமாகச் சிறுகதைகள் திகழ்கின்றன. சிறுகதைகள் ஏனைய இலக்கிய வடிவங்களைவிட நுட்பமானவை. அவை மனித உணர்வினை வெளிப்படுத்தும் மெல்லிய இழைகள் போன்றவை. நேர்த்தியாகப் படைக்கப்படும் சிறுகதைகள் கவித்துவம் கொண்டவை எனலாம். அவ்வகையில் புனைக்கதைகள் படைப்பதிலும் கவிதைகள் எழுதுவதிலும் தனித்துவம் பெற்றுத் திகழும் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள் தேசிய எல்லை கடந்து உலகளாவிய பெருமை உடையனவாகத் திகழ்கின்றன. சிறுகதை இலக்கியத்துறையில் சுப்ரபாரதிமணியன் அழுத்தமாகத் தடம்பதித்தவர். அவரது சிறுகதைகள் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப் படுகின்றன.*

## ஆய்வுத் தலைப்பு

*தமிழ் இலக்கிய உலகில் சிறந்த சிறுகதை எழுத்தாளர்களுள் சுப்ரபாரதிமணியனும் ஒருவராவார். தொலைத் தொடர்புத் துறையில் பணியாற்றிய இவரின் சிறுகதைகளை அடிப்படையாகக் கொண்டு* ***'சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் அகப்புறப் போராட்டச் சித்தரிப்பு'*** *என்னும் பொருளில் முனைவர்பட்ட ஆய்வுத் தலைப்பு அமைகிறது.*

## ஆய்வு நோக்கம்

*படைப்பாளர்கள் தமது படைப்புகளில் மாறி வரும் சமூக அமைப்பையும் அதன் கட்டுக்கோப்பையும் பிரதிபலிக்கும் வகையில் எழுதி வருவதைக் காணலாம். இவற்றின் பின்னணியில் மனிதனின்*

அகப்புறப் போராட்டச் சித்தரிப்பை வெளிப்படுத்தும் ஆய்வுகள் தமிழில் மிகக் குறைவே.

புதினம், சிறுகதை என்னும் இரு கலை வடிவங்களைக் கையாண்டு அதில் வெற்றியும் பெற்றவர் சுப்ரபாரதிமணியன். இவர் சிறுகதை உலகில் நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகளைப் படைத்து தனி முத்திரை பதித்த இவரது சிறுகதைகளில் காணப்படும் அகப்புறப் போராட்டச் சித்தரிப்புகளை வெளிக்கொணர்வதன் வாயிலாக படைப்பாளர் படைக்க விரும்பிய சமூக அமைப்பையும் அதன் கட்டுக்கோப்புக்களையும் அறிய உதவுகின்றன.

ஆகவே சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகளில் அகப்புறப் போராட்டச் சித்தரிப்புகளையும் சமூக அமைப்பை அவர் எடுத்துக்காட்டும் முறையையும் அவரது வெளிப்பாட்டுத் திறனையும் எடுத்துரைப்பதே ஆய்வின் நோக்கமாக அமைகிறது.

**ஆய்வு எல்லை**

‘சுப்ரபாரதிமணியன் கதைகள்’ எனும் தொகுப்பில் உள்ள 154 சிறுகதைகளும் ஆய்வு எல்லையாக அமைகின்றன. சுப்ரபாரதிமணியனின் படைப்புலகப் பின்னணி, அவருடைய சிறுகதைகளிலுள்ள உள்ளடக்கங்கள் ஆகியவற்றைத் தொகுத்துரைத்த பின்னர் அவற்றுள் இடம்பெறும் மனித வாழ்வியல் சிந்தனைகளையும், அகப்புறப் போராட்ட சித்தரிப்புகளையும் ஆராய்வது இவ்வாய்வின் எல்லையாக அமைகிறது.

**ஆய்வு அணுகுமுறைகள்**

விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் உரிமைகளை சிறுகதைகளில் இடம்பெற்றிருப்பதை விளக்குவதால் விளக்கவியல் அணுகுமுறையும்,

மக்களின் மனப்போராட்டங்களைப் பாத்திரங்களின் வாயிலாக கண்டறியும் முகமாக உளவியல் அணுகுமுறையும், படைப்பாளரது கதைகள் பகுக்கப்பட்டு ஆராயப்படுவதால் பகுப்பாய்வு அணுகுமுறையும், இவற்றின் வழி சமூக அமைப்பு உற்றுநோக்கப்படுவதால் சமூகவியல் அணுகுமுறையும், இவ்வாய்வில் கையாளப்பட்டுள்ளன.

**ஆய்வுத் தரவுகள்**

இவ்வாய்விற்குப் பயன்படும் தரவுகள் முதன்மைத் தரவுகள், துணைத் தரவுகள் எனப்படும். ஆய்வின் அடிப்படை ஆதாரமாக அமையும் 'சுப்ரபாரதிமணியன் கதைகள்' எனும் தொகுப்பில் உள்ள 154 சிறுகதைகளும் முதன்மைத் தரவுகளாக அமைகின்றன. ஆய்வுக்குத் துணையாக அமையும் திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், ஆய்வுக் கட்டுரைகள், இதழ்கள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள், இணையதளச் செய்திகள், நேர்காணல்கள் ஆகியன துணைத் தரவுகளாக அமைகின்றன.

**கருதுகோள்**

சுப்ரபாரதிமணியன் தமது படைப்புகளில் அறநெறிகளை முதன்மைப்படுத்துகிறார் என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகிறது.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வு ஆய்வு அறிமுகம், ஆய்வு முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1. சுப்ரபாரதிமணியனின் இலக்கியப் பணிகள்
2. கதைமாந்தர்களின் உணர்வுப் போராட்டம்
3. பெண்களின் பன்முக அவலங்கள்

4. சிறுகதைகளின் படைப்பாக்கத் திறன்

5. அகப்புறப் போராட்டம்

என்பவையாகும்.

**இயல் விளக்கம்**

'சுப்ரபாரதிமணியனின் இலக்கியப் பணிகள்' என்னும் முதல் இயல் படைப்பாசிரியரான சுப்ரபாரதிமணியன் பற்றிய அறிமுக இயலாக அமைகிறது. அவரது வாழ்க்கை வரலாறு, இலக்கியப் பணிகள், படைப்புகள், படைப்பிற்கான நோக்கம், சூழல், படைப்பு பற்றிய திறனாய்வுகள் ஆகியன இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

'கதைமாந்தர்களின் உணர்வுப் போராட்டம்' என்னும் இரண்டாவது இயலில் பாத்திரங்களின் வகைகள், பண்பு நலன்கள் சுட்டப்பட்டுள்ளன.

பாத்திரங்களின் தன்மைக்கேற்ப சாதிய கட்டுமானத்தைத் தகர்த்தெறிய நினைப்பவர்கள், மனைவியை இழந்தவர்களின் மனவேதனை, உயர்ந்த உள்ளத்தால் சமூக விழிப்புணர்வை ஏற்படுத்துபவர்கள், அவலநிலையால் முடங்கிவிடாத பெண் போன்ற பாத்திரங்கள், மக்களின் வாழ்வில் அக்கறை கொண்டவர்கள், எதிர்மறைப் பண்புடையவர்கள் எனப் பாகுபாடு செய்யப்பட்டு அவர்களது பண்பு நலன்கள் போன்றவை விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

'பெண்களின் பன்முக அவலங்கள்' என்னும் மூன்றாம் இயலில் சமுதாயமும் இலக்கியமும் ஒப்பிட்டுப் பார்க்கப் பட்டுள்ளது. குடும்ப அமைப்புமுறை, தனிக் குடும்பம், கூட்டுக்குடும்பம் என்ற கட்டுமானங்கள் ஆராயப்பட்டுள்ளன. பெண் கொடுமை, இன்னலான

இல்வாழ்க்கையில் இருப்பவர்கள் குறிப்பறிந்து நடக்கும் மனைவி, குழந்தை இல்லாப் பெண்கள், வரதட்சணை, பாலியல், விதவை, கணவனால் கைவிடப்பட்ட பெண்கள், குடிகாரக் கணவனுடன் வாழும் பெண்கள் எனப் பெண்களின் பன்முக நிலையினை தெளிவுபடுத்தப் பட்டுள்ளன.

'சிறுகதைகளின் படைப்பாக்கத் திறன்' என்ற நான்காம் இயலில் உத்திமுறைகளின் இலக்கணம், ஆசிரியர்களின் விளக்கங்கள், சிறுகதைகளில் அடுக்குத் தொடர், இரட்டைக்கிளவி, ஒலிக்குறிப்புச் சொற்கள், பழமொழிகள், சொலவடைகள், நனவோடை உத்தி, பிறமொழிச் சொற்கள், உவமைகள், உம்மைத்தொடர்கள், கதைக்குள் கதை, படர்க்கைக் கூற்று நோக்குநிலை, கதைமுடிப்பு உத்தி ஆகியவை விரிவாக எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

'அகப்புறப் போராட்டம்' என்னும் ஐந்தாம் இயலில் போராட்டங்கள் என்பவை எதைக் குறிக்கின்றன என்பதையும், அகப்போராட்டங்களாக, 1.காதல், 2.திருமணம், 3.முதிர்கன்னி, 4.மகப்பேறின்மை, 5.பாலியல் போன்றவை ஆய்வுப் பொருளாக அமைந்துள்ளது. புறப்போராட்டங்களாக 1.நட்பு, 2.தொழில், 3.கலவரம், 4.சுற்றுச்சூழல், 5.வேலையின்மை, 6.வறுமை, 7.அதிகார வர்க்கம், 8.சாதி-மதம், 9.கலாச்சாரச் சீரழிவு போன்றவை புறப்போராட்டங்களாக அமைகின்ற தன்மையை நுட்பமாக ஆய்வு செய்து மெய்ம்மைகள் பெறப்பட்டுள்ளன.

ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த உண்மைகளும் முடிவுகளும் அந்தந்த இயல்களின் இறுதியில் விளக்கப்பட்டுள்ளன. ஆய்வின்

நிறைவினைக் கருத்தில் கொண்டு ஆய்வின் வழி கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுக்கப்பட்டு தொகுப்புரையாக வழங்கப்பட்டுள்ளது.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குத் துணை செய்த நூல்கள், இதழ்கள், ஆய்வேடுகள் போன்றவை அகரவரிசைப் படுத்தப்பெற்றுத் துணைநூற் பட்டியலாக இடம்பெற்றுள்ளது.

பின்னிணைப்பாக ஆசிரியரின் நேர்காணல் வினா விடை கொடுக்கப்பட்டுள்ளது.

இயல் – 1

# சுப்ரபாரதிமணியனின் இலக்கியப் பணிகள்

## பொருளடக்கம்

## சுப்ரபாரதிமணியனின் இலக்கியப் பணிகள்

### முன்னுரை

கதை சொல்லுதலும் கேட்டலும் காலம் காலமாக நடந்து வருகின்றன. அவ்வாறு கேட்கப்பட்டவை எழுத்து வடிவம் பெற்ற இலக்கியங்களாக மாற்றம் பெற்றன. இவ்விலக்கியங்கள் புயலுக்கும் வெள்ளத்திற்கும் தப்பி நினைவாற்றல் மிக்க மக்களாலும் ஓலைச் சுவடிகளாலும் காப்பாற்றப்பட்டன. சங்க இலக்கியத் தனிப்பாடல்கள் அனைத்தும் செய்யுள் வடிவில் இயற்றப்பட்ட சிறுகதைக் கூறுகள் என்பது குறிப்பிடத்தக்கது.

உரைநடை இலக்கியம் வளர்ச்சியடைந்ததன் விளைவாக 'சிறுகதை' தமிழில் தோன்றி தனித்துவம் பெறத் தொடங்கியது. சிறுகதை இலக்கியத்துறை தற்கால இலக்கிய உலகில் வளர்ந்து வரும் முக்கியத்துறையாகும். புதுமைப்பித்தன் தொடங்கி இன்றுவரை பலரும் இத்துறையில் ஈடுபட்டுவருகின்றனர். இவர்களுள் சுப்ரபாரதிமணியன் தனக்கென தனி அடையாளத்தோடு சிறுகதைகளைப் படைத்து வருகிறார். இவ்வியல் சுப்ரபாரதிமணியனின் இலக்கியப் பணி குறித்த பங்களிப்பை விரிவாக ஆய்வுசெய்கிறது.

இவ்வியலில் சிறுகதை குறித்த விளக்கங்கள், ஆசிரியர் பற்றிய கருத்துக்கள், ஆசிரியரின் இலக்கியப் பணிகள், மொழிபெயர்ப்புப் பணிகள், இதழியல் பணிகள், குறும்படங்கள், படைப்புத்திறன் பற்றிய விளக்கங்கள், போன்றவை விரிவாக ஆய்வுக்குட்படுத்தப்படுகின்றன.

### கதை விளக்கம்

ஒரு நிகழ்ச்சியைக் கேட்கும் ஆர்வமே கதையின் மூலம் ஆகும். பாட்டியோ, தாயோ, பெரியோர்களோ கதைசொல்லிகளோ கூறும்

நிகழ்ச்சிகளின் தொகுப்பே அல்லது செய்திகளே பிற்காலத்தில் கதையாக மாறியது. கருத்து, கதைக்கரு, கதையை விளக்கும் தன்மை, நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்தும் தன்மை, கதை மதிப்பீடு, ஆகியவை ஒன்றோடுடொன்று இணைந்து ஓர் உயிரோட்டத்துடன் முழுமையாக அமையும்போது ‘கதை’ கலையாகிறது. கதை என்னும் சொல்லை ஆங்கிலத்தில் ‘Story’ என்பர்.

கதைக்குத் தமிழ் ஆங்கில அகராதி “நிகழ்ச்சி, நிகழ்ச்சி விவரம், செய்தி, விரிவுரைவிளக்கம், ஆதாரச்செய்தி, சென்றகால வரலாறு, தோற்ற வளர்ச்சி, விவரம், கதைக்கூறு, இலக்கியப் படைப்பில் நிகழ்ச்சிக்கூறு, பத்திரிக்கை எழுத்தான்மைக்கூறு, பத்திரிக்கைச்செய்தி, பத்திரிக்கை கட்டுரை, நொடிக்கதை, உட்கதை, இடைநிகழ்ச்சி, துணுக்குரை, அருஞ்சுவை தரும் விளக்கம், கேள்விச்செய்தி, அறிவிப்பு, வாய்மொழிக்கூற்று, சாட்டுரை, புனைஉரை முழுநிலை பிண்ணனி விளக்கம், அருங்கதை, புனைகதை”[1] என முப்பதுக்கும் மேற்பட்ட பொருளைத் தருகிறது.

ஒருவரின் வாழ்வில் நடந்த முழு நிகழ்ச்சித் தொகுப்பையோ, குறிப்பிட்ட காலக்கட்டத்தின் நிகழ்ச்சித் தொகுப்பையோ உணர்ச்சிப்பூர்வமாகவும், நயம்படவும், சுவைபடவும், எழுதிய இலக்கிய வடிவமே காப்பியமாயிற்று, காப்பியத்தின் உட்கூறுகளைக் காதைகள் என்று அழைத்தனர். பிற்காலத்தில் காதை என்பது ‘கதை’ என குறுக்கல் விகாரமாயிற்று.

தமிழ்ப் பேரகராதி கதை என்பதற்குப் “பெரிய சரிதம், இதிகாச புராணங்கள், பெருங்கதை, பொய்வார்த்தை, விசித்திரக்கதை,

கட்டுக்கதை, சொல், விதம், உரையாடல்"[2] என ஒன்பது பொருள்களைக் குறிக்கின்றது.

எனவே வாய்மொழியாகக் கூறப்பட்ட நிகழ்வுகள், பாத்திரங்களின் துணையுடன் கற்பனையாகக் கதைகளாக உருமாற்றம் அடைந்த செய்தி புலனாகிறது. கதைசொல்லிகளின் திறமைக்கேற்ப அதன் அமைப்பு, நடை, மாறுபடுகிறது. இவ்வாய்மொழி இலக்கியங்களே பிற்காலத்தில் ஏட்டிலக்கியமாக வளர்ச்சி அடைந்தன. கிராமங்களில் கதை கூறுவதும், கேட்பதும் இனிய கலையாகப் போற்றப்படுகிறது. இத்தன்மையே சிறுகதை இலக்கியத்திற்குத் தோற்றுவாயாக அமைந்த செய்தியை இதன் வழி அறியமுடிகிறது.

**சிறுகதையின் இலக்கணம்**

சிறுகதை என்பது மேலை நாட்டு உரைநடை இலக்கியங்களுல் ஒன்றாகும். இந்தியாவில் ஐரோப்பியர்கள் வருகைக்குப் பின் நாட்டில் ஏற்பட்ட மாற்றம் போல இலக்கியங்களிலும் மாற்றம் ஏற்பட்டது. கவிதை, சிறுகதை, புதினம், நாடகம் என அனைத்து இலக்கிய வடிவங்களிலும் ஒரு புதுவித மாற்றம் ஏற்பட்டது எனினும் உலக மொழிகள் அனைத்திலும் சிறுகதை என்ற கூறு பழமையானது.

"பொருளோடு புணரா பொய்யாமொழி
பொருளோடு புணர்ந்த நகைமொழி"[3]

என்று சிறுகதையின் இலக்கணத்தையும், பாடுபொருளையும் குறிப்பிடுவதாக தொல்காப்பியம் அமைந்துள்ளது.

சிறுகதையின் இலக்கணம் குறித்து, மேனாட்டு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர். ஹெச்.ஜி.வெல்ஸ் "சிறுகதை

என்பது ஒருமுறை உட்கார்ந்து வாசிக்கக் கூடிய ஒரு தனி நிகழ்ச்சியாக இருக்க வேண்டும்"[4] என்று கூறுகிறார்.

"ஒரு சிறுகதை என்பது எளிமை சார்ந்த ஒரு படைப்பாகவும் எடுத்த எடுப்பிலேயே பயில்வோரின் கவனத்தை ஈர்த்துப் பிடிப்பதாகவும் நெகிழ்ச்சியின்றி இயங்கி உச்சநிலை முடியும் வரை வாசகரின் முழுக்கவனத்தையும் ஒருமுகப்படுத்தி மேன்மேலும் ஆழமாக ஊன்றச் செய்வதாகவும் இருத்தல் வேண்டும்"[5] என்கிறார்.

எல்லெரி செட்ஜ்விக் என்னும் அறிஞர் சிறுகதையை ஒரு குதிரைப் பந்தயத்திற்கு ஒப்பிட்டுள்ளார். "ஒரு சிறுகதையில் தொடக்கமும் முடிவும் சுவைமிக்கதாய் அமைதல் வேண்டும். தொடக்கம் முடிவு இரண்டினுள் தொடக்கமே அரிய ஒன்று என்றும் தொடக்கத்திலேயே ஒரு சிறுகதையின் கலைத்திறன் விளங்குகிறது"[6] என்றும் கூறியுள்ளார்.

"சிறந்த சிறுகதைகளில் உரிப்பொருள் வெளிப்படையாகக் கூறப்படாமல் படிப்பவரே உய்த்துணரும் வண்ணம் அமைந்திருக்கும்"[7] பலவகையான அணுகுமுறைகளுக்கும் இடம் தந்து நிற்றல், ஒவ்வொரு முறையில் நின்று அணுகுந்தோறும் புதிய புதிய விளக்கங்களைத் தருதல் இவை இரண்டுமே ஒரு நல்ல சிறுகதையின் பண்புகள் என்பர்."[8]

"சிறுகதைக்குக் குறிப்பிட்ட அமைப்பு, தொடக்கம், உச்சநிலை போன்றவை இருக்க வேண்டும். அதற்கும் கதைக்கூறு இருத்தல் இன்றியமையாதது. கதைக்கரு மனித வாழ்க்கையின் ஒரு சிறு பகுதியாக இருத்தல் வேண்டும். அது உருப்பெருக் காட்டியைப் போல வாழ்க்கை முழுவதையும் பெரிதாக்கிக் காட்ட வேண்டும்."[9]

“சிறுகதை வாழ்வின் பல சூட்சுமங்களையும் எழுத்தில் நிர்மாணித்துக் காண்பிக்கிறது. சிறுகதை வாழ்வின் உண்மையை நேர் நின்று நோக்குகின்றது.”[10]

“ஒரு மனிதர் அல்லது ஓர் உணர்வு அல்லது ஒரு நிகழ்ச்சி அல்லது ஒரு சிக்கல் தான் சிறுகதையில் தலைதூக்கி நிற்க வேண்டும். நாவலின் சுருக்கம் சிறுகதை ஆகாது.”[11]

மேற்கூறிய அறிஞர்களின் கூற்றுக்களிலிருந்து சிறுகதை வாழ்வியலோடு தொடர்புடையதாக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. தனிமனிதனின் ஏதேனும் ஒரு உணர்வையோ, வாழ்க்கை நிகழ்ச்சியையோ அறிவுத் தெளிவோடு, கலை உணர்ச்சி மிளிர நயமுடன் உரைத்தல் வேண்டும் என்பது உணரப்படுகிறது. மொத்தத்தில் படிப்போரின் மனத்தில் ஏற்படுத்தும் நம்பகத்தன்மையை ஒட்டியே ஒரு சிறுகதையின் வெற்றி அமைகிறது எனலாம்.

1978 இல் சுப்ரபாரதிமணியனின் முதல் சிறுகதை திருப்பூரிலிருந்து வந்த ‘யுக விழிப்பு’ இலக்கிய இதழில் வெளிவந்தது. பின்பு 1984 இல் ‘நாலு பேரும் பதினைந்து கதைகளும்’ என்னும் நூல் வெளிவந்தது.

இக்கதையில் சுற்றுச்சூழல் பிரச்சனைகளும் மனித உரிமை பிரச்சனைகளும் அவர்களுள் எப்படி வடிவெடுத்திருக்கின்றன என்பதை விரிவாக விளக்கியுள்ளார்.

வாழ்க்கையையும் இலக்கியத்தையும் ஒருசேர கவனிக்கிற காரணத்தால் சுப்ரபாரதிமணியன் எழுத்துகள் காலத்தின் கட்டாயமாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

இவரது சிறுகதைகள் விரிவான தளத்தில் வாழ்க்கையின் மீதும், பிரச்சனைகள் மீதும் கொண்ட உறவுகளை நன்கு சித்தரித்துள்ளன. அவற்றைச் சமூகம் மீதான எதிர்வினையாகவும், விமர்சனமாகவும் குறிப்பிடலாம். பிரச்சனைகள் பற்றிப் பேசுவதற்காக எழுதப்பட்டவையாக அல்லாமல் வாழ்க்கையை விவரிக்கும்போது கதை மாந்தர்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் நன்கு தெளிவு படுத்தப்பட்டுள்ளன.

அவை இன்றைய காலத்தின் தொழில் நகரம் சார்ந்த விஸ்வரூபங்களாக பரிமாணம் பெற்று விடுகின்றன. இவர் நகரம் சார்ந்த விளிம்புநிலை, பாட்டாளி வர்க்கத்தினர் பற்றி விரிவாகவும் அதிகபட்சமான சிறுகதைகளாகவும் தமிழ்ச் சூழலில் எழுதியுள்ளார். மேலும் சுற்றுச்சூழல் குறித்து மிகுதியான சிறுகதைகளைப் படைத்துள்ளார்.

இவரின் 'சாயத்திரை' புதினம் வெளிவந்து பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. அந்நாவலில் சுப்ரபாரதிமணியன் எழுப்பியச் சுற்றுச்சூழல் பற்றிய கேள்விகள் இன்னும் தீர்வில்லாதவையாக உள்ளன. திருப்பூர் சாயப்பட்டறை பற்றிய அவலங்களை மறந்துவிட முடியாத அளவுக்கு ஒரு படிமமாகவே சாயத்திரையில் படைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

பயணங்கள் பற்றிய இவரின் கட்டுரைகள், நூல்கள் தவிர்த்து வெளிநாட்டு அனுபவங்களை மையமாகக் கொண்ட இவரின் கணிசமான கதைகளும் குறிப்பிடத்தக்கவை.

இவரின் 'கனவு' இலக்கிய இதழ் வெள்ளிவிழா கண்டுள்ளது. கடந்த 25 ஆண்டுகளில் 'கனவு' இதழில் இவர் பல புதிய படைப்பாளிகளுக்கு இடம் அமைத்துக் கொடுத்திருக்கிறார். கனவில் வெளிவந்த இவரின்

சிறுகதைகள் மிகக் குறைவு. ஆனால் அவை ஏதோவொரு வகையில் முக்கியத்துவம் வாய்ந்தவை.

அயலகத்தமிழர்களின் வாழ்க்கையைப் பற்றி இவரின் பயண அனுபவக் கட்டுரைகளைத் தவிர அதில் இடம்பெற்றுள்ள சிறுகதைகளும் குறிப்பிடத்தக்கவை. செகந்திராபாத் சூழலில் அந்நியப்பட்ட தமிழர்களைப் போலவே இவர்களும் அன்னியப்பட்டே வாழ்க்கையைக் கடத்துவதாகச் சித்தரிக்கிறார்.

பெண் பாத்திரங்களின் உருவாக்கத்தில் அவர் கொள்ளும் அக்கறையும், தேர்ச்சியும் வியப்பூட்டுகிறது. கஷ்ட அனுபவங்களுக்குள் இவர் தன்னை தோய்த்து கொண்டதுதான் இதற்கு காரணம் என்று தோன்றுகிறது. செகந்திராபாத்தோ, திருப்பூரோ அவர் வெவ்வேறு களங்களுக்குள்ளும், இடங்களுக்குள்ளும் பயணிக்கிறார். போராடும் மனிதர்களின் ஆன்மாவை தொட்டுக்கொண்டே போகிறார்.

சொல்முறை உத்தி சாதாரண உரையாடல்களாலும், இறுக்கமான வாக்கிய அமைப்புக்களாலும் நிறைந்திருக்கிறது. சமூக மனிதர்களின் உளவியலுக்கேற்ப அவை நகர்ந்து செல்கின்றன. வெவ்வேறு மையங்களுக்குச் செல்வதாகத் தோன்றினாலும் அவை மனிதம், அன்பு, சமூக விமர்சனம், என்ற வகையிலேயே அடைக்கலமாகின்றன.

எழுத்தாளன் அவனின் அரசியலை வெளிப்படுத்தாமல் எங்கும் ஒளிந்து கொள்ள இயலாது. தன் அரசியல் முகத்தை சுப்ரபாரதிமணியன் என்றைக்கும் ஒளித்து வைத்துக் கொண்டதில்லை. மாற்று அரசியல் குறித்த அக்கறையை அவை சுட்டுகின்றன.

எந்த முன் தீர்மானமும் இன்றி கதைகள் நகரும் போது கொடுக்கப்படும் சாட்டையின் வீச்சை சுலபமாகக் கண்டு கொள்ளலாம். மனிதத் தத்துவத்திற்கு எதிராக நடக்கும் எல்லா விதமானக் கொடூரங்களையும் அதீதச் செயல்களையும் அடையாளம் கண்டு அடையாளப்படுத்துகிறார்.

விளிம்புநிலை மக்களில் பொறுக்கிகள், எளிய பெண்கள், விலைமாதர்கள், ஆதிவாசிகள், சுற்றுச்சூழல்வாதிகள் என்று பலரை அடையாளம் கண்டுகொள்ளலாம். மையங்களைத் தகர்த்தெறிந்த விளிம்புநிலை மனிதர்கள் இவரின் கதைகளில் தென்படுகிறார்கள். குழந்தைகளின் அபூர்வ உலகத்தைச் சரியாக மனதில் பிடித்துக் கொள்ளலாம். சாயம் அப்பிய முகங்களோடு அலையும் மனிதர்களும் தனியார் மையத்தைச் சகித்துக் கொள்ள முடியாமல் திணறுபவர்களும் பெரும் நகரத்தில் கைவிடப்பட்டவர்களும் நகரம் உருவாக்கும் உதிரித் தொழிலாளர்களும் கூட இக்கதைகளில் அழுத்தமான இடம் பெற்றிருக்கிறார்கள். நம்முடன் உறவாட இவ்வளவு மனிதர்கள் இருக்கிறார்களா என்ற எண்ணமும் நம்பிக்கையும் இவரின் கதாபாத்திரங்ளோடு பயணிக்கும் போது தென்படுகிறது. வாழ்க்கை எவ்வளவு வகையான மனிதர்களை நம்மோடு இணைத்துக் கொண்டு செல்கிறது என்ற விசித்திரமான பண்பை உணரமுடிகிறது.

ஒரு முதிய மனிதனின் அனுபவத்தோடும், இளைஞனின் துடிப்போடும் உள்ள இக்கதைகளை படிக்கும் எந்த வாசகனும் தமிழ்ச் சிறுகதை வாசகப்பரப்பின் விரிவை அடையாளம் கண்டு கொள்வான் என்பதில் ஐயமில்லை.

**சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகள்**

நீண்ட கனவும் சீற்றமும் கொண்டவை சுப்ரபாரதிமணியன் கதைகள் சுப்ரபாரதிமணியனின் பிரசுரமான சிறுகதைகள் எண்ணிக்கையில் 250 ஆகும். அவை 15 தொகுப்புகளையுடைய கதைகளாகவும் உள்ளன. இரண்டு ஆண்டுகளுக்கு முன் இவரின் தேர்ந்தெடுக்கப்பட்ட 15 கதைகளின் தொகுப்பு 'விமோசனம்' எனும் தலைப்பில் காவ்யா வெளியிடப்பட்டுள்ளது.

எழுத்தாளன் தான் கண்ட வாழ்க்கை பற்றிய ஒரு கண்ணோட்டத்தை, படிப்பவன் பெறுவதற்குக் கவிதை, கதை, நாடகம் என இலக்கிய வடிவங்களைத் தேர்ந்தெடுக்கிறான். திருப்பூரை பின்னணியாகக் கொண்டு ஹைதராபாத்தில் வாழ்ந்த சுப்ரபாரதிமணியன் தனது எட்டு வருட அனுபவங்களைக் கொண்டு புதினங்கள், சிறுகதைகள், கட்டுரைகள், பயண நூல்கள், குறும்படங்கள் எனச் சமுதாயச் சிந்தனைகளைக் மக்களை எளிதில் சென்றடையும் வகையில் தாம் வாழும் பகுதியின் மண்ணையும் மக்களையும் அவர்களது சிந்தனைகளையும் படைத்துக்காட்டியுள்ளார்.

மக்களின் சிக்கல்களையும் வாழ்வியலையும் இலக்கியமாக்கியுள்ளார். இவ்வகையில் சுப்ரபாரதிமணியனின் படைப்பில் அமைந்த அகப்புறப் போராட்டங்களைப் பற்றிய ஆய்வு ஆதலின் முதற்கண் ஆசிரியர் அறிமுகம், ஆரம்பகால வாழ்வு, படைப்புகள், பெற்ற பரிசுகள், மொழிபெயர்ப்புகள், போன்ற இவரின் இலக்கியப் பணிகள் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

**ஆரம்பகால வாழ்வு**

*சுப்ரபாரதிமணியனின் இயற்பெயர் சுப்ரமணியன். 1955 இல் திருப்பூர் அருகே உள்ள 'செகடந்தாழி' என்ற கிராமத்தில் பிறந்தார். எம்.எஸ்ஸி கணிதம் பயின்ற இவர் தொலை தொடர்புத் துறையில் பொறியாளராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். இவருக்கு சுபமுகி என்ற மகள் இருக்கிறார். இவரும் கவிதைகளை எழுதிவருகிறார். சமுதாயத்தில் நடக்கும் அநீதிகளைப் பார்த்து அதனை தம் படைப்புகளில் பதிவு செய்து வருகிறார்.*

**ஆசிரியர்களின் படைப்புகள்**

*சுப்ரபாரதிமணியன் சிறுகதை, இலக்கியம் தவிர பல்வேறு பரிமாணங்களில் இவரது பங்களிப்பு அமைந்துள்ளது. இதுவரை எட்டு நாவல்கள், 15 சிறுகதைத் தொகுப்புகள், இரண்டு குறுநாவல் தொகுதிகள், பயணநூல், நாடகம், சிறுவர் நூல், கட்டுரைத் தொகுதிகள் என 35 நூல்கள் வெளிவந்துள்ளன.*

- *மற்றும் சிலர்*
- *சுடுமணல்*
- *பிணங்களின் முகங்கள்*
- *சாயத்திரை*
- *தேனீர் இடைவேளை*
- *சமையலறை கலயங்கள்*
- *ஓடும் நதி*

*ஆகியவை இவரது சிறந்த நாவல்கள் ஆகும். 'சாயத்திரை' சிறந்த நாவலுக்கான தமிழக அரசு விருது பெற்றது. அது ஆங்கிலம், ஹிந்தி, மலையாளம், கன்னடம், வங்காள மொழிகளில் மொழிபெயர்க்கப்*

பட்டுள்ளது. பிணங்களின் முகங்கள், தேனீர் இடைவேளை, ஆங்கிலத்திலும், சுடுமணல் மலையாளத்திலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன.

**பெற்ற பரிசுகள்**

- ♦ சிறந்த சிறுகதைக்கான இந்திய குடியரசுத்தலைவர் வழங்கிய 'கதா' பரிசு (1993).
- ♦ 'சாயத்திரை' நாவலுக்கான தமிழக அரசின் சிறந்த நாவலுக்கான பரிசு.
- ♦ குமுதம் ஏர் இந்தியா நடத்திய இலக்கியப் போட்டியில் சிறந்த குறுநாவலுக்கான பரிசு.
- ♦ 'பிணங்களின் முகங்கள்' என்னும் நாவல் கோவை கஸ்தூரி சீனிவாசன் அறக்கட்டளையின் 2002ம் ஆண்டின் சிறந்த நாவலுக்கான பரிசு.
- ♦ தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம், கலை இலக்கியப் பெருமன்றம் வழங்கிய பரிசுகள்.
- ♦ திருப்பூர் தமிழ்ச்சங்கம் வழங்கிய பரிசு.

ஆகியவை குறிப்பிடத்தக்கவை. மேற்கூறிய பரிசுகள் இவரது படைப்புகளுக்குக் கிடைத்த சிறந்த அங்கீகாரமாகக் குறிப்பிடலாம்.

**மொழிபெயர்ப்புப் பணிகள்**

- ♦ சாயத்திரை நாவல் ஆங்கிலத்திலும், இந்தியிலும் மொழி பெயர்ப்பாகியுள்ளது.
- ♦ படைப்புகள் பல பல்கலைக்கழகங்களில் பாட நூல்களாகி உள்ளன. மலையாளம், தெலுங்கு, இந்தி, ஆங்கிலம் மற்றும் ஹங்கேரியன் மொழிகளில் சாயத்திரை புதினம் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன.

**இதழியல் பணிகள்**

'கனவு' என்ற இலக்கிய இதழை 35 ஆண்டுகளாக நடத்தி வருகிறார். படைப்புப் பணியோடு இதழியல் பணியிலும் தீவிர ஈடுபாடு கொண்டுள்ளார்.

**குறும்படங்கள்**

சுப்ரபாரதிமணியன் படைப்புப்பணி, இதழியல் பணியோடு குறும்படங்கள் எடுப்பதிலும் தீவிர நாட்டம் கொண்டுள்ளார். மூன்று குறும்படங்களைத் தயாரித்து வெளியிட்டுள்ளார்.

- திருவிழா
- சோற்றுப் பொட்டலம்
- சுமங்கலி

போன்ற குறும்படங்களையும் எடுத்துள்ளார்.

**சாகித்திய அகாடமி உறுப்பினர் பணி**

சுப்ரபாரதிமணியன் இலக்கியப் பணியை அங்கீகரிக்கும் விதமாக இந்திய அரசு இவரை சாகித்திய அகாடமி ஆலோசனைக் குழு உறுப்பினராக 2008 முதல் 2012 வரை நியமனம் செய்தது.

**சுப்ரபாரதிமணியனின் படைப்பாக்கத்திறன்**

சுப்ரபாரதிமணியன் கதை சொல்லும் முறையிலும், கதையைத் தொடங்கி முடிக்கும் திறனிலும், கதைமாந்தர் படைப்பிலும், தலைப்பிடுவதிலும், கதையின் உட்பொருளை இலைமறையாக உணர்த்தும் நுட்பத்திலும், முந்தைய தலைமுறை படைப்பாளிகளிலும் இவர் முற்றிலும் வேறுபடுவதை இச்சிறுகதைத் தொகுப்பில் காணலாம். அத்தகைய படைப்பாக்கத்திறனை பின்வருவனவற்றின் மூலம் அறியலாம்.

- சிறுகதையின் தொடக்கம்
- சிறுகதையின் உள்ளடக்கம்
- சிறுகதையின் கரு
- சிறுகதையின் கூற்றுமுறை
- சிறுகதையின் தலைப்பு
- பாத்திரப்படைப்பு
- வருணனைத்திறன்
- உரையாடல் திறன்
- சிறுகதையின் முடிவு

**சிறுகதையின் உள்ளடக்கம்**

இவரின் ஆரம்ப காலக் கதைகள் வெகு யதார்த்தமான இவரின் குடும்பம் சார்ந்தவர்கள் பற்றிய சித்தரிப்புகளாய் அமைந்திருந்தன. 'அப்பா' என்ற ஆளுமையும், கிராமச்சூழலும், சேவற்கட்டு வாழ்க்கையும் குறிப்பிடத்தக்கன. செகந்திராபாத் வாழ்க்கையைக் கதையாக்கியுள்ளார்.

ஒரு தமிழன் அந்நிய மொழி பேசும் மாநிலத்தில் வாழும் போது அவன் அந்நியமாக்கப்படுகிற சூழலும், மதக்கலவரங்களால் மனிதர்கள் சிதறுண்டு கிடப்பது அந்த பிரதேசத்திற்குரிய விசேச மனிதர்களும் இடம் பெறுகின்றனர்

சுப்ரபாரதிமணியன் அவரின் தொழில் காரணமாக பல்வேறு ஊர்களில் இருந்தபோது அப்பகுதி மக்களின் வாழ்க்கையும், கலாச்சார நிகழ்வுகளும் அவரைப் பாதித்திருப்பதைப் பதிவு செய்துள்ளார்.

**சிறுகதையின் கரு**

அன்பின் அடித்தளத்தில் எழுதப்பட்டுள்ள சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகளில் கலாச்சாரம், சாதி மறுப்பு, திருமணச்சடங்கு, உறவுகளின் எதிர்பார்ப்பு, குடும்பத்தில் மனைவியின் பங்கு, வறுமை, அகதிகள், அதிகார வர்க்கத்தினர், பெண் உளவியல் சார்ந்தவை ஆகிய தலைப்பில் இவரது கதைகளின் கதைக்கரு அமைகிறது. பெரும்பான்மையான கதைகளில் வறுமை மனிதனை எவ்வாறெல்லாம் பாதிக்கிறது என்பதைக் காட்டுகிறார். எடுத்துக்காட்டாக 'எஞ்சியது' என்னும் சிறுகதையில் வறுமையின் காரணமாக பெண்படும் பாட்டைப் பதிவு செய்துள்ளார். பெண்களின் மீதான பாலியல் வன்முறை பற்றியும் பல சிறுகதைகளில் இடம் பெற்றுள்ளன. சுப்ரபாரதிமணியன் தம் கதைகளுக்கு சமூக அவலங்களைக் கருவாக அமைத்துப் படைத்துள்ள செய்தி இதன் மூலம் புலனாகிறது.

**சிறுகதைகளின் கூற்றுமுறை**

இவரின் கதைகள் சிறுகதைக்கான இலக்கணத்தைப் பின்பற்றியே அமைந்துள்ளன. படிக்கும் போது கதைகள் ஆர்வத்தைத் தூண்டுவதாகவே அமைந்துள்ளன. இவரின் கதைகளில் கதையாசிரியரே கதை கூறுவது போன்று பெரும்பான்மையான கதைகளில் அமைந்துள்ளன. நூற்றிஐம்பத்திநான்கு கதைகளில் பெரும்பான்மையான கதைகள் ஆசிரியரே கதை கூறுவதாகத்தான் அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக 'சில வேறு தினங்கள்' என்னும் சிறுகதையில் "அம்மாவிடம் இருந்து நான் பயத்தை சுவீகரித்துக் கொண்டேன் அம்மா அப்பாவைக் கண்டு கொள்கிற பயம்."

“அப்பாவின் கோபம் எனக்காக வந்திருந்தது” “சேவல்கட்டில் என்னைப் பயப்படவைத்த விஷயம்” இதுபோன்ற கூற்றமைப்பிலேயே கதைகள் உள்ளன.கதை சொல்லும் முறையில் சிறந்த வெளிப்படைக் கூற்றுமுறைப்படி விளங்குகிறது. இக்கூற்றுமுறை ஆசிரியரின் எண்ணங்களை வாசகர்களிடம் எளிதில் சென்றடைய உதவுகிறது. இதனை ஆசிரியரின் சிறந்த உத்தியாகவும் குறிப்பிடலாம்.

**சிறுகதைகளின் தலைப்பு**

பெரும்பாலான எழுத்தாளர்கள் தங்களின் சிறுகதைகளுக்குத் தலைப்புகளாக அக்கதையில் வரும் பாத்திரங்களின் பெயராக இடுவர். சிலர் உரையாடலைத் தலைப்பாகவும், எண்களைத் தலைப்பாகவும், வடமொழிப் பெயர்களைத் தலைப்பாகவும் இடுவர். சுப்ரபாரதிமணியன் கதைகளில் கதையில் வரும் உள்ளடக்கத்தையே கதையின் தலைப்புகளாக வைத்துள்ளார். சான்றாக!

- வெடி- வன்முறை பற்றிய கதை
- தீட்டு- சாதி என்ற தீண்டாமையைப் பற்றிய கதை
- கூடவரும் அவர்கள்- வறுமையால் வரும் உறவுகள்
- காலம்- கால மாற்றத்தால் அழியும் பழமைகள்
- நவீனம்- நாகரிகத்தால் பாதிக்கப்படும் நெசவாளிகள்
- மாறுதம்- வறுமையால் வாழ்க்கைப்பாதை மாறுதல்
- ரேகைக்காரன்- சோசியம் சொல்லும் பொய்யானவர்கள்

இவை போன்ற தலைப்புகளே பெரும்பான்மையான கதைகளில் அமைந்துள்ளன.

## சிறுகதைகளின் தொடக்கம்

சிறுகதையின் தொடக்கம் அக்கதையின் போக்கினை வாசகருக்கு உணர்த்துவதாகவும் விறுவிறுப்பினை ஊட்டுவதாகவும் அமைய வேண்டும். ஒரு கதையின் தொடக்கமும் முடிவும் ஒரு குதிரைப் பந்தயம் போல் வேகமாக இருக்க வேண்டும் என்பர். இவருடைய 'கண்ணாமூச்சிகளும் முகமூடிகளும்' எனும் சிறுகதையில் ஒரு குடும்பத்தின் காலை நிகழ்வை குறிப்பிடும்போது "பாலைக் குடித்து வயிற்றை நிரப்பிக்கொண்டோம். இனி ஸ்கூல் போகிற வரை எனக்கும் துளசிக்கும் எந்தப் பிரச்சனையும் இருக்காது. வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொள்ளலாம். எதிர்த் தோட்டத்தை ரசிக்கலாம். சோளத்தட்டைகளின் சலசலப்பைக் கேட்கலாம். ஸ்கூல் போவதற்குள் அம்மாவும் அப்பாவும் சண்டை போடாமல் இருந்தால்" என்பதைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

## சிறுகதைகளின் முடிவு

சிறுகதையின் தொடக்கம் ஆர்வத்தைத் தூண்டிப் படிக்கத் தூண்டுவது போலவே சிறுகதைகளின் முடிவுகளும் வாசகர்களைச் சிந்திக்கவும், ஏற்றுக்கொள்ள வைப்பதாகவும் இருக்க வேண்டும். இதற்குச் சான்றாக "சமையலின் ருசியை உணரத்தொடங்கினேன் கைக்கென்று தனி ருசி உண்டுதான் பரபரப்பற்ற வாழ்க்கையில் தான் இந்த ருசிகளையும் பிரத்யேகமாக உணர முடிகிறது. இருக்கட்டும்,.. இருக்கட்டும்... நான் நெசவுத் தொழிலிருந்து வேற தொழிலுக்கு மார்றப்போ பிரயோஜனப்படாத இந்த குக்கர்... தலைமுறை தலைமுறையாக நெசவுக் குழிக்குள்ளியா இருக்கப் போறம். அண்ணன் சொல்லிக் கொண்டிருந்தார். பரணின் மீதிருந்த குக்கர் அட்டைப்

பெட்டியை பார்த்துக் கொண்டிருந்தேன்" இத்தகைய முறையில் தான் இவரின் சிறுகதைகள் நிறைவு பெறுகின்றன.

**வருணனைத்திறன்**

சுப்ரபாரதிமணியன் கதை சொல்லும் முறையில் கதைக்குப் பொருத்தமாக இடையிடையே வருணணைகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. மனித மனத்தின் இயல்பான சித்திரங்களாக உள்ளன. அவை ஒரு தனிச்சிறப்பாக இருப்பதை உணரலாம். உரைநடை வருணணைகள் கவிதை போல் சுவைதரும்படி இருப்பதையும் இங்கு குறிப்பிடலாம். எடுத்துக்காட்டாக 'மூன்றாவது வரம்' என்னும் சிறுகதையில் சொர்க்கம் என்பது எப்படி இருக்கும் என்பதைப் பின்வருமாறு வருணிக்கிறார்.

"கந்தர்வர்கள் யாழ் இசைக்க அரம்பையர்களின் நடனம், ஐராவதத்தில் தேவேந்திரன் முப்பத்து முக்கோடி தேவர்கள், ரிஷிகள் சூழ பவனி வருகிறான்."

"தேவதுந்திபியின் முழக்கம் யானையின் பிளிறலைப்போல"

"காதிலே தேனா பாயுமாயா உன் சுனை?"

"எங்க மொழி பாயுதே?"

"அட மகாலெட்சுமி மாதிரியான எம்பொன்னு"

"அவளின் கால்கள் தண்ணீரில் நெடுநேரம் மூழ்க வைத்து எடுத்த தொழுநோயாளியின் கை, கால்களை போல அவை வெளுத்து தென்படும்"

இது போன்ற வர்ணணைகள் கதைகளில் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. கதை சொல்லும் முறையில் ஒரு பாத்திரத்தின் இயல்பான தன்மையைச் சித்திரிக்கும்போது வருணனை சிறப்பிடம் பெறுவதை இதன்வழி அறியமுடிகிறது.

**உரையாடல் திறன்**

*சிறுகதைகள் நாடகம் போலவே 'உரையாடல்' உயிரோட்டமாக அமைவது சிறப்பாகும். பாத்திரங்களின் பண்பை உணர்த்த உரையாடல்கள் ஒரு வழித்தடமாக அமைகின்றன. சான்றாக 'நரகத்திலிருந்து நகரத்திற்கு' என்ற சிறுகதையில்,*

*"அவங்க ரெண்டு பேரையும் எழுப்பனும் தூங்கட்டுமே"*

*"நேரம் தெரியாமே எதுக்கு எழுப்பனும் தூங்கட்டுமே"*

*"எந்திர்ரா..."*

*"எதுக்குப்பா?"*

*"வேற ஊர் போலாம்"*

*"எந்த ஊர்.."*

*"செகந்திராபாத்"*

*"தமிழ்நாட்டுக்கு போயிர்லாமா..."*

*"அங்க வேண்டா... செகந்ராபாத் போயிர்வோம்"*

*"ஒரே ஊர்தானே அதுவும் ... இந்த ஊர்லே மறுகோடி அது..." என்று பாத்திரங்களின் உரையாடலை அமைத்துள்ளார்.*

*சிறுகதையின் வெற்றிக்குப் பல்வேறு உத்திகள் காரணமாக அமைகின்றன. எனினும் கதைப் போக்கிற்கு, கதையின் வெளியீட்டுத்திறன் ஒரே அமைப்பில் இல்லாமல் ஒரே கதையில் ஒன்றுக்கும் மேற்பட்ட திறன்கள் அமைவதால் இச் சிறுகதைகள் தனித்துவம் பெற்றுத் திகழ்கின்றன. எனவே உரையாடல் திறன் பாத்திரங்களின் பண்பை அறிய உதவுவதை அறியமுடிகிறது.*

**கதைமாந்தர் பெயர்கள்**

இவரின் சிறுகதைகளில் வரும் பாத்திரங்களின் பெயர்கள் இயல்பான, பழக்கப்பட்ட பெயர்களாக வருவதை அறியமுடிகிறது. எடுத்துக்காட்டாக இராமகிருஷ்ணன், சுகந்தி, சுதாகர், பத்மா, இரவீந்திரன், தர்மராஜ், ஜெயமதி, ஈஸ்வரி, பொன்னுசாமி, தங்கவேல், கிருஷ்ணவேணி, ஸ்டெல்லா, அருள், சாந்தி, விஜயா, போன்ற இயல்பான கதைமாந்தர்கள் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் உலா வருகின்றனர்.

**முடிவுரை**

- கதை கூறுவதும் கதை கேட்பதும் தமிழகத்தின் பாரம்பரியக் கலையாகும். சிறுகதை இலக்கியத்திற்கு இத்தன்மையே தோற்றுவாயாக அமைந்தது. வாய்மொழியாகக்கூறப்பட்ட நிகழ்வுகள் பாத்திரங்களின் துணையுடன் கற்பனையாகக் கதைகளாக உருமாற்றம் அடைந்த செய்தி புலனாகிறது.

- சிறுகதைகள் மக்களின் வாழ்வியலோடு தொடர்புடையது. தனிமனிதனின் உணர்வுகளையோ, வாழ்வியல் சமபவங்களோ அறிவுத் தெளிவோடு கலை உணர்ச்சி மிளிர நயமுடன் உரைத்தலே சிறுகதைகளின் பண்புகளாக அறியமுடிகிறது.

- சுப்ரபாரதிமணியன் விரிவான தளத்தில் வாழ்க்கையின் மீதும் பிரச்சனைகள் மீதும் கொண்ட உறவுகளை விளக்கியதோடு விளிம்புநிலை மக்கள், பாட்டாளி மக்கள் மற்றும் சுற்றுச்சூழல் குறித்தும் அழகுறச் சித்தரித்துள்ளார்.

- சிறுகதைகள், நாவல்கள், நாடகம், பயணக்கட்டுரைகள், குறும்படங்கள், இலக்கிய இதழ், மொழிபெயர்ப்புப்பணிகள், திருப்பூர் முதல் ஹைதராபாத் வரை ஆசிரியர் கண்ட சமுதாய வெளிப்பாடுகள் என பன்முகம் கொண்டவராக சுப்ரபாரதிமணியன் விளங்குவதை இவ்வியலில் காண முடிகிறது.

- ஆசிரியரின் தொடக்கக்காலச் சிறுகதைகள் கிராமியச் சூழலை மையமிட்டு அமைந்தன. ஆந்திராவுக்கு இடம் பெயர்ந்தபோது தமிழர் அந்நிய மொழி பேசும் மாநிலத்தில் வசிக்கும்போது சந்திக்கின்ற சிக்கல்கள், மதக் கலவரங்களால் ஏற்படும் விளைவுகள் போன்றவை இவரது கதைகளின் உள்ளடக்கமாக மாறியுள்ளதை உணரமுடிகிறது.

- சுப்ரபாரதி மணியனின் கதைகளில் இடம்பெறும் கதைக்கரு, பண்பாட்டுச் சீரழிவு, சாதிமறுப்பு, குடும்ப அமைப்புகள், வறுமை, பெண்களின் மீதான பாலியல் வன்முறை, போன்ற சமூக அவலங்களைப் படைத்துள்ள செய்தி இதன் மூலம் புலனாகிறது.

- சிறுகதைகளின் உத்திகளுல் பாத்திரங்களின் உரையாடல் சிறப்பிடம் பெறுகின்றன. இவரது கதைகளில் பெறும்பாலும் கதாசிரியரே கதையைக் கூறி நகர்த்தும் போக்கைப் பின்பற்றியுள்ளமை தெரிய வருகிறது.

- இவரது சிறுகதைகளின் தலைப்பு தனித்துவமிக்கதாக அமைந்துள்ளன. சமூகத்திற்கு இவர் கூறவரும் சிக்கல்களுக்கான தீர்வையே தலைப்பிடுவது குறிப்பிடத்தக்கது.

- சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளின் தொடக்கம், முடிவு ஆகியவை ஆர்வத்தைத் தூண்டுவதாகவும் வாசகர்களைச் சிந்திக்க வைப்பதாகவும் சிறுகதை கூறும் செய்திகளை ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் அமைந்துள்ளன.

- கதை சொல்லும் முறையில் ஒரு பாத்திரத்தின் இயல்பான தன்மையை சித்தரிக்கும் போது ஆசிரியர் வருணணை, உரையாடல் போன்றவற்றை மிகுதியாகப் பின்பற்றியுள்ளார். இதன் மூலம் பாத்திரங்களின் பண்பை நன்கறியமுடிகிறது.

- சுப்ரபாரதிமணியன் இலக்கிய உலகில் பன்முகம் கொண்டவராக விளங்குகிறார். சிறுகதை எழுத்துப் பணியோடு, நாவல், பயணக் கட்டுரைகள், குறும்படங்கள் தயாரிப்பு, நாடகம், சிறுவர் இலக்கியம், மொழிபெயர்ப்புப் பணிகள், இதழியல் பணிகள் என தமிழ் இலக்கிய வரலாற்றில் தனி முத்திரையைப் படைத்துள்ளார்.

**சான்றெண் விளக்கம்**

*1. வாணிகிருஷ்ணமூர்த்தி, கோவி மணிசேகரன் கதைகள் ஒரு திறனாய்வு, ப.25*

*2. சென்னைத் தமிழ்பேரகராதி, சென்னைப் பல்கலைக்கழகம், தொகுதி 1-3, ப.190*

*3. இராமலிங்கம் (உரை), தொல்காப்பியம் பொருளாதாரம், ப.475*

*4. வாணிகிருஷ்ணமூர்த்தி, மு.நு., ப.25*

*5. மேலது, ப.24*

*6. மேலது, ப.25*

*7. மேலது, ப.26*

*8. மேலது, ப.26*

*9. மேலது, ப.27*

*10. புதுமைப்பித்தன், புதுமைப்பித்தன் கட்டுரைகள், ப.32*

*11. க.நா.சுப்ரமணியன், விமர்சனக்கலை, ப.126.*

இயல் – 2

# கதை மாந்தர்களின் உணர்வுப் போராட்டங்கள்

## பொருளடக்கம்

# கதை மாந்தர்களின் உணர்வுப் போராட்டங்கள்

## முன்னுரை

*சிறுகதைகளின் வெற்றிக்குப் பல சிறப்பம்சங்கள் இருந்தாலும், குறிப்பிடத் தகுந்த இடத்தைப் பெற்றுத் திகழ்வது கதைமாந்தர்களாகும். கதை நிகழ்ச்சியைப் படைக்கும் படைப்பாசிரியர் கதைக்கேற்ற பாத்திரங்களை உருவாக்குகிறார். கதைமாந்தர்களின் உணர்வுப் போராட்டங்கள் சமூக வெளிப்பாட்டை அடையாளம் காண உதவுகின்றன. பாத்திரங்கள் அனுபவத்தின் வெளிப்பாடாக அமைந்தாலும் அவர்கள் உணர்வுப் பூர்வமாக, இயல்பாகப் படைக்கும்போது சிறுகதை வெற்றியடைகிறது. வாசகன் படைப்போடு பயணம் செய்ய உதவுகிறது. அன்பு, வறுமை, பசி போன்ற சமூக அவலங்களை உணர்ச்சிக் கொந்தளிப்பாகவே ஆசிரியர் படைத்துள்ளார். இலக்கியங்களில் பாத்திரங்களின் உணர்வுப் போராட்டங்கள் சங்க காலம் தொட்டு காணமுடிகிறது. அக இலக்கியங்கள் யாவும் உணர்வுப் போராட்டங்களின் குறியீடாகும். தலைவன், தலைவி, தோழி போன்றோரின் சித்தரிப்பு உணர்வுப் போராட்டங்களின் தலைமை மாந்தர்களாகக் குறிப்பிடலாம். இதே அமைப்பில் சிறுகதைகளின் கதைமாந்தர்கள் படைக்கப் பட்டுள்ளனர். கதையின் வளர்ச்சிக்கு அப்பாத்திரங்கள் உற்ற துணையாகின்றன. சங்க இலக்கியங்களில் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறார்' என்ற நிலையில் மாந்தர்களின் பெயர்கள் பொதுப் பெயர்களாகவே அமைந்துள்ளன.*

*அந்நிலையிலிருந்து மாறி ஒவ்வொரு காலக்கட்டத்திலும் வளர்ச்சி பெற்ற நிலையில் இலக்கியங்களில் மக்கட்பெயர்களைக் காணமுடிகிறது. கதையின் பொருளுக்கு உருவம் கொடுப்பதும்*

உயிரோட்டம் தருவதும் கதைமாந்தர்களாகும். இங்கு சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் கதைமாந்தர்களின் பாத்திரப்படைப்பு மற்றும் அவர்களின் உணர்வுப் போராட்டங்கள் குறித்து விரிவாக ஆராயப்படுகிறது.

இவ்வியல் தலைமை மாந்தர்கள், துணைமை மாந்தர்கள், எதிர்மறைப் பண்புடைய மாந்தர்கள், சார்பு மாந்தர்கள் என்ற நான்கு பிரிவாக வகைப்படுத்தி ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. மேலும் சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகள் அமைந்துள்ள களங்களையும் இவ்வியலில் விரிவாக ஆராயப்படுகிறது.

**பாத்திரப்படைப்பு அறிமுகம்**

சிறுகதைகளில் இடம்பெறும் கதைமாந்தர்கள் முக்கியத்துவம் வாய்ந்தவர்கள். கதைப்பொருளை மறந்தாலும் அக்கதையில் இடம் பெறும் பாத்திரங்கள் என்றும் மனதில் நிலைத்து நிற்பர். அப்பாத்திரப் படைப்பு குறித்து பல்வேறு அறிஞர்களின் கருத்துக்கள் இங்கு நோக்கதக்கதாகும்.

“பாத்திரங்கள் நம்ப வைப்பவையாக அமைய வேண்டும். அப் பாத்திரங்கள் உண்மை மாந்தர்கள் பெற்றிருப்பது போலவே கோபம், பொறாமை, பிற மனித உணர்ச்சிகள் ஆகியவற்றைப் பெற்றவைகளாகப் படைக்கப்பட்டால் தான் நம்பக் கூடியவைகளாக அமையும்”[1] என்று கரு.முத்தையா அவர்கள் குறிப்பிடுவார். இக்கருத்துக்கள் சிறுகதைகளின் பாத்திரப்படைப்பினை விளக்குவனவாக அமைகின்றன.

“சிறுகதைகள் என்பது கதையாசிரியர்களின் தனிப்பட்ட அனுபவத்தின் வெளிப்பாடாகும். ஒவ்வொரு கதையாசிரியரும் கதை

என்ற மாளிகையின் ஒரு ஜன்னலின் வழியே உலகைக் காண்கிறான். அவன் காணும் கோணத்தில் பாத்திரங்கள் படைக்கப்படுகின்றன"[2] என்கிறார் ஹென்றி ஜேம்ஸ், சிறுகதை ஆசிரியர்கள் தங்களின் அனுபவத்தின் மூலமாக உண்மைக் கதையை இலக்கியமாக்குகின்றனர் என்பதும் புலனாகிறது.

"கதைக்குப் பொருளையும், சிறப்பையும், உயிரோட்டத்தையும் கொடுக்கிற ஒன்றுதான் பாத்திரம் என்று மேரன் எல்வுடு விளக்கம் தருகிறார்."[3]

"ஒரு முன் மாதிரியின்றித் தன்னால் பாத்திரங்களை முழுக் கற்பனையாகப் படைக்க இயலாது"[4] என்கிறார் துர்க்கனேவ். இவ்வறிஞர்களின் கருத்து மூலம் முழுமையான கற்பனைப் பாத்திரத்தைப் படைக்க முடியாது. நிகழ்ச்சிகளைக் கண்டும் கேட்டும், அனுபவப்பட்டும்தான் உணர்வுப் பூர்வமாகப் படைக்க முடியும் என்பதை அறிய முடிகிறது.

பாத்திரங்கள் பல வகைகளாகப் பிரித்துப் படைக்கப்படுகின்றன. என்பதை ஜோனதன்ரா பின் "பாத்திரப்படைப்பு ஒரே மாதிரி அமைவதில்லை. சில பாத்திரங்களைத் தம் அனுபவத்தினால் உணர்ந்து கொள்கிறோம். சில பாத்திரங்களில் நாம் ஐக்கியமாகிறோம். சில பாத்திரம் அண்டை வீட்டுக்காரர்களாகத் தோற்றமளிக்கின்றனர்"[5] என்று கூறுகிறார்.

"மனிதனைவிடவும் சிறந்த கருத்துக்கள் எதுவும் இருப்பதாக எனக்கு தெரியவில்லை. மனிதனே எல்லாவற்றையும் உருவாக்குபவனாக எனக்குத் தோன்றுகின்றான். புனிதம் வாய்ந்த ஒன்று உள்ளதென்றால்

தன்னைப் பற்றிய நிறைவின்மையான மனிதப் பண்பு என்பேன். மனிதன் தற்போதைய நிலையினின்றும் மேல்நோக்கி உயரவேண்டும் என்று கருதுவதையே புனிதமானதென்பேன்" என்ற மாக்ஸிம் கார்க்கியின் கூற்று இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

தாக்கரே என்பார் "நான் பாத்திரங்களைக் கட்டுப்படுத்துவதில்லை. நான் அவர்களுக்கு கட்டுப்பட்டு விடுகிறேன். அவர்கள் விரும்பிய வண்ணம் என்னை அழைத்துச் செல்கின்றனர்"[7] என்று பாத்திரத்தின் இன்றியமையாமையைச் சுட்டிக்காட்டுகிறார்.

"பாத்திரங்களின் இயக்கத்தில் கதைப்பின்னல் உருவாகிறது. கதைப்பின்னலினால் பாத்திரங்கள் உருவாகின்றன"[8] இவை இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்தவையாக அமைகின்றன. என்கிறார் அல்போன்சா.

"கதை நிகழ்ச்சியின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் முடிவிற்கும் இன்றியமையாது அமைந்தது. மாந்தர் மட்டுமே கதையில் கதை மாந்தராக இடம்பெறுதல் வேண்டும். கதை மாந்தரின் எண்ணிக்கை எண்ணிலாது அமையின் கதை மட்டுமே புரியும்"[9] என்கிறார் பிரபாகரி.

"மனித மனத்தில் ஆழத்தில் புதைந்து கிடக்கும் பண்பாடுகளை எடுத்து விளக்கும் பாத்திரங்களாக இருத்தல் வேண்டும்"[10] என்கிறார் ஞானசம்பந்தன்.

கதைக் கூறுகளுள் முதன்மையானதும் சிறப்பு மிக்கதும் நெஞ்சைக் கொள்ளை கொள்ளுவதும் பாத்திரப்படைப்பே (Characterzation) ஆகும். என்பதை மேற்கூறிய அறிஞர்களின் கூற்றுக்கள் வாயிலாக பெறப்படுகிறது.

"ஒரு கதைக்கு கரு (Plot) இன்றியமையாததே ஆயின் அது கதையின் எலும்பே (Sketetor) ஆகும். கருவினும் சிறப்பு வாய்ந்ததும்

ஒன்று உயிரையும் தரவல்ல ஒன்று உண்டு, அது பாத்திரம் ஆகும்”[11] என்று கதையின் உயிரோட்டம் பாத்திரத்திலேயே அடங்கியுள்ளது என்கிறார் மோகன். கதையின் வெற்றிக்கும், சிறப்பிற்கும் பாத்திரப் படைப்பு முக்கியமானதாக அமையும் என்பதை, “ஒரு கதைப் பகுதியினால் எந்த அளவிற்குச் சிறக்கிறதோ, அதே அளவிற்குப் பாத்திரப்படைப்பினாலும் சிறக்க முடியும்”[12] என்ற கருத்தால் அறிய முடிகிறது.

பாத்திரப்படைப்புக் குறித்துத் திறனாய்வாளர் ந.பிச்சமுத்து அவர்கள். “கதைத்திட்டத்தை எலும்புக்கூடு என்றால் அக்கூட்டுக்கு உயிரையும் பொருளையும், பொலிவையும் தருவது பாத்திரமே ஆகும்”[13] என்கிறார்.

“அசாதரணம் என்பது நிகழ்ச்சிகளில் இருக்க வேண்டுமேயன்றி பாத்திரங்களில் இருக்கக் கூடாது”[14] என்கிறார் ஜகன்நாதன்.

எனவே சிறுகதைகளுக்கு உயிரோட்டம் அளிப்பதாகப் பாத்திரங்களே திகழ்கின்றன என்பதை சுப்ரபாரதிமணியன் கதைகளில் உலாவரும் உயிருள்ள கதைமாந்தர்கள் வழியாக ஆசிரியர் மெய்பித்துக் காட்டியுள்ளார்.

**கதைமாந்தர்களின் வகைகள்**

சிறுகதைகளில் இடம்பெறும் கதாபாத்திரங்கள் அதன் தன்மை, இயல்புக்கேற்ப மாறுபடுகின்றன. சிறுகதையின் வளர்ச்சியில் கதைக்கருவிற்கு உறுதுணையாக நிற்கும் பாத்திரங்களை முதன்மைப் பாத்திரமாகக் (Primary Characters) குறிப்பிடுவர். முதன்மைப் பாத்திரத்திற்கு உறுதுணையாக நிற்கும் பிறபாத்திரங்களைத்

துணைப்பாத்திரமாக (Secondary Characters) குறிப்பிடுவர். இவ்வியலில் சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகளை,

1. முதன்மைக் கதைமாந்தர்கள்
2. துணைக் கதை மாந்தர்கள்
3. எதிர்மறைப் பண்புடைய கதை மாந்தர்கள்
4. சார்புக் கதை மாந்தர்கள்

என நான்கு வகையாகப் பாகுபாடு செய்யப்பட்டு தக்க சான்றுகளோடு ஆராயப்பட்டு மெய்ம்மைகள் பெறப்பட்டுள்ளன.

**முதன்மைக் கதைமாந்தர்கள்**

கதையின் முதன்மைப் பாத்திரம் என்பது மையக்கருத்தை விளக்குபவனாகவும் கதை முழுவதும் பங்கு பெறுபவர்களாகவும் திகழ்வர். அப்பாத்திரங்கள் நல்ல பண்புகளைக் கொண்டவர்களாகவும் உணர்ச்சிகளை வெளிப்படுத்துபவர்களாகவும் திகழ்வர். ஆண், பெண் என இருபாலரும் முதன்மைப் பாத்திரத்தில் இடம்பெறலாம். இப்பாத்திரத்தைச் சுற்றியே கதையானது பின்னப் பட்டிருக்கும்.

“தலைமைப் பாத்திரம் என்பது கதையில் பெரும் செயல்களைச் செய்பவராகவும் இருப்பர்”[15] என்றும்

“தலைமை மாந்தர்கள் குறிக்கோள் மாந்தர்களாகவும் படைக்கலாம் நடப்பியல் மாந்தர்களாகவும் அமையலாம்”[16] என்றும்

சிறுகதைகளில் சாதாரண மனிதனின் வாழ்க்கையை உள்ளது உள்ளவாரே காட்டுவது. எனவே “வாழ்க்கையில் ஒருவர் சந்திக்கும் மனிதர்களைப் போன்றே நன்மை, தீமை, அழகு, அழகின்மை, நிறை,

குறைகளோடு தலைமைப் பாத்திரங்கள் படைக்கப்படலாம்”[17] என்று கோ.வே. கீதா குறிப்பிடுகிறார்.

தலைமை மாந்தர் குறித்து டபிள்யு ஜெ.ஹார்வி என்பவர் “தலைமை மாந்தர்கள் ஒரு வகையில் கதையின் விளைபயன் - முடிவுப் பொருள் எனலாம். அவர்களுக்காகவே கதை எழுதப்படுகிறது. அவர்களை அவர்களின் குணாதிசயங்களை வெளிப்படுத்துவதே கதை”[18] என்கிறார்.

நடமாடும் பாத்திரங்களைப் படைப்பதில் ஆற்றல் வாய்ந்த எழுத்தாளர் ஜெயகாந்தன் அவர்கள்

“பாத்திரப்படைப்பு என்பது வெறும் பெயர் சூட்டுவதிலோ, அங்க வருணனை நடத்தி விடுவதாலோ அமைவது அல்ல. மனம், அறிவு, சிந்தனை, குணஇயல்பும் சூழ்நிலைகளின் போது வெளிப்படும் உணர்ச்சிகள் இவற்றையெல்லாம் கூர்ந்து அறிந்து அனுபவமாக வெளியிடுவதைக் காட்டுவதாகும்.”[19] என்று கூறுகிறார்.

எனவே பாத்திரமானது நடைமுறை மாந்தர்களைப் போல் உயிரோட்டமான ஒன்றாகும். முதன்மைப் பாத்திரத்தைப்பற்றி மா.இராமலிங்கம் அவர்கள், “தான் வாழும் சமூகத்துடன் ஏதோ ஒரு வகையில் முரண்படுகிறவன் எவனோ அவனே கதையின் நாயகனாக இருக்க வேண்டும்”[20] என்பார்.

இவ்வாறாகத் தலைமைப் பாத்திரங்கள் குறித்துப் பலவிதமான கருத்துக்கள் கூறப்படுகின்றன. தலைமைப் பாத்திரங்கள் செயல்படக்கூடிய தன்மையை வைத்தும், அவர்களின் பண்பு நலன்கள் இலட்சியம், கொள்கைகளை வைத்தும், உணர்வுகளை வைத்தும் வாசகர்களின் மனதில் இடம் பிடிக்க வைத்துவிடுகின்றனர் படைப்பாளர்கள்.

முதன்மைக் கதாபாத்திரங்கள் அவர்களின் பண்பு நலனுக்கேற்ப சுப்ரபாரதிமணியனின் ஆய்வுக்குரிய சிறுகதைகளை கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப் பட்டுள்ளன.

1) சாதியைத் தகர்த்தெரிபவர்கள்

1. சுரேஷ் - அடையாளம்
2. நாராயணமூர்த்தி - தீட்டு
3. சுகந்தி - எதிர்
4. அருள் - நரகத்திலிருந்து நகரத்திற்கு
5. நாகப்பன் - எதிர்ப்பதியம்
6. சண்முகம் - தீயாப்பறவைகள்

2) சவால்களை எதிர்கொள்ளும் பெண்கள்

1. செல்லம்மா - நிழல் உறவு
2. சாந்தா - வெளிச்சமற்றவை
3. ஜோதி - இடம்
4. கௌசி- புகை
5. சந்திரா - அவளும் அவளும்
6. திரிவேணி - துணை

3. அடித்தட்டு மக்களின் வாழ்வில் அக்கறை கொண்டவர்கள்

1. துளசி - கண்ணாமூச்சுகளும் முகமூடிகளும்
2. கதாசிரியர் - எஞ்சியது
3. கதாசிரியர் - கூடவரும் அவர்கள்
4. அம்மையார் - வரமும் சாபமும்
5. குருநாத் - இடம்பிடித்தவர்கள்
6. செல்வராஜ் - பார்வை
7. கதாசிரியர் - ஒரு தற்காலிக உறவு

*4.வறுமையை எதிர்த்து வாழ்கையோடு போராடுபவர்கள்*

*1. சுப்பையா - வெடி*

*2. சிவக்கண்ணன்- எல்லோருக்குமான நேசம்*

*3. பொன்னுச்சாமி - வதை*

*4. எல்லையா - எல்லையா*

*5. துரைராஜ் - நிலை*

*6. சொக்கநாதன் - அரேபியக் கிராமம்*

*7. சிவராம் - வசந்த விஹார்*

*5. நெசவுத் தொழிலை நம்பி வாழ்பவர்கள்*

*1. சிவக்குமார் - மாறுதடம்*

*2. கதாசிரியர் - ரேகைக்காரன்*

*3.துரைசாமி - கசிவு*

} *வாழ்க்கைத்தடம் மாறியவர்கள்*

*4. கதாசிரியர் - நசுக்கம்*

*5. கதாசிரியர் - நவீனம்*

*6. சின்னசாமி - சிதறல்*

} *நெசவுத் தொழிலை நம்பி வாழ்பவர்கள்*

*ஆகிய ஐந்து பிரிவுகளில் தலைமைக் கதைமாந்தர்கள் வகைப் படுத்தப்பட்டு அவர்களின் பண்பு நலன்கள் ஆராயப்படுகின்றன.*

**சாதியைத் தகர்த்தெரிந்தவர்கள்**

*ஒருவன் செயலைக் கொண்டுதான் அவன் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று பகுத்து அறிய வேண்டுமே அன்றி. அவன் பிறந்த குடியை வைத்து அல்ல. பிறப்பால் ஏற்றத்தாழ்வு காண்பது பேதமையாகும். இதனையே இலக்கியங்களும் சுட்டுகின்றன.*

*"சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்*
*நீதிவழுவா நெறிமுறையின் - மேதினியில்*

இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்

பட்டாங்கில் உள்ளபடி”

என்ற நீதிநூற்கேற்பவும்,

“சாதிகள் இல்லையடி பாப்பா - குலத்

தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்”

என்ற பாரதியின் கூற்று போன்றவை சாதியற்ற சமூகத்தை வலியுறுத்துகின்றன. சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் சுரேஷ், நாராயணமூர்த்தி, சுகந்தி, அருள், நாகப்பன், சண்முகம், ஆகிய பாத்திரங்கள் சாதியமைப்பிற்கு எதிரானவர்களாகச் சித்தரிக்கப் பட்டுள்ளனர். இப்பாத்திரங்களின் பணிகளை இங்கு விரிவாகக் காணலாம்.

**சுரேஷ்**

சுரேஷ் ‘அடையாளம்’ என்ற சிறுகதையின் முக்கியப் பாத்திரம் ஆகும். சுரேஷின் திருமணத்திற்கு சீனிவாசனும் அவனது மனைவியும் வந்துள்ளனர். மாப்பிள்ளையின் தோழனாக, அவரின் சாதியைச் சேர்ந்தவர்கள் தான் வர வேண்டும். இது அவர்களின் ஊர் வழக்கம், இதற்குமாறாக சுரேஷ் வேறு சாதியாக இருந்தாலும் தன் குடும்பத்தில் உள்ள நபர்கள் சுரேஷிடம் சொல்கின்றனர். மாமா குடைபிடித்து மாப்பிள்ளை தோழனாக வரட்டும் என்று, சுரேஷ் தன் நண்பன் சீனிவாசனே வரட்டும் என்று வற்புறுத்துகின்றான்.

சீனிவாசனும் இவர்கள் ஐயர் குடும்பமாக இருப்பதால் தயங்கி பின் நண்பனின் வார்த்தைக்கு மதிப்பளித்து மேடையில் தோழனாக அமர்கிறான்.

இக்கதையில் காலங்காலமாக பின்பற்றிவரும் சாதிய உணர்வைத் தகர்த்தெரிபவனாக சுரேஷ் என்ற கதைமாந்தர் முக்கியத்துவம் பெறுகிறார்.

"அந்த ஜாதிய உறவில் மாப்பிள்ளையின் மச்சான் உறவினர் தோழனாக இருப்பார். சீனுவே இருக்கட்டுமே, சீனு நீயே குடை பிடிடா...... சீனுவின் வார்த்தைகளை மறுக்கிறதில் அவனின் முதல் விருப்பமே அடிபட்டுப் போகும் என்ற வருத்தத்தை தவிர்க்கிற பொருட்டு ஒரு நிமிஷம் சீனிவாசன் யோசித்தான். 'எங்க மச்சான் வேண்டாம்' என்ற அவனின் மறுப்பு குறித்து எவரும் பெரிதாக எடுத்துக்கொள்ளாத மாதிரி எந்தப் பேச்சும் கிளம்பவில்லை. குடை பழசாகத்தான் இருந்தது. மெல்லிய ஓட்டைகள் பயமுளித்தன. காக்கைகள் எச்சமிட்ட கறை மாதிரி திட்டுத் திட்டாய் அழுக்குகள் படிந்திருந்தன, எல்லோரையும் ஆசீர்வதிக்க தனக்கு அதிகாரம் கிடைத்து விட்ட சந்தோசத்தில் குடை விரித்தான்."[21]

இதிலிருந்து சுரேஷின் சாதிமறுப்பு உண்வு நமக்கு புலனாகிறது. சாதியச் சடங்குகளை மாற்றுகிற பாத்திரமாக அமைந்துள்ளதை உணரமுடிகிறது.

**நாராயணமூர்த்தி**

நாராயணமூர்த்தி 'தீட்டு' என்ற சிறுகதையில் வரும் முக்கிய பாத்திரம் ஆகும். நாராயணமூர்த்தி சிறுவன் பெற்றோர்களால் தாழ்ந்த சாதி பையன்களிடம் பேசினால் தீட்டு, அவர்களை வீட்டிற்கு அழைத்து வந்தால் தீட்டு என்று சொல்லிக் கொடுக்கின்றனர்.

“தேவன் மகன் சண்முகம் என் வகுப்புத் தோழன் வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் போகிறபோது எனக்காகக் காத்திருந்து என்னுடன் சேர்ந்து கொண்டு வருவான். மெல்ல அவன் பஜனைப் பாடல்களைப் பாடி வருவதென்பது அவனுடன் நான் செல்ல விரும்பிய காரணங்களில் ஒன்று. வீட்டிற்குப் பலமுறை வந்திருக்கிறான். ஆனால் வெளித்திண்ணையோடு நின்று விடுவான். அவனை உள்ளே அழைத்த ஓரிரு முறை பெரிய அண்ணன் சப்தம் போட்டிருக்கிறார். அம்மாதான் தனியாக அழைத்து போய் ஒரு நாள் சொன்னாள் ‘அவங்கெல்லா கன்னடம் பேசுறவங்களா இருந்தாலும் நம்ம சாமிய கும்பிட்டாலும், நமக்குள்ள தாழ்ந்தவங்க, தீட்டு காரியம் பண்றதுக்கு, கோயில் காரியம், உபகாரத்துக்குன்னு இருப்பாங்க... காரணமெல்லா கேக்கக் கூடாது... பரம்பரைப் பழக்கம்”[22]

இச்சிறுகதையில் பள்ளி செல்லும் மாணவர்களிடையே தீண்டாமையைப் பின்பற்றுவதாக அமைந்துள்ளது. சாதியை எதிர்க்கும் பாத்திரமாக நாராயணமூர்த்தி படைக்கப்பட்டுள்ளார். மனிதத்தைப் போதிக்க வேண்டிய பெற்றோர் பரம்பரைப் பழக்கத்தை போதிப்பதை ஆசிரியர் சாடியுள்ளார்.

**சுகந்தி**

சுகந்தி ‘எதிர்’ என்ற சிறுகதையில் வரும் கதைமாந்தர் மதசார்பற்ற பெண், பிரசவத்திற்கு ஒரு கிறிஸ்துவ மருத்துவமனைக்குச் சென்றுள்ளனர். அங்குள்ள வழக்கப்படி அவர் கையில் ஒரு மாலையும் மெழுகுவர்த்தியும் கொடுத்தனர். சுகந்தியின் கணவர் தயங்கி நிற்கவே,

சுகந்தி நேராகச் சென்று மாலையைப் போட்டு மெழுகுவர்த்தியை ஏற்றுகிறாள். தெய்வம் எல்லாம் ஒன்றுதான் வழிபடும் முறைதான் வேறு என்ற அவளின் மதசார்பற்ற குணம் இங்கு உணரத்தக்கது.

“பூமாலையும், மெழுகுவர்த்தியையும் கைகளிலிருந்து உருவிக் கொண்டாள். சுகந்தி விறுவிறுவென்று போய் கன்னிமேரிக்கு மாலை போட்டாள். மெழுகுவர்த்திகளைப் பற்ற வைத்து பீடத்தில் நிற்க வைத்தாள்.”[23]

கணவன் தான் ஒரு இந்துவாக இருந்து மேரிசிலைக்கு மாலை போட யோசித்த போது சுகந்தி இறைவனில் பேதமில்லை என்று செய்தது அவளின் மதசார்பற்ற பண்பைச் சுட்டுகிறது.

‘தீட்டு’ சிறுகதையில் சமத்துவத்தை வலியுருத்திய ஆசிரியர் ‘எதிர்’ சிறுகதையில் சமய நல்லிணக்கத்தைச் சுகந்தியின் வாயிலாக உணர்த்தியுள்ளார்.

**சவால்களை எதிர்கொள்ளும் பெண்கள்**

இன்றைய சமூக அமைப்பு சவால்கள் நிறைந்தது. ஆண்களை விட இச்சமூகத்தில் பெண்கள் எதிர்கொள்ளும் சவால்கள் மிகுதியானவை. வீட்டிலும், அலுவலகத்திலும், பொதுஇடங்களிலும், பெண்கள் பல்வேறு இன்னல்களைச் சந்திக்கின்றனர். சவால்கள் நிறைந்த இச்சமூகத்தில் பெண்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகளை சுப்ரபாரதிமணியன் தனது சிறுகதைகளில் செல்லம்மா, சாந்தா, ஜோதி, கௌசி, சந்திரா, திரிவேணி போன்ற பாத்திரங்களின் வாயிலாக நன்கு படைத்துள்ளார்.

“மங்கையராக பிறப்பதற்கே - நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா”

என்ற கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை பெண்மையின் சிறப்பைப் போற்றுகிறார். இன்றைய சூழலில் பெண்கள் இன்று இல்லாத துறையே

இல்லை. எனலாம். ஆசிரியரின் படைப்பில் வரும் இப்பெண்கள் எதிர்கொள்ளும் சவால்களை இப்பகுதி உணர்த்துகிறது.

**செல்லம்மா**

செல்லம்மா 'நிழல் உறவு' என்னும் சிறுகதையில் வரும் மாந்தர் கதையின் முக்கிய பாத்திரமாகும். செல்லம்மா கணவனை இழந்து தன் இரு குழந்தைகளையும் வளர்க்கப்படும்பாடு பெரிது. வறுமையில் இருந்தாலும் தன் குழந்தைகளை மோர் விற்றுக் காப்பாற்றுகிறாள்.

தனித்து வாழ்ந்து வறுமையிலும் ஒழுக்கத்துடன் வாழ்கிறாள். தன் மகளான செண்பகத்தையும், மகனையும் வளர்க்கிறார். கடைசிக் காலத்தில் பிள்ளைகள் வழிமாறிப் போகும் போது தன் தாயை கவனிக்க மறக்கின்றனர். ஆயினும் இக்கதையில் வாழ்க்கை எதிர்த்துப் போராடும் செல்லம்மாவின் பண்பு போற்றத்தக்கதாக அமைகிறது.

"தலைமுறையா மோர்க் கூடையா தலையிலே வச்சு பழகிப் போச்சு.... இவ மாட்டேங்கிறா.... ஆம்பெள இல்லாத வூட்டுலே சம்பாத்தியத்திற்கு என்ன பண்ண முடியும்"[24] கணவணை இழந்தவள் செல்லம்மா ஆயினும் மோர் விற்று தன் குடும்பச் சுமையைச் சுமக்கும் தன் பிள்ளைகளை வளர்க்க வாழ்க்கையோடு போராடும் பெண்ணாக செல்லம்மா படைக்கப்பட்டிருப்பதை அறியலாம்.

**சாந்தா**

சாந்தா 'வெளிச்சமற்றவை' என்ற சிறுகதையில் குறிப்பிடத்தக்க கதைமாந்தர். திருமணமாகி கணவன் இரண்டு மாதம் கூட அவளுடன் சேர்ந்து வாழவில்லை. வேலைக்குச் செல்வதாக கூறிச் சென்றவன் வரவே இல்லை. இந்நிலையில் சாந்தாவின் தந்தையும் இறந்து போகிறார். தன்

அக்கா திருமணமாகி அதே ஊரில் இருக்கிறார். சாந்தாவிற்கு இருக்கும் ஒரே ஆறுதல் அவள் அக்கா மட்டுமே, அவளிடம் பணம் தேவைப்படும் போது கேட்கிறாள். அக்கா தன் குடும்பத்திற்குத் தெரியாமல் கொடுக்கிறாள். பின்பு அதுவும் இல்லாத போது தனக்கு ஆறுதல் இன்றித் தவிக்கிறாள்.

"அந்தக் காம்பவுண்ட் குடும்பங்களின் தினப்படி காலை எட்டரை மணிக்குக் கிளம்பினால் பள்ளிக்கு அழைத்துப் போக வேண்டிய குழந்தைகளின் வீடு வீடாய்ப் படியேறுவாள். குழந்தைகளை அனுப்புகிற அவசரக் கதியில் சிலர் சோறு ஊட்டி விட்டுக் கொண்டிருப்பார்கள். கை ஓஞ்சு போச்சு, நீதா கொழந்தைக்கு வூட்டிவிடேன். குழந்தை உண்டபின் அவளுக்கு ஒரு கவளம் கிடைக்கும்."[25] உறவுகளின் ஆதரவு இன்மையால், சாப்பாட்டிற்குக் கூட கஷ்டப்படும் சாந்தாவின் சூழல் இங்கு உணர்த்தப்படுகிறது.

**ஜோதி**

ஜோதி 'இடம்' என்ற சிறுகதையில் தங்கராஜின் மனைவியாக வருபவள். கணவனின் கொடுமைக்கு ஆளாகும் பெண் ஜோதி. தங்கராஜின் குடும்பம் பெரிது. அப்பா, அம்மா, குழந்தைகள் என அனைவரும் இருப்பர். தனித்தனி அறைகள் கிடையாது என்பதால் அனைவரும் ஒரே அறையில் தூங்குவர். இரவு தூங்கும் போது தங்கராஜ் கூப்பிட்டும் ஜோதி வராததால் அவனுக்குக் கோபம் வந்து ஜோதியைத் தலைமுடியைப் பிடித்து அடித்து விடுகிறான்.

பெற்றோர் எழுந்ததும் யாரோ ஆண்களின் பெயரைச் சொல்லி புலம்புகிறாள் எனச் சொல்கிறான். அமைதியாக இருக்கிறாள் ஜோதி.

“ஏதேதோ ஆம்பளைப் பேரைத் தூக்கத்திலெ சொல்றா.... தன் குரலைத் தீர்க்கமாக்கிக் கொண்டவன்போல் தங்கராஜ் அவன் சொன்ன வார்த்தைகளை மதித்து நம்பின அவன் அம்மாவும், அப்பாவும் திகிலுடன் அவனைப் பார்த்தார்கள் அவன் தன் கேவலமான மனப்பிசகு கணத்தில் வார்த்தைகளையும், செயலையும் நினைத்து தலையில் அடித்துக் கொண்டது பற்றி அவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை தான்”[26] இவ்வகையில் ஜோதி தனது கணவனின் இழிவான செயலைத் தாங்கிக் கொண்டு அவனோடு வாழ்க்கை நடத்தும் ஒரு போராட்ட பாத்திரமாக இருப்பதை இக்கதைவழி அறியப்படுகிறது.

**கௌசி**

கௌசி ‘புகை’ என்னும் சிறுகதையில் வரும் ஏழைப் பெண். தொழிற்சாலை ஒன்றில் கௌசி வேலைக்குச் சென்ற புதிது. தர்மராஜ் என்பவன் அங்கு முதலாளி கௌசியிடம் தவறாக நடக்க முயலும் போது கோபத்தில் கௌசி தர்மராஜை அறைந்து விடுகிறாள். அதிலிருந்து கௌசியைப் பழிவாங்க நினைக்கிறான் ஒவ்வொரு நாளும் போராட்டம் நிறைந்ததாக உள்ளது.

ஏழ்மையில் இருக்கும் பெண்கள் முதலாளி வர்க்கத்திடம் வன்முறைகளுக்கு ஆளாக்கப் படுவதை கௌசி என்ற கதாபாத்திரத்தின் வழி ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

**அடித்தட்டு மக்களின் வாழ்வில் அக்கறை கொண்டவர்கள்**

தங்கள் வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்ய முடியாமல் இருப்பவர்களே அடித்தட்டு மக்கள். இம்மக்களின் வாழ்வில் அக்கறை

கொண்டவர்களும் இருக்கின்றனர் என்பதற்கு சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகளே சான்றாகும்.

சமூகத்தில் மறுமலர்ச்சி ஏற்பட வேண்டுமென பாடுபடும்போது பல எதிர்ப்புகள் கிளம்பும். அவற்றை எல்லாம் மீறித்தான் பொது வாழ்வில் ஈடுபட வேண்டும். உயிரிழப்புகள் கூட நிகழலாம். பல விதங்களிலும் சிக்கல்கள் உருவாகலாம். இதிலிருந்தெல்லாம் மீறி சமுதாயத்தில் நல்ல செயல்கள் நடைபெறக் காரணமானவர்களை அச்சமூகமே போற்றும்.

இவரின் சிறுகதைகளில் அடித்தட்டு மக்களின் வாழ்வில் அக்கறை கொண்ட பாத்திரங்களைக் காணமுடிகிறது.

**துளசி**

'கண்ணாமூச்சுகளும், முகமூடிகளும்' என்ற சிறுகதையில் ஒரு முக்கிய மாந்தராக வருபவர் துளசி. தான் சிறு வயதில் பார்த்த சோலைகளும் வயல்களும் சில ஆண்டுகள் கடந்து வந்து பார்த்த போது அவையாவும் கட்டிடங்களாக இருந்தது. விளைநிலங்கள் எல்லாம் அழிந்து இப்படி கட்டிடங்களாக உள்ளதே என எண்ணி இதே நிலை நீடித்தால் என்னவாகும் என துளசி யோசித்துப் பார்க்கிறாள்.

மனிதர்கள் எவ்வளவுதான் பணம் சம்பாதித்தாலும், மனிதன் பசித்தால் சாப்பிடுவது உணவுதான் என நினைத்து விவசாய மக்களை நினைத்து பார்க்கிறார் ஆசிரியர்.

இவ்வகையில் விவசாய மக்களின் வாழ்வில் அக்கறை கொண்டவராக துளசி இக்கதையில் சித்தரிக்கப்படுகிறாள்.

**கதையாசிரியர்- ரவிந்திரன்**

'எஞ்சியது' என்னும் சிறுகதையில் வரும் ரவீந்திரனின் நண்பனாக கதையாசிரியர் கதை கூறுகிறார். அதில் அவர் சந்திக்கும் ஒரு ஏழ்மைக்குடும்பம் சுஷ்மாவின் குடும்பம்.

பழைய மரச்சாமான்கள் விற்கும் வீடு அது. அங்கு வறுமையின் காரணமாக திருமணம் ஆகாமல் இருந்த பெண்ணைப் பார்த்து நெகிழ்கிறார் ஆசிரியர். "தான் திருமணம் ஆகாமல் இருப்பின் அவளை மணந்து கொண்டு அந்த பெரியவரின் கவலையை தன்னால் போக்கியிருக்க முடியும், ஆனால் அது இப்போது முடியாது."[27] என தன்னால் உதவி செய்ய முடியவில்லையே என வேதனைப்படும் மனிதாபிமானமுள்ள ஒரு மனிதனின் வேதனை இங்கு கதாசிரியரின் வழி அறியமுடிகிறது.

**கதாசிரியர் ஜெயராம்**

'கூடவரும் அவர்கள்' என்ற சிறுகதையில் ஜெயராம் என்பவர் மூன்று தங்கைகளுடன் உடன் பிறந்தவர். தங்கைகளுக்கு திருமணம் செய்துவைக்க முடியவில்லை காரணம் மூன்று தங்கைகளுமே இயல்பாக இல்லை. கோரமான முகம் உடையவர்கள். ஜெயராம் மட்டும் திருமணம் செய்து கொள்கிறான்.

ஜெயராமின் நண்பராக கதாசிரியர் படைக்கப்பட்டுள்ளார். கதாசிரியர் ஜெயராம் ஏன் இப்படி செய்தான். தன் தங்கைகளுக்கு நல்ல வாழ்க்கையை ஏற்படுத்திக் கொடுத்துவிட்டு திருமணம் செய்திருக்கலாம் என நினைக்கிறார். ஆனால் அவரிடம் கேட்டதில்லை ஒரு முறை ஜெயராம் வீட்டிற்கு சென்றிருந்தபோதுதான் அவர்களைப் பார்த்தார்.

முகங்களை மூடிக்கொண்டு இருந்தனர். அவர்களின் கோரமான முகம் தான் காரணம் என்று அவருக்குப் புரிந்தது. கதாசிரியர் ஜெயராமின் நிலையை யோசித்துப் பார்க்கிறார்.

மனதில் அவர்களுக்காக நினைத்து பரிதாபப்படுகிறார். பெற்றோர் இன்றி இருக்கும் அப்பெண்களுக்கு இனி பெற்றோரும் ஜெயராம் தான் என்று தன் மனதிற்கு ஆறுதல் சொல்லும் ஒரு மனிதராகக் கதாசிரியர் வெளிப்படுகிறார்.

**அம்மையார்**

'வரமும் சாபமும்' என்ற சிறுகதையில் இரயில் பயணத்தில் 'வசந்தி' என்ற பெண்ணிற்கு உதவி செய்தவர் அம்மையார். வசந்தி தனியாக இரயிலில் வரும்போது கலவரம் காரணமாக ஒரு இடத்தில் இரயில் நின்றது. பயணிகள் இறங்கிச் செல்கின்றனர். வசந்தி என்ன செய்வது என்று அறியாமல் இருந்தபோது அந்த அம்மையார் என்னுடன் வாம்மா என் வீடு அருகில்தான் என்று வசந்தியை அழைத்துச் செல்கிறார். வசந்தியின் கவலையைப் போக்கி அடுத்த நாள் அனுப்பி வைக்கிறார். வசந்தியின் கண்களுக்கு அந்த அம்மையார் செய்த உதவியால் தாயைப் போன்று தெரிந்தார்.

முன்பின் தெரியாத ஒருவருக்கு உதவி செய்வது எல்லோராலும் இயலாது. இவ்வகையில் அந்த அம்மையாரின் குணநலம் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

**வறுமையை எதிர்த்து வாழ்க்கையோடு போராடுபவர்கள்**

அடிப்படைத் தேவைகளான உண்ண உணவு, உடுத்த உடை, இருக்க வீடற்று வாழும் மக்களை அரசு வறுமைக்கோட்டிற்கு கீழே

வாழும் மக்கள் என குறிப்பிடுகிறது. அடிப்படைத்தேவைகளைக்கூட நிறைவு செய்ய முடியாத மக்கள் இன்னும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றனர்.

இம்மக்களை சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதைகளில் இனம் காட்டுகிறார். அவர்களுக்கு எப்படி வாழக்கையே போராட்டக் களமாகிறது என்பதை இவரது கதைகள் உணர்த்துகின்றன.

**சுப்பையன்**

'வெடி' என்ற சிறுகதையில் சுப்பையன் கிணறு வெட்டும் வேலை செய்து அதில் கிடைக்கும் வருவாயைக் கொண்டு குடும்பத்தை நடத்திக் கொண்டு இருப்பவன்.

ஒருமுறை அங்கு ஏற்பட்ட மொழிக் கலவரத்தால் எந்த வேலையும் செய்யக் கூடாது என்று அறிவிக்கப்பட்டது. கிணறு வெட்டும் போது இருக்கும் பாறைகளைத் தகர்க்க வெடி வைத்தால்தான் முடியும். இந்த கலவரத்தால் சுப்பையன் வேலையும் இன்றி கூலியும் இன்றிக் கஷ்டப்படுவது கதையாக்கப்பட்டுள்ளது.

இக்கதையில் சுப்பையன் தனக்குக் கிடைக்கும் குறைந்த வருவாயும் இன்றிக் கஷ்டப்படுகிறான். சிலர் செய்யும் போராட்டங்கள், கலவரங்களால் பலர் பாதிக்கப்படுகின்றனர் என்பதை இதன் வழி அறிய முடிகிறது.

**சிவக்கண்ணன்**

'எல்லோருக்கமான நேசம்' என்ற சிறுகதையில் வரும் தலைமை மாந்தர் இவன் சாலையோரங்களில் தாள்களைச் சேகரிக்கும் பையன். இவனைப்போன்றவர்கள் படும்பாடு கதையாக உள்ளது. அதிகாரத்தில்

இருக்கும் போலீஸ்காரர் இரவில் போய் ரோட்டில் தூங்குபவர்களை எழுப்பி வேலை செய்யச் சொல்வது காணமுடிகிறது. அதுபோல் சிவக்கண்ணனை ஒருமுறை போலீஸ் ஒருவர் சென்று அடித்து ஒரு காளை ஊரில் அட்டகாசம் செய்கிறதாம் கண்டுபிடித்துக் கொண்டு வா என்றான். இவனைப்போன்ற ஏழைகளை அதிகார வர்க்கம் பயன்படுத்திக்கொள்ளும் நிலையை அறிய முடிகிறது.

**பொன்னுச்சாமி**

பொன்னுச்சாமி என்னும் கதை மாந்தர் 'வதை' என்னும் சிறுகதையில் ஒரு முக்கிய கதைப்பாத்திரம். பொன்னுச்சாமி தன் தந்தையின் உடல்நிலை சரியில்லாத காரணத்தால் ஒரு பெரிய மருத்துவமனைக்குக் கொண்டு செல்கிறான். அங்கு பொன்னுசாமியை அங்கு இங்கு என அலைக்கழிக்கின்றனர். பணம் கட்ட முடியாத ஒருவரை மருத்துவர் திட்டும் விதத்தைப் பார்க்கிறான். முடிந்த அளவு செலவு செய்கிறான். பின்பு இறந்து விடுகிறார். பின் அவரைத் தன் சொந்த ஊருக்குக் கொண்டு செல்லப் பணம் இல்லாமல் பரிதவிக்கும் பொன்னுசாமியின் நிலை கதையாக்கப் பட்டுள்ளது.

மருத்துவர்கள் இறைவனுக்குச் சமமானவர்கள் என்று நினைத்துதான் நோய் வந்தால் மருத்துவமனைக்குச் செல்கின்றனர். அங்கு காக்க வேண்டிய மருத்துவர்கள் பணத்திற்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தை மனிதர்களுக்குக் கொடுப்பதில்லை என்ற செய்தியை ஆசிரியர் இக்கதையின் வழி குறிப்பிடுகிறார்.

**சிவராம்**

'வசந்த விஹார்' என்னும் சிறுகதையில் சிவராம் ஒரு குறிப்பிடத்தக்க கதைமாந்தர். ஒரு சாதாரணக் குடும்பத் தலைவராக

வருபவர் சிவராம். மகன் இருந்தும் பயனில்லாதவன். போதைக்கு அடிமையானவன். சுற்றுலாத் தலத்திற்கு அருகில் இவர்களின் ஊர் இருப்பதால், அங்கு நாள் வாடகைக்கு வருபவர்கள் ஏராளம். அதற்கும் அங்கு சென்று ஆள் தேட வேண்டும். அதுதான் அவர்களின் வருமானம்.

சிவராம் கஷ்டப்பட்டு ஒருவரை வாடகைக்குப் பிடித்து வருகிறார். மகன் அதிகமாக குடித்ததால் விடிந்தும் எழாமல் இருக்கிறான். பயந்துபோய் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்கின்றனர். அட்வான்ஸ் கொடுத்த 500 ரூபாயை எடுத்துக் கொண்டு சிவராம் பதறி ஓடுகிறார்.

ஊரின் பெயரில் மட்டுமே வசந்தம் உள்ள கிராமம். பிள்ளைகள் பெற்றோரின் சுமையைக் குறைப்பவர்கள். ஆனால் சிவராமின் மகன் அவருக்கு இன்னும் கஷ்டத்தைக் கொடுப்பவனாகத்தான் இருக்கிறான். போதைக்கு அடிமையானவன் தன்னை மட்டுமல்ல தன்னைச் சார்ந்தவர்களையும் அழிக்கிறான் என்பதை இக்கதையின் வழி ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

**வாழ்க்கைத்தடம் மாறியவர்கள்**

நேர்மையான வழியில் நடந்து வாழ்க்கை நடத்தாமல் மனிதன் தன் ஆசைகள், தன் கனவுகள், பொய்யாகும் போதும், ஏமாற்றத்தைச் சந்திக்கும் போதும், தவறான வழிக்குச் செல்கின்றான். வேலையின்மை, கணவன் மனைவி ஒற்றுமையின்மை, தவறான நட்பு, போலிசாமியார்கள், பண ஆசை, போதைக்கு அடிமையாதல், போன்றவையே தவறான வாழ்க்கை முறைக்கு மனிதனை இட்டுச் செல்கிறது.

கடத்தல், வன்முறை, போன்றவற்றில் ஈடுபடுகின்றனர். இவர்களைப்பற்றியே இங்கு ஆராயப்படுகிறது.

**சிவக்குமார்**

'மாறுதடம்' என்னும் சிறுகதையில் சிவக்குமாரின் அண்ணன் குறிப்பிடத்தக்க கதைமாந்தர். சிவக்குமார் சிறிய பையன். வயதான பெற்றோர், அண்ணன் என்ற ஏழ்மையான குடும்பம். அண்ணன் மில்லில் வேலை செய்பவன் அங்கு நடந்த வேலை நிறுத்தம் காரணமாக வேலை இல்லாமல் இருந்தான். சிறிது காலம் சென்றும் வேலை கிடைக்காத நிலையில் அவனின் வாழ்க்கை தடம் மாறிப் போகிறது.

"சண்முகம்... வா..." விளக்கைக் குறைத்தான்

ஒருவன். என்ன புதுசா ஒரு ஆளு...?

"எத்தனை பொட்டலம் வேணும்...?"

உட்கார்ந்திருந்தவன் காலி செய்த சிகரெட்டில் உள்ளங்கையிலிருந்து துகள்களை நிரப்பினான். புகைவிட்டான். கமறவைத்தது."[28] இனி சிவக்குமாரின் அண்ணனும் சம்பாதிப்பான். ஆனால் நேரிய வழியில் அல்ல. வேலையின்னையும் மனிதர்கள் தவறான வழிக்குப் போவதற்கு ஒரு காரணமாகிறது என்பதை இப்பாத்திரத்தின் வழி அறியமுடிகிறது.

**கதாசிரியர்**

'ரேகைக்காரன்' என்னும் சிறுகதையில் கதாசிரியரே கதையைச் சொல்கிறார். இவர் இக்கதையில் முக்கிய கதைமாந்தராகிறார். இதில் மில்லில் நடந்த வேலைநிறுத்தம் காரணமாக வேலையில்லை. அதனால் ரேகைப்பார்ப்பவனாக மாறுகிறார். பின்பு வேலை நிறுத்தம் முடிந்ததும் வேலைக்குச் செல்கிறார்.

"பனியன் கம்பெனிகள் மோசமடைந்தால் நான் மீண்டும் கைரேகைக்காரன் ஆனாலும் ஆகிவிடுவேன் ஜாக்கிரதை"[29] என்று இக்கதையில் குறிப்பிடுகிறார். வேலையின்மை ஏற்படும்போது சமூகம்

மனிதனைத் தவறான வழிக்குக் கொண்டுச் செல்லும் என்பது இவ்விரு கதைக்களன் வழி நமக்கு ஆசிரியர் சுட்டுகிறார்.

**துரைசாமி**

'கசிவு' என்ற சிறுகதையில் வரும் துரைசாமி குறிப்பிடத்தக்க கதைமாந்தர். துரைசாமி பனியன் கம்பெனியில் வேலைசெய்தவன். அங்கு அடிக்கடி வேலையில்லாமல் போகும். சிறிது நாள் கழித்து பின்பு வேலைக்குச் செல்ல வேண்டும். இந்த நிலை பனியன் கம்பெனிகளில் இயல்பாக நடப்பவை. அதேபோல் ஒருமுறை வேலையின்மையால் வீட்டிலேயே இருக்கின்றனர். சம்பாத்தியம் இன்மையால் வீட்டிலும் மரியாதையில்லை. எனவே குடிக்கு அடிமையாகிறான்.தன் மகள் ஷீப்டு வேலைக்குச் சென்று கொண்டுவரும் பணத்தில் அவன் குடும்பம் ஓடுகிறது. துரைசாமி அடிக்கடி குடிக்கப் பணம் கேட்கிறான்.

"வியாதி வந்த மனிதன் சொகப்படுத்திக் கொண்டு நிமிர்வதற்குள் மறுபடியும் வியாதிக்குள் அகப்பட்டுக் கொள்வது மாதிரிதான் இந்த பனியன் கம்பனி நிலை என்ற நினைப்பு துரைசாமிக்கு அடிக்கடி வரும் இப்போது பெரும் வியாதி வந்துவிட்டது"[30] என்று தன் மனதில் நினைக்கின்றான். பணம் சம்பாதிக்காத மனிதனை உறவுகளும் மதிக்காது. இவையே துரைசாமியின் மனது ஒருவித விரக்திக்கு ஆளாகிறது. இந்நிகழ்வை இப்பாத்திரம் உணர்த்துகிறது.

**நெசவுத் தொழிலை நம்பியவர்கள்**

நெசவுத் தொழில் கொண்டு ஆடைகளை தயாரிப்பவர்கள் நெசவுத் தொழிலாளிகள் எனப்படுகின்றனர். இன்றைய நவீனம் என்று பல புதிய வரவுகளினால் நெசவு செய்த ஆடைகளின் மீது மோகம்

குறைந்து விட்டது. அதனால் அத்தொழிலை மட்டுமே தெரிந்த மக்களின் வாழ்க்கைத்தரம் பாதிக்கப்படுகிறது.

சுப்ரபாரதிமணியன் சில கதைகளில் நெசவுத் தொழிலை நம்பி வாழ்பவர்களின் நிலையை மிக அழகாகச் சுட்டிக்காட்டுகிறார். இக்கதைகளின் வழி நெசவுத்தொழிலாளிகளின் வாழ்க்கைத்தரம் ஆராயப்படுகிறது.

**கதாசிரியர்**

'நசுக்கம்' என்னும் சிறுகதையில் கதாசிரியரே தலைமை மாந்தர். அவரின் நெசவுத் தொழில் சிறப்பாக இல்லை. பல வகை வண்ணங்களில் ஆடைகளை நெய்பவனாக உள்ளான். ஆனால் அவன் வாழ்க்கை வண்ணமற்று உள்ளது. நெசவுத் தொழில் நசிந்து வருவதையும், அதனால் அவர்களின் வாழ்வும் வறுமைக்கு உள்ளாவதையும் சுட்டுகிறார்.

"நீருக்காக ஏங்கும் பறவையின் அலகு போலப் படுக்கையின் அவன் வாய் திறந்திருக்கும். தறிகளின் கனத்த சப்தத்தில் காதுகளின் உடுக்கைகள் நிரந்தரமாயிருந்தன"[31] என்று வர்ணிப்பதன் மூலம் அவரின் பரிதாப நிலை புலப்படுகிறது. பல புடவைகளை கலைக்கண்ணோடு படைப்பவன். ஆனால் அவன் வாழ்க்கை வண்ணமற்று இருண்டு உள்ளதை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

'நவீனம்' என்னும் சிறுகதையில் வரும் பொன்னுசாமி முக்கிய கதைமாந்தர். நெசவுத்தொழில் செய்பவர் பொன்னுச்சாமி அதுவே அவர்களின் வாழ்வாதாரம். ஆனால் அதை யாரும் விரும்பாததால் வறுமையில் உள்ளது அவர்கள் குடும்பமே மாறிவரும் நாகரிகத்தினால்

பழமையான நெசவுத்தொழில் பாதிக்கப்படுகிறது. என்பதை இக்கதையில் நன்கு உணர்த்தியுள்ளார்.

“புதுப் பணக்காரனாகாட்டியும், இந்த நூல் நெசவை வுட்டுட்டு பட்டு நெசவுக்குப் போற காலத்திலெ பாக்கலாம். நமக்கு இந்த தரித்திரம் போகுதான்னு செரி இப்பதைக்கு சோறாச்சும் பொங்குதான்னு பாப்பம்”[32] என்று கதையாசிரியரின் வார்த்தைகள் குடும்பத்தின் வறுமையை கண்முன் கொண்டு வருகின்றன. இதன் மூலம் பலரின் வாழ்க்கைத் தரமும் நசிந்து வருவதை அக்கதையின் வழி ஆசிரியர் சுட்டுகிறார்.

**சின்னச்சாமி**

‘சிதறல்’ என்ற சிறுகதையில் சின்னச்சாமி தலைமாந்தராகக் குறிப்பிடத்தக்கவர். நெசவுத்தொழில் செய்துதான் முன்னேற முடியவில்லை. தன் பிள்ளைகளாவது நன்றாகப் படித்து நல்ல நிலைமைக்கு வர வேண்டும் என நினைக்கும் தந்தையாக சின்னச்சாமி உள்ளார்.

“நெசவு நசியர தொழில்தா... அதனால்தான் உங்கப்பா உங்கள நல்லா படிக்கவைக்கனும்னு நெனைக்கிறான்.”[33]

நவீன தொழில் நுட்பங்கள் வந்துவிட்ட காலத்தில் பழைய நெசவு நெய்த ஆடைகளை யாரும் விரும்புவதில்லை. நெசவுத் தொழிலை மட்டுமே நம்பி வாழும் மக்கள் நெசவு ஆடைகளின் புறக்கணிப்பால் ஏழ்மை நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். எனவே இக்கதையின் வழி ஆசிரியர் இத்தொழில் சிதறிக் கொண்டிருக்கிறது. என்பதை உணர்த்துகிறார்.

**துணைக்கதைமாந்தர்கள்**

தலைமைப்பாத்திரங்களுக்கு அடுத்ததாக முக்கியத்துவம் வாய்ந்தவர்கள் துணைக்கதைமாந்தர்கள் எனப்படுவர்கள்.

முதன்மைப் பாத்திரத்தின் இயல்புகளையும் செயல்பாடுகளையும் விளக்குவதற்குத் துணைபுரிவர்கள் துணைப்பாத்திரங்கள் எனலாம். சிறுகதைகளில் இவர்களால் தான் தலைமைப் பாத்திரத்தின் முக்கியத்துவம் புலப்படுகிறது எனலாம். துணைப்பாத்திரங்கள் சிறுகதைகளின் வெற்றிக்கு அடித்தளமாக அமைகின்றன. இது குறித்த பல்வேறு அறிஞர்களின் கருத்துக்களை ஆய்வின் போக்கு கருதி இங்கு தரப்பட்டுள்ளன.

தலைமை மாந்தருக்குத் துணைநிற்கும் தன்மையினர் தனிப்பட்ட நிலையில் இவர்களால் பெரும் விளைவுகள் உருவாகாவிடினும் தலைமை மாந்தரை ஒட்டியே நிகழ்ச்சிகளில் இவர்களுக்குக் குறிப்பிடத்தக்க பங்கிருக்கும்"[34] எனக் குறிப்பிடுவர்.

"துணைமை மாந்தர் ஆற்றின் வேகத்தை அளக்க உதவும் ஆற்றங்கரை மரங்களைப் போன்றவர்கள் என்றும், தலைமை மாந்தர் தன்னுடைய வேகத்தையும், பாதையையும் அடிக்கடி மாற்றிக் கொண்டு கணத்திற்குக் கணம் மாறுபடும் ஆற்றை யொத்தவர்கள் என்றும் ப்ளிஸ் பெர்ரி என்னும் அறிஞர் தலைமை மாந்தருக்கும் துணைமை மாந்தருக்கும் இடையே உள்ள வேறுபாட்டை விளக்குகிறார்."[35]

தலைமைப் பாத்திரத்தின் சிறப்புகள், குறைகள், நிறைகள் வெளிப்படத் துணை செய்வன துணைப்பாத்திரங்களாகும்"[36] என்பர்.

துணைக்கதைமாந்தர்கள் சிறுகதையின் வளர்ச்சிக்குத் துணை புரிகிறார்கள். ஏதாவது ஒரு சமூக சிக்கலையோ சீர்திருத்தத்தையோ, வலியுறுத்துபவர்களாக அமைக்கப்பட்டுள்ளனர். சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் இடம் பெறும் துணைப்பாத்திரங்கள் அவர்களின் பண்புகளுக்கேற்ப மூன்று பெரும் பிரிவுகளாக பிரிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளன. அவையாவன :

1. உறவுகளால் கைவிடப்பட்டவர்கள்

    1. ஈஸ்வரி - புதுப்பழக்கம்
    2. கதையாசிரியர் - பங்கீடு
    3. சுகுமார் - பகல்

2. காதலில் ஏமாற்றம் அடைந்த பெண்கள்

    1. செண்பகம் - நிழல் உறவு
    2. சந்திரா - அவளும் அவளும்
    3. இந்திய பெண் - பாதுகாப்பு

3. திருமணம் தடைபட்டு நிற்பவர்கள்

    1. சுஷ்மா - எஞ்சியது
    2. கண்மணி - கசிவு
    3. ஜெயராமின் தங்கைகள் - கூடவரும் அவர்கள்

**1. உறவுகளால் கைவிடப்பட்டவர்கள்**

**ஈஸ்வரி**

புதுப்பழக்கம் - என்ற சிறுகதையில் நான்காவது படிக்கும் மாணவி ஈஸ்வரி. தாய், தந்தை இறந்த பிறகு தன் அக்காவிடன் இருந்தாள் ஈஸ்வரி. அக்காவிற்குத் திருமணம் நடந்தவுடன் அக்காவின் கணவர் “பொட்டப் புல்ல நமக்கெதுக்கு” என தட்டிக்கழித்துச் செல்கிறார்.

“கடைசியில் யாரோ ஆயர் இல்லம் பற்றிச் சொல்லி சேர்த்துவிட்டுப் போ என்றார்கள். ‘யாருமில்லை அனாதை’ என்று கையெழுத்திட்டுச் சேர்ந்தாள் அக்கா.”[37]

இவ்வகையில் தாய், தந்தையை இழந்த ஈஸ்வரிக்குப் பெற்றோராக இருக்க வேண்டிய அக்காவின் கணவனே பெண் பிள்ளை என்பதால், அவளுக்கு ஆகும் செலவுகளுக்குத் தான் பொறுப்பாகும் நிலை ஏற்படும் என்பதால் தட்டிக்கழிக்கிறான். அக்கா என்ற உறவு இருந்தும் தான் அனாதை எனக் கையெழுத்திட்டுப் போகிறாள். இக்கதையின் வழி உறவுகளால் கைவிடப்பட்டவளாக ஈஸ்வரி காட்டப்படுகிறாள்.

**கதையாசிரியர்**

‘பங்கீடு’ என்ற சிறுகதையில் அப்பா என்று அறிமுகமாகும் கதைசொல்லி மூன்று ஆண்பிள்ளைகள், இரண்டு பெண் பிள்ளைகள் என இருந்தும், தன் இறுதிக் காலத்தில் அனாதை போன்றவர். இவரின் மனைவி இறந்த பதினாறாம் நாளே இருக்கும் சொத்துக்களையும், பணத்தையும், வீட்டில் உள்ள பொருள்களையும் பங்கீட்டுக் கேட்கின்றனர்.

ஐந்து பிள்ளைகளைப் பெற்றும், இறுதிக் காலத்தில் பிள்ளைகள் பெற்றோர்கள் மீது வைக்கும் ஆசையைவிட, அவர்கள் சேர்த்துவைத்த சொத்தின் மீதே அதிக ஆசை வைக்கின்றனர் என்பதைப் பார்த்து “சரசரவென வாசலை நோக்கி நடக்க ஆரம்பித்தார். பங்குபோட்ட பாத்திரங்களை எடுத்துக் கொண்டவர்கள் தட்டியும், உரசியும் பார்த்துக் கொண்டிருந்தனர். சங்கு இப்போது கைகள் மாறிக் குழந்தைகளுக்குள் திரிந்து கொண்டிருந்தது. நாதமாய் சப்தம் யாரிடமிருந்தும் வரவில்லை.”[38]

மூன்று மகன்களும் மருமகள்களும் பொருட்களையும், பணத்தையும், எண்ணிப் பார்க்கின்றனரே தவிர, தன் தந்தையை பார்ப்பார் யாரும் இல்லை. இப்படிப்பட்ட உறவுகள் இருந்தாலும் அவர்கள் அனாதை போன்றவர்களே என்பதை இக்கதை வழி ஆசிரியர் உணர்த்துகிறார்.

**2. காதலில் ஏமாற்றம் அடைந்தவர்கள்**

காதல் என்ற பெயரில் தன் வாழ்வைத் தொலைத்தவர்களை சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதைகளில் அடையாளம் காட்டுகிறார். இன்றைய காதல் 'செம்புல பெயல் நீர் போல' கலப்பவை அல்ல. இன்றைய தலைமுறையின் காதல் அந்தஸ்து அதிகாரம் பார்த்துக் கலப்பவை. இதனை ஆசிரியர் சில கதைகளில் நன்கு சுட்டுகிறார்.

**செண்பகம்**

'நிழல் உறவு' என்னும் சிறுகதைகளில் வரும் செண்பகம். துணைப்பாத்திரமாக வருபவர். ஏழ்மையான நிலையில் தந்தையின்றி தாயின் அரவணைப்பில் வளர்கிறாள். தாய் மோர்விற்று செண்பகத்தையும், செண்பகத்தின் தம்பியையும் வளர்க்கிறாள். செண்பகம் ஒருவனைக் காதலித்து மணக்கிறாள். ஆனால் அவன் தவறானவன். பல பெண்களுடன் தொடர்புடையவன் எனத் தெரிந்து பிரிகிறாள். பின்பு செண்பகத்தின் வாழ்வே தவறான வழியாகிறது.

"செண்பகம் அவள் நம்பியவனால் செல்லம்மா சொன்னது போல் தூக்கி எறியப்பட்டு பச்சை மண்ணாகத்தான் கலைந்திருக்கிறாள். அப்படித் தவறிப் போனதும் ஏதோ சௌகரியமாய்ப் போனது போல் அவளின் நடத்தை பின்னால் சீரழிந்ததாம். சீரழிந்தது சௌகரியமாகவும், தொழில் ரீதியாகவும் ஆகிவிட்டதாம்."[39]

தான் நம்பியவனால் ஏமாற்றம் அடைந்து தன் வாழ்க்கையையே தவறான வழிக்குக் கொண்டு செல்பவளாக செண்பகம் உள்ளாள். இவளின் வாழ்க்கையைப் பார்த்தே இவளின் தாய் செல்லம்மா இறந்துவிடுகிறாள். இக்கதையில் வரும் செண்பகத்தைப் போன்று இச்சமூகத்தில் பல பெண்கள் உள்ளனர் என ஆசிரியர் பதிவு செய்துள்ளார். முன் பின் அறியாத மனிதனை நம்பி தன் வாழ்வைத் தொலைத்த இக்கதைமாந்தரின் வழி காதலில் ஏமாற்றம் அடைந்தவர்களை இனம் காட்டுகிறார் ஆசிரியர்.

**சந்திரா**

'அவளும் அவளும்' என்ற கதையில் வரும் 'சந்திரா' என்ற கதைமாந்தர் குறிப்பிடத்தக்க துணைப்பாத்திரம் ஆகும். தன் காதல், கணவனின் கொடுமையால் பிறந்த வீட்டில் வந்து தங்கியுள்ளாள். மனைவி என்பவள் கணவனின் ஆதிக்கத்திற்கு உட்பட்டவள் போல் கொடுமைப்படுத்தப்படுகிறாள். இதனை, "நீ இங்க வந்த நாலு நாளா உன்னெ இதே நெலைமையில்தா காலையில் பாக்கறேன். தூக்கம் முழுசா இருந்துச்சா..... சிறு சிறு ஓவியங்கள்.... ராத்திரி பூராவும் இதத்தா பண்ணிக்கிட்டுயிருந்தியா... "உம்..." தூங்க முயற்சி பண்ணியிருக்கலாமில்லை... இதுவும் இல்லன்னா தற்கொலை பண்ற முடிவுக்கு ராத்திரி கொண்டு போயிருக்கும்."[40] சந்திராவின் இந்த வார்த்தைகளில் இருந்து எவ்வளவு பாதிப்புக்கு உள்ளாகியுள்ளாள் என்பதை அறியலாம். கணவனின் துன்புறுத்தலால் மனநிலை சரியில்லாத நிலையில் சந்திரா இருப்பதை உணர முடிகிறது. கணவனின் கொடுமையில் இருந்து விடுபடவே பல பெண்கள் விட்டுச் செல்கின்றனர் என்பதை இக்கதைவழி ஆசிரியர் உணர்த்துகிறார்.

**திருமணம் தடைபட்டு நிற்பவர்கள்**

ஏழ்மையின் காரணமாக திருமணம் நடக்காமல் இருக்கும் பெண்களை ஆசிரியர் தம் சிறுகதைகளில் குறிப்பிட்டுள்ளார். உறவுகளின் ஆதரவின்மையும், பொறுப்பற்ற தந்தையர்களும், வறுமையும், இக்கதைகளில் திருமணம் தடைபட்டு நிற்கும் கதை மாந்தர்களுக்குக் காரணமாகின்றன.

சுப்ரபாரதிமணியன் குறிப்பிடும் இம்மாந்தர்களை அவரின் சிறுகதைகொண்டு இங்கு ஆராயலாம்.

**சுஷ்மா**

'எஞ்சியது' என்னும் கதையில் வரும் சுஷ்மா திருமண வயதில் இருக்கும் பெண். இவளின் தந்தை ஒரு காலத்தில் நல்ல வசதி வாய்ப்புடன் வாழ்ந்துள்ளார். பின்பு பொருளாதாரநிலை குறைகிறது. வருமானம் இன்மையால் அந்த பெரியவர் வீட்டில் உள்ள பழைய புத்தகம், பர்னிச்சர் போன்ற சாமான்களை விற்று வாழ்க்கையை நடத்துகிறார்.

கதையாசிரியர் அவ்வூருக்கு பணிநிமித்தமாக அவ்வூரில் தங்க வேண்டிய நிலை. அப்போது தங்கும் வீட்டில் பர்னிச்சர் வேண்டும் என்பதால் பழைய சாமான்கள் விற்கும் வீட்டிற்கு நண்பர் அழைத்தும் செல்கிறார். அங்கு இவர் சந்தித்த குடும்பம் தான் சுஷ்மாவின் குடும்பம்.

"சாரி டீ கூட குடுக்க முடியலே.... எங்க பொருளாதார நிலைமை அப்படி ஒவ்வொரு சாமானா வித்திட்டிருக்கோம். வர்றவங்களுக்கு உபச்சாரம் கூட பண்ண முடியாத பலவீனம்"[41] என்ற சுஷ்மாவின் தந்தையின் வார்த்தைகளில் இருந்து அவர்களின் பொருளாதார

நிலையைக் காணலாம். எனவே சுஷ்மாவின் திருமணத்திற்கு பொருளாதாரமே காரணமாகிறது என்பதை அறியமுடிகிறது.

**கண்மணி**

'கசிவு' என்ற சிறுகதையில் துரைச்சாமியின் மகளாக கண்மணி அறிமுகம் ஆகிறாள். தந்தையின் பொறுப்பற்ற நிலையும், வருமானமின்மையால், தானே ஷிப்டு வேலைக்குச் சென்று குடும்பத்தை நடத்துகிறாள். தனக்குத் தேவையானதைத் தானே வாங்கிக் கொள்கிறாள். இந்நிலையில் அவளின் திருமணமும் கனவாகவே உள்ளது.

"அலுக்காமல் வேலை செய்கிற பெண் உழைத்து முதலில் கவரிங் நகைகளாய் கழுத்திலும் காதுகளிலும் மாட்டிக் கொண்ட போது துரைசாமிக்குப் பெருமிதமாய் உணர்ந்தான். பிறகு சவரனில் வாங்கிப் போட்டுக் கொண்ட போது சந்தோஷமாகவே இருந்தது.

நி உம் பொண்ணுக்கு ஒண்ணும் வாங்க வேண்டா அவளே எல்லாத்தையும் பாத்துக்குவா.... என்ற துறைசாமியின் மனைவியின் வார்த்தைகளை நினைத்து வெறுப்பாகத்தான் இருந்தது. இதன்மூலம் கண்மணியின் நிலமையை ஆசிரியர் உணர்த்துகிறார். எனவே வறுமையின் காரணமாக, திருமணம் ஆகாமல் இருக்கும் பெண்களை இக்கதாபாத்திரங்களின் வழி ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

**எதிர்மறைப் பண்புடைய கதைமாந்தர்கள்**

எதிர்மறையான பண்புகளைக் கொண்ட இக்கதைமாந்தர்கள் கதை முழுவதும் பிறருக்குத் துன்பம் செய்பவர்களாகவும், மனிதாபிமானம் அற்றவர்களாகவும் பிறரை அழைக்கழிப்பவர்களாகவும் படைக்கப் பட்டுள்ளனர். அல்லது நல்லது செய்பவர்களுக்கு எந்த விதத்திலாவது

அவர்கள் இடையூறு கொடுத்துக் கொண்டு இருப்பார்கள். இத்தகைய பாத்திரங்களைச் சுப்ரபாரதிமணியன் தம் கதைகளில் சுட்டிக் காட்டியுள்ளார். அவர்களைப் பின்வருமாறு வரிசைப்படுத்தலாம்:

- செல்லம்மாவின் மகன் - நிழல் உறவு
- புரோகிதர் - அடையாளம்
- குமார் - வெளிச்சமற்றவை
- ஜேசுதாஸ் - காயம் பட்டவனும் காக்கைகளும்
- தங்கராஜ் - இடம்
- அதிகாரி - வருகை
- போலீஸ்காரன் - மாயம்
- போலீஸ்காரன் - எல்லோருக்குமான நேசம்
- மருத்துவமனை ஊழியர் - வதை

**செல்லம்மாவின் மகன்**

தனியாகப் பெயரிட்டு அழைக்காமல் செல்லம்மாவின் மகனாகவே அறிமுகம் ஆகிறான். தாய் ஒழுக்கத்துடன் வாழ்ந்து, பிள்ளைகளை வளர்த்தது பெரிதாகத் தெரியவில்லை. அவள் எந்த பணமும் சேர்த்து வைக்கவில்லை. ஒழுக்கத்துடன் வாழ்ந்து என்ன பிரயோஜனம். என் அக்காவாள் தான் நான் இந்த நிலையில் உள்ளேன் என்று, செண்பகத்தின் தவறான வழியில் வந்த பணத்தையே பெரிதும் விரும்புகிறான்.

பெற்ற தாயை விட்டுக் கொடுத்து பேசுபவன் நல்லவனாக இருக்க வாய்ப்பே இல்லை எனலாம்.

"எங்கம்மா இருந்தும் என்ன பிரயோஜனம்? அவ இருக்கும் வரைக்கும் நானெல்லாம் கஷ்டபட்டுதா இருந்தேன் எல்லாம் எங்கக்காதான்... படுத்துதான் கெடந்தா... எங்கம்மா உசிரோட இருந்தா நா ஏதோ கூலி

வேலைக்குத்தான் போயிருப்பேன். இந்த கடையெல்லாம் வர்றதுக்கு எங்க அக்காதான் காரணம்”[43] என்ற அவனின் வார்த்தைகளில் இருந்து ஒழுக்கத்திற்கு எதிர்மறையானவன் என்பதை அறிய முடிகிறது.

**புரோகிதர்**

சுரேஷின் மாப்பிள்ளைத் தோழனாக சீனு வந்தபோது அவன் வேறு சாதி என்று அவனை நிராகரித்து, அத்தனைபேர் மத்தியில் சீனுவை அவமானப்படுத்திய புரோகிதர். அடுத்தவரின் மனதைப் புண்படுத்தி, சாதி, மத பேதம் பார்க்கும் எதிர்மறை பண்புடையவர் ஆகிறார்.

“புரோகிதர் காதை அறுக்கிற மாதிரி குரலெடுத்து பிசிறலுடன் வெளிப்பட்டது. ‘அய்யய்யோ..... இதெல்லாம் என்னது’ தலை தூக்கி முறையிடுகிற மாதிரி பெண்ணின் அப்பாவைப் பார்த்தார்.

“‘சம்பிரதாய கல்யாணத்திலெ இதல்லா என்ன அமக்கலமா?’ சம்பிரதாயக் கல்யாணத்துலெ இதல்லா மீறி என்னாலே செய்ய முடியாது”[44] என்ற புரோகிதரின் வார்த்தைகள் இங்கு கவனிக்கத்தக்கது. சாதி இரண்டொழிய வேறில்லை என்ற வாக்கிற்கு எதிர்மறையாகப் புரோகிதர் உள்ளார்.

**குமார்**

‘வெளிச்சமற்றவை’ என்ற சிறுகதையில் வரும் குமார் எதிர்மறை பண்புடைய கதைமாந்தர். கணவனாலும் கைவிட்ட சந்திரா பெற்றோர் இன்றி வறுமையில் இருக்கையில் அவளின் அக்கா மகனாகக் குமார் சந்திராவை வெறுக்கிறான். அடிக்கடி வந்து உறவு என்ற முறையில் பணம் கேட்கிறாள் என்று தன் தாய் அவளை சந்திப்பதையும்

எதிர்க்கிறான். சந்திரா வீட்டிற்கு வந்த போது "அம்மா வீட்டிலே இல்லை. கதவு திறந்த வேகத்திலேயே சாத்தப்படும் சப்தமும் கேட்டது தெளிவாய்"[45] சந்திரா வியர்த்த முகத்தோடு சிறிதுநேரம் கதவருகில் நின்று விட்டுச் சென்று விடுகிறாள். உறவை விடப் பணமே பெரிதாக மதிக்கும் குமாரின் குணம் இங்கு நோக்கத்தக்கது.

**ஜேசுதாஸ்**

'காயம் பட்டவனும் காக்கைகளும்' என்ற சிறுகதையில் ஜேசுதாஸ் பெண்களைப் பார்த்தவுடனேயே அவர்களின் உடலை வர்ணிப்பவனாக இக்கதையில் வருகிறான். சந்திரன் காதலிக்கிறான் என்றதும் அவனை வரம்பு மீறிக் கற்றுக் கொடுக்கிறான்.

"என்னடா இந்தச் சந்திரன்.... சும்மா கடலக்கா உடைக்கிறதோட சரி. நானா இருந்தா எப்பவோ மேஞ்சிருப்பேன். நல்ல உடம்புடா.... பிறகு ஒரு பெண்ணின் முகவரியைக் கடகடவென்று ஒப்புவித்து அவளின் உடம்பு பற்றிய விஷயங்களை ரசித்து சொன்னான்."[46]

ஜேசுதாசைப் போன்றவர்கள் இருப்பதால் தான் பெண்கள் சுதந்திரமாக நடக்கவும் இயலவில்லை. சமூகத்தில் நடக்கும் பாலியல் வன்முறைக்கு இவனைப் போன்ற காமுகர்கள்தான் காரணமாகின்றனர் என்பதை இக்கதைவழி ஆசிரியர் சிறப்பாக உணர்த்தியுள்ளார்.

**தங்கராஜ்**

'இடம்' என்னும் சிறுகதையில் வரும் தங்கராஜ் என்பவன் தன் மனைவி ஜோதியைக் கொடுமைப்படுத்துபவனாக உள்ளான். கூட்டுக் குடும்பமாக உள்ள இவன் வீடு சிறியது. ஒரே அறை மட்டும்தான் எல்லோரும் வரிசையாகப் படுத்திருப்பர். மனைவியைத் தனியே

அழைத்தான். வரவில்லை என்பதற்காக அவளை அடித்து இரவில் யார் யாரையோ தூக்கத்தில் ஆண்களின் பெயர்களாகச் சொல்கிறாள் என்று தன் கேவலமான காமத்தை வெளியில் சொல்ல முடியாமல் அவளை அடிக்கிறான்.

தன் மனைவியை அசிங்கப்படுத்திய தங்கராஜைப் போன்ற எதிர்மறைப் பண்புடைய கதைமாந்தர்களையும், ஆசிரியர் இங்கு பதிவு செய்கிறார்.

**அதிகாரி**

பொதுவுடைமை என்று வார்த்தையளவில் பேசிக் கொண்டுதான் உள்ளோம். ஒருபக்கம் அதிகார வர்க்கம் ஏழைகளைக் கொடுமைப் படுத்திக் கொண்டுதான் உள்ளது. ‘வருகை’ என்ற கதையில் வரும் செல்லத்தாயி என்ற வயதானப் பெண்ணை பிரதமர் வருகையின் போது தான் சொல்லிக் கொடுத்தது போல் இல்லாமல் தன் கஷ்டங்களைச் சொல்லியதால் பிரதமர் சென்ற பின் அவள் வீட்டிற்கு வந்து அவளை மிரட்டுகின்றனர். வீட்டு வாசலில் வைத்திருந்த குடத்தை காலால் எட்டி உடைத்துவிட்டுச் செல்கிறான்.

அவர்களின் அதிகாரத் தொணியை ஆசிரியர் இங்கு குறிப்பிடுகிறார். இவ்வகையில் எதிர்மறைப் குணம் உடையவர்களை இங்கு அறியலாம்.

**சார்புக் கதைமாந்தர்கள்**

முதன்மைக் கதைமாந்தர்களின் கட்டமைப்பிற்கும் உதவும் வகையில் நேரடியாகவோ மறைமுகமாகவோ அமையும் பாத்திரங்கள் சார்புப் பாத்திரங்களாகும். இவர்கள் ஒரு நிகழ்ச்சியில் கோடிட்டுக் காட்டும் வகையில் அமைவர்.

“நிகழ்ச்சியின் வளர்ச்சிப் போக்கில் சில பொதுக்கருத்து வெளிப்பாடுகளுக்கு வாயிலாகின்றனர். இவர்களுக்கென்று தனித்த ஆளுமை வளர்ச்சி நிலைகள் இல்லை. இம்மாந்தர் இல்லையெனினும் கதையோட்டம் தடைபடுவதில்லை என்று விஜயலெட்சுமி கூறுவர்.

அவ்வகையில் சுப்ரபாரதிமணியன் சார்புப்பாத்திரங்களை நிகழ்ச்சிப் போக்கிற்கேற்ப கோடிட்டு காட்டும் வகையில் அவர்களை பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

| | |
|---|---|
| ♦ பார்வை | - ரோசி |
| | - செல்வராஜ் |
| ♦ வசந்தவிஹாார் | - இராமகிருஷ்ணன் |
| | - சுகந்தி |
| ♦ இடம் | - சுலோச்சனா |
| ♦ நிழல் உறவு | - கதாசிரியர், பெற்றொர் |
| | - செட்டியார் |
| ♦ அடையாளம் | - சுரேஷின் மாமா, அம்மா |
| ♦ வெளிக்கமற்றவை | - குமாரின் பெற்றோர் |
| ♦ காயம் பட்டவனும், காக்கைகளும் | - சந்திரனின் நண்பன் |
| ♦ எஞ்சியது | - வயதானவர் |
| ♦ புதுப்பழக்கம் | - ஈஸ்வரியின் அக்கா |
| ♦ நரகத்திலிருந்து நகரத்திற்கு | - அருள் |
| ♦ துணை | - மாமி |
| ♦ மாறுதடம் | - சிவக்குமாரின் அம்மா |

மேற்கூறிய இக்கதை மாந்தர்கள் யாவரும் ஆசிரியரின் எண்ணங்களைப் பிரதிபலிப்பவர்களாக அமைகின்றனர். முதன்மைக்

கதைமாந்தர்களோடும், துணைக்கதைமாந்தர்களோடும் சார்ந்து சிறுகதைகளின் வெற்றிக்குத் துணைபுரிந்துள்ளனர். இவர்களுக்குத் தனித்த ஆளுமை வளர்ச்சி இல்லையெனினும் குடும்ப உறவுகள், சமூகச்சிக்கல்கள், தீர்வுகள் போன்றவற்றில் சார்புக் கதைமாந்தர்களின் பங்கு மிகவும் இன்றியமையாதது.

**கதைக்களம்**

சுப்ரபாரதிமணியனின் ஆரம்பகாலக் கதைகள் வெகு யதார்த்தமாக அவரின் குடும்பம் சார்ந்தவர்கள் பற்றிய சித்தரிப்புகளாய் அமைந்திருக்கின்றன. அப்பா என்ற ஆளுமையும், கிராமியச் சூழலும், சேவற்கட்டு வாழ்க்கையும் குறிப்பிடத்தக்கன. இவற்றை இவரின் அனுபவக் கதைகளாகக் கொள்ளலாம்.

இவரது செகந்திராபாத் வாழ்க்கை கதைக்களத்தை மாற்றம் அடையச் செய்துள்ளன. ஒரு தமிழன் வேற்று மொழி பேசும் மாநிலத்தில் வாழும் போது அவன் அந்நியமாக்கப்படுகிற சூழலும், மதக்கலவரங்களால் மனிதர்கள் சிதறுண்டு கிடப்பதும், அந்த மாநிலத்தின் பல மனிதர்கள் கதைகளில் இடம்பெற செய்துள்ளதையும் காணமுடிகிறது.

சுப்ரபாரதிமணியன் செகந்திராபாத்தில் வாழ்ந்த எட்டாண்டு கால வாழ்க்கை அனுபவங்களை சிறுகதையாக்கியுள்ளார். நகரம் தரும் பல்வேறு பரிமாணங்களை அனுபவக் கதைகளாகத் தந்துள்ளார்.

பின்பு பெரிய தொழில் நகரமான திருப்பூரை மையமாகக் கொண்டும் கதைகளை எழுதியுள்ளார். இவரது கதைகளின் களங்கள் மூன்று நிலைகளில் மாறுபடுவதை முக்கியக் கூறாகக் குறிப்பிடலாம்.

சிறுகதைகளின் களங்கள் படைப்பாளன் பிடித்த கிராமியச்சூழல், தொழில் காரணமாக இடம் பெயர்ந்த பிற மாநிலச் சூழல், மீண்டும் தமிழகச் சூழலில் திரும்பியபின் அந்தந்த ஊர்களின் சமூகச் சூழல் ஆகியவை சிறப்பிடம் பெறுவதை சுப்ரபாரதிமணியன் கதைகள் வாயிலாக அறிய முடிகிறது.

**முடிவுரை**

- சிறுகதைகளுக்கு உளபோராட்டம் அளிப்பதாகப் பாத்திரங்களே திகழ்கின்றன என்பதை சுப்பிரபாரதிமணியன் கதைகளில் படைக்கப்பட்டுள்ள கதைமாந்தர்கள் வழியாக மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். கதை மாந்தர்களின் உணர்வுப் போராட்டங்கள் சமூக அமைப்பை அடையாளம் காண உதவுவதை அறியமுடிகிறது.
- கதைமாந்தர்களில் முதன்மைக் கதைமாந்தர்கள் கதை முழுவதும் பங்குபெற்று, பெரும் சவால்களை எதிர்கொள்பவர்களாகவும், குறிக்கோள் மாந்தர்களாகவும், ஆற்றல்வாய்ந்தவர்களாகவும் விளங்குகின்ற உண்மை பெறப்படுகிறது.
- முதன்மைப் பாத்திரங்கள் சாதியைத் தகர்த்தெரிபவர்களாகவும், பெண்கள் சமூகத்தில் சாவல்களைத் துணிச்சலுடன் எதிர் கொள்பவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். மேலும் அடித்தட்டு மக்களை நேசிப்பவர்களாகவும் வறுமையை எதிர்த்து வாழ்க்கையோடு போராடுபவர்களாகவும் இங்கு சித்தரிக்கப் பட்டுள்ளனர்.
- நெசவுத் தொழிலை மட்டுமே நம்பி வாழும் மக்கள் ஏழ்மை நிலைக்கு தள்ளப்படுகிற சூழலை காணமுடிகிறது. தமிழகத்தின் பாரம்பரியமிக்க நெசவுத்தொழில் அழிந்துவருவதை இவரது பல சிறுகதைகள் உணர்த்தியுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. கரு.முத்தையா, ஜெயகாந்தன் நாவல்களில் பாத்திரப்படைப்பு, ப.13
2. கீதா, கோ.வே.தி.ஜானகிராமனின் நாவல் கதை, ப.68
3. கரு.முத்தையா, ஜெயகாந்தன் நாவல்களில் பாத்திரப்படைப்பு, ப.22
4. கீதா, கோ.வே.தி.ஜானகிராமனின் நாவல் கதை, ப.69
5. மேலது, ப.73
6. ம.திருமலை, தமிழ் மலையாள நாவல் ஒப்பாய்வு, ப.132
7. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.307
8. சுப்ரமணி, இளவேனில், ப.71
9. க.பிரபாகரி, இக்கால இலக்கியம், ப.68
10. கு.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.318
11. இரா.மோகன், மு.வ.வின் நாவல்கள், ப.46
12. ம.திருமலை, புனைகதை இலக்கியப் பொழிவு, ப.35
13. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கையும், ப.227
14. கி.வ.ஜகன்நாதன், நாவலின் தோற்றமும் வளர்ச்சியும், ப.106
15. இராம.முத்துச்சண்முகம், பெரியகருப்பன், அகிலன் கருத்தரங்க ஆய்வு கட்டுரை, ப.164
16. கீதா.கோ.வே.ஜானகிராமனின் நாவல் கதை, ப.107
17. மேலது, ப.107
18. மேலது, ப.107
19. ஜெயகாந்தன், சிலநேரங்களில் சில மனிதர்கள் - முன்னுரை
20. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.79
21. அவ்வையார் பாடல்கள், நல்வழி, ப.104
22. பாரதியார் கவிதைகள், பல்வகைப் பாடல்கள், ப.197
23. சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள், அடையாளம், ப.51

*24. தீட்டு, ப.343*

*25. எதிர், ப.433*

*26. தேசிய விநாயகம்பிள்ளை, கவிமணி பாடல்கள், மலரும் மாலையும், ப.674*

*27. நிழல்உறவு, ப.27*

*28. வெளிச்சமற்றவை, ப.72*

*29. இடம், ப.237*

*30. மாறுதடம், ப.265*

*31. ரேகைக்காரன், ப.290*

*32. கசிவு, ப.313*

*33. நசுக்கம், ப.379*

*34. நவீனம், ப.426*

*35. சிதறல், ப.455*

*36. ஹரி, விஜயலெட்சுமி, இராஜம்கிருஷ்ணன், புதினங்களின் பெண் மாந்தர், ப.45*

*37. மேலது, பக்.46-47*

*38. கோ.வே.கீதா, ஜானகிராமனின் நாவல்கதை, ப.18*

*39. புதுப்பழக்கம், ப.259*

*40. பங்கீடு, ப.417*

*41. நிழல்உறவு, ப.29*

*42. அவளும் அவளும், ப.472*

*43. எஞ்சியது, ப.199*

*44. கசிவு, ப.317*

*45. நிழல் உறவு, ப.30*

*46. அடையாளம், ப.51*

*47. வெளிச்சமற்றவை, ப.72*

*48. காயம்பட்டவனும் காக்கைகளும், ப.120.*

இயல் – 3

# பெண்களின் பன்முக அவலங்கள்

## பொருளடக்கம்

# பெண்களின் பன்முக அவலங்கள்

## முன்னுரை

தொல்காப்பியர் காலந்தொட்டுத் தமிழ்க் குடும்பங்களில் கைம்பெண்கள் தனித்து வாழும் தன்மையுடையராய் விளங்கி வருகின்றனர். கணவனை இழந்தோர் மொட்டை மரங்கள் போலக் காட்சியளித்ததாகப் புறநானூறு கூறுகின்றது. வளையல் களைந்த நிலையும் புறநானூற்றில் உண்டு. நூல் நூற்றுத் தொழில் மேற்கொண்ட கைம்பெண்களை நற்றிணை காட்டுகின்றது. கூந்தல் கொய்தல், மலர், திலகம், அணிகலன்கள் அணியாமை பற்றிய குறிப்புகள் பழந்தமிழ் இலக்கியங்களில் வந்துள்ளன. இக்கால இலக்கியங்களும் இளம் விதவைப் பெண்கள் நிலைகளைக் காட்டுகின்றன. புறத்தோற்ற மாற்றங்கள் மட்டுமின்றி உள்ளத்தாலும் பாதிப்படைந்து துன்புறும் நிலையை சுப்ரபாரதிமணியன் விளக்கியுள்ளார். சமூகத்தைத் திறனாய்வு செய்ய எண்ணும் படைப்பாளர்கள் சமூகத்தின் அடித்தளமான குடும்பத்திலிருந்தே தங்களது திறனாய்வைத் தொடங்குகின்றனர். இதுவே ஒரு சரியான முறை ஆகும். அப்பொழுதுதான் அடித்தளத்தில் இருந்து மேல்தளம் வரை சமூகத்தைத் திறனாய்வு செய்த ஒரு நிறைவு ஏற்படும். எனவே இன்றையப் படைப்பாளர்கள் சமூகத்தின் அடித்தளமான குடும்பத்தை, மையப் பொருளாகக் கொண்டு தங்களது படைப்புகளை உருவாக்குகின்றனர்.

சுப்ரபாரதிமணியன் அவ்வாறு படைக்கப்பட்ட குடும்பத்தின் நிகழ்வுகளான குடும்பத்தின் உயர்வு, தாழ்வு, உழைப்பு, மனைவியின் நிலைப்பாடுகள், காதல், வரதட்சனை, பாசம், சாதிக்கொடுமை, பாலியல் போன்றவற்றை ஆய்வு செய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது. அவர்தம் படைப்புகள் வழி தனித்து வாழும் பெண்களின் சமூகப்

பொருளாதார ஏற்றத்தாழ்வுகளையும் குடும்பம், பணிக்குச் செல்லும் பெண்களின் நிலை, சமூகத்தில் பெண்களுக்கு நேர்கிற பல்வேறு இன்னல்கள் போன்றவற்றை ஆசிரியரின் கதைகள் வாயிலாக இவ்வியலில் விரிவாக ஆராயப்படுகிறது.

**சமூகம் - விளக்கம்**

தனித்து வாழும் இயல்பு மனிதனுக்கில்லை. மனிதன் பலரோடு சேர்ந்தே வாழ்கிறான். ஒரு குறிப்பிட்ட இடத்தில் சேர்ந்து வாழும் போது மக்கள் கூட்டம் 'சமூகம்' என்று அழைக்கப்படுகிறது. தனி மனிதர் பலராக இணைந்து தங்களுக்கிடையே சில குறிப்பிட்ட நடை, உடை, பாவனைகளை வளர்த்துக் கூட்டமாக வாழும்போது அது சமூகம் என்றழைக்கப்படுகிறது. படைப்பாளி சமூகத்தின் ஓர் உறுப்பினரே. அவன் படைக்கும் படைப்பு சிறப்படைய சமூகம் துணை செய்கிறது.

"நவீன இலக்கியத்தின் வெற்றி தோல்வி அவை ஏற்படுத்தும் சமூகத் தாக்கத்தைக் கொண்டே தீர்மானிக்கப்படுகிறது."[1] ஆதலின் சமூகமும், இலக்கியமும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன என்பது புலனாகிறது.

இன்றைய சமுதாயத்தில் குற்றங்களும், குழப்பங்களும் மலிந்துவிட்டமையால் இன்றைய மனித வாழ்வு அமைதியற்று விளங்குகிறது. சாதி, சமய, வரதட்சனை, பெண் கொடுமை, குழந்தை மணம், விதவைக் கொடுமை போன்ற வேறுபாடுகளால் மனித மனம் சிதைந்துள்ளது. எங்கு நோக்கினாலும் தீய சக்திகளின் ஆதிக்கம் காணப்படுகிறது. பெண் கற்பழிப்பு, பெண் சிசுக்கொலை, திருட்டு என நாள்தோறும் வரும் செய்திகள் மனித மனத்தை அலைக்கழிக்கின்றன.

தட்பவெப்ப மாறுதல்களால் பசி, பட்டினி, வேலையின்மை, வேலைக்கேற்ற ஊதியமின்மை, ஏமாற்றம் ஆகியன ஏற்படுகிறது. பெண் இனத்திற்கு அளிக்கப்படும் கொடுமையில் உலகை இச்சமூகம் அழிவுப் பாதைக்குக் கொண்டு செல்கிறது.

**இலக்கியமும், சமுதாயமும்**

இலக்கியங்கள் தோன்றிய காலத்திலிருந்து அதன் சமூகத் தாக்கத்தைக் கொண்டுள்ளன. படைப்பாளர்கள் தாம் வாழும் சமூகப் பின்புலத்தை மையப்படுத்தியே இலக்கியங்களைப் படைக்கின்றான். “சமூகத்திற்கும் படைப்புக் கலைக்கும் உள்ள உறவு பிரிக்க முடியாததும் புறக்கணிக்க இயலாததுமாகும்.”[2] படைப்பாளர்களின் சமூகப் பார்வை புதிய படைப்புகளைப் படைப்பதற்கு வழிவகை செய்கிறது.

சமுதாயப் பார்வை என்பது மனித சமுதாயத்தைக் குறித்த சிந்தனை ஆகும். மனிதர்கள் பலதரப்பட்டவர்கள். சிலர் தம்முடைய வாழ்க்கைச் சூழலில் ஏற்படும் நிகழ்வுகள், அச்சூழலில் வாழ்வோரின் வாழ்க்கை போன்றவற்றைப் பற்றிச் சிந்தனை செய்து பின் மறந்துவிடுகின்றனர். இன்னும் சிலர் தம் சூழலில் நடக்கின்ற ஒவ்வொன்றிலும் ஆழமான கவனம் செலுத்துகின்றனர். சிலர் சமுதாயத்தின் நிறை குறைகளைப் பற்றித் தீர்க்கமாகச் சிந்திக்கின்றனர். குறைகளையும், சீர்கேடுகளையும் களைவதற்குரிய வழிமுறைகளையும் காண்கின்றனர். இத்தகையவர்கள் சமூகப் பண்புடையவர்கள் ஆவர். அவர்களுடைய சமுதாயம் குறித்த சிந்தனைகள் சமுதாய வளர்ச்சிக்கும், மாற்றத்திற்கும் தூண்டுகோலாய் அமைகின்றன. சுப்ரபாரதிமணியன் படைப்புகள் சமூக மாற்றத்தைக்காண விரும்பக்கூடியதாகும்.

இலக்கியம் வாழ்க்கைச் சொல்லில் வடித்துக் காட்டுகின்றது. இலக்கியம் உணர்வு நிலையில் பல வகைகளைப் பெற்றுள்ளது. சங்க காலத்திலிருந்து தற்காலம் வரை எண்ணற்ற இலக்கியங்கள் தமிழில் தோன்றியுள்ளன. இலக்கியம் என்பது மனித வாழ்க்கையைப் பிரதிபலித்துக் காட்டுகின்ற ஒப்பற்ற கலைத்துறையாகும். மனித சமுதாயத்தில் படிப்படியான வளர்ச்சிநிலைகளை அவ்வக்கால இலக்கியங்களின் வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது.

உலகில் சட்டங்கள் போட்டுச் சாதிக்க முடியாதவற்றையெல்லாம் படைப்பாசிரியர்கள் படைப்புகளால் சாதித்துவிடுகின்றனர். உலக வரலாற்றில் பல புரட்சிப் போர்களுக்கு அறிஞர் பெருமக்களின் எழுத்துக்களே தூண்டுகோளாய் அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. அத்தகைய சமுதாயச் சிந்தனைகளோடு வாழையடி வாழையாக படைப்புகளைப் படைத்த படைப்பாளர்களுள் சுப்ரபாரதிமணியன் மிகவும் குறிப்பிடத்தக்கவர். இன்று மண்மூடிக்கிடக்கும் மூட நம்பிக்கைகளை, அறியாமையை ஏற்றத்தாழ்வுகளைத் தடயமில்லாமல் துடைத்தெறிவதற்கு சுப்ரபாரதிமணியனின் படைப்பு துணைநிற்கின்றது.

இலக்கியம் படைப்பாளியின் உள்ளத்து உணர்ச்சிகளின் வெளிப்பாடாக அமைகின்றது. படைப்பாளி தம் சிந்தனை, உணர்ச்சி போன்றவற்றை வெளியிடுவதற்கு இலக்கியம் ஒரு கருவியாக விளங்குகின்ற காரணத்தால் அவனுடைய இலக்கியப் படைப்பில் சமுதாயத்தின் சாயல் காணப்படுவது தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

“சமுதாயத்தின் உணர்வுகளோடும் உண்மைகளோடும் தான் இலக்கியங்கள் பிறக்கின்றன. அவ்வாறு, அவற்றால், அவற்றோடு,

அவற்றிக்கிடையே தோன்றாத இலக்கியங்கள் காலத்தை வெற்றி கொண்டு நீடு வாழ்தல் அரிது"[3] ஆகும்.

இன்றைய சமுதாயத்தில் நிகழ்கின்ற அவலங்களைக் கண்டு கோபங்கொண்டு தம் பேனாவைச் சிலபோது அமிலத்தில் தோய்த்து அவலம் போக்க முனைந்துள்ள சுப்ரபாரதிமணியன் தன் உள்ளத்தில் பட்டதை உலகிற்குப் படைப்புகள் மூலம் வெளிப்படுத்துகிறார்.

**குடும்பம்**

விலங்கு நிலையில் தனி மனிதனாக வாழ்ந்தவன் நாகரிகத்திற்கு உட்பட்டுக் கூட்டு வாழ்க்கையை மேற்கொண்ட போது அங்கே அடித்தளமாக்கப்பட்டது குடும்பமாகும். சமுதாய ஒப்புதல் பெற்று ஆளுமைப் பருவம் எய்திய ஆணும், பெண்ணும் கூடி வாழுகிற குழுவே குடும்பம் என்று அழைக்கப்படுகிறது. அக்குழுவில் கணவன், மனைவி அவர்கள் ஈன்ற குழந்தையும் அடங்கும் கணவன் மனைவி உறவில் ஒரு வீட்டில் உண்டு வாழ்ந்து. சமூகத்தின் பல்வேறு தாக்குதலுக்கும் தாக்குப்பிடித்து இறுதிவரை இந்த உறவையே முழுமையாகக் கொண்டு வாழ்க்கையை நகர்த்துகின்ற போது தான் குடும்பம் சிறப்படைகிறது.

குடும்பம் என்பது பல காரணங்களின் அடிப்படையில் அமைந்த ஒரு குழு எனலாம். அது திருமணத்தில் தொடக்கம் கொள்கிறது. அறம், சட்டம், பொருளாதாரம், மதம், பாசம், சமூக உரிமைகள் ஆகியவற்றால் இணைக்கப்பட்டுள்ளது எனலாம்.

"மனித சமுதாயத்தில் இரத்தத் தொடர்புடையவரும் பொதுவாக ஒரே வீட்டில் வசிப்பவரும் குறிப்பாகப் பெற்றோரும் குழந்தைகளும் அடங்கிய ஒரு குழுமமே குடும்பமாகும்."[4] குடும்பத் தலைவனான

கணவன் குடும்பத்தின் உயர்விற்காகத் தன்னை முழுமையாக அர்ப்பணிக்கிறான். அவனது சிந்தனைக்கும் செயல்பாட்டிற்கும் ஏனைய உறுப்பினர்கள் ஒத்துழைக்கின்றனர். இக்கூட்டு முயற்சியின் விளைவாகக் குடும்பம் வளர்ச்சி பெறுகின்றது. குடும்பம் வளர்ச்சி பெறும்பொழுது சமூகமும் வளர்ச்சி பெறுகின்றது. ஒருவன் குடும்பத்தில் எவ்வாறு உருப்பெறுகின்றானோ அவ்வாறே சமூகத்திலும் நடந்துகொள்வான்.

இந்திய சமுதாயத்தில் சிறப்புற்று இருந்த கூட்டுக் குடும்பம் என்ற அமைப்பு சிதைந்து தனிக் குடும்பங்களாக உருவாகியுள்ளன. ஆயினும், சில இடங்களில் கூட்டுக் குடும்பம் சிறப்பாக வாழ்வதையும் காணமுடிகிறது. சுப்ரபாரதிமணியன் படைப்புகளில் தனிக்குடும்பம் பரவலாகவும் கூட்டுக் குடும்பம் அருகியும் காணப்படுகின்றன. தனிக்குடும்பத்தின் வளர்ச்சியிலும், கூட்டுக் குடும்பத்தின் வளர்ச்சியிலும் பெண்களின் பங்கு மிகவும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது என்பதை ஆசிரியரின் படைப்புகள் வழி அறியமுடிகிறது.

**தனிக்குடும்பம்**

குடும்ப அமைப்பில் தனிக்குடும்பம் மிகவும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. தனிக்குடும்பம் என்பது கணவன் - மனைவி ஆகியோர் தம் குழந்தையோடு தனித்து வாழ்கின்ற அமைப்புக் கொண்டதாகும். ஒரு காலகட்டத்தில் கூட்டுக் குடும்பத்தில் உள்ளடக்கப்பட்ட இவர்கள் பொருளாதாரப் பற்றுக் காரணமாகவும், குழந்தைகளின் நல்வாழ்வுக்காகவும், சமூகத்தில் தனித்து சிறப்புற்று வாழ வேண்டும் என்ற எண்ணத்தாலும் கூட்டுக் குடும்பத்திலிருந்து வெளியேறியவர்கள் ஆவர். "இக்காலத்தில் சமூகத்தில் உள்ள ஒவ்வொரு

பருவம் வந்தவர்களும் தங்கள் பெற்றோரின் கட்டுப்பாட்டிலிருந்து விலகி சுதந்திரமாக இருக்க விரும்புகின்றனர்."[5]

தனி விருப்பத்தின் அடிப்படையில் தனித்து வாழ ஆசைப்பட்டு இன்றைய தலைமுறையினர் தனிக் குடும்பத்தை உருவாக்குகின்றனர். இன்றைய சமூகத்தில் தனிக் குடும்பத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. குறைந்த உறுப்பினர்களைக் கொண்ட இவ்வமைப்பில் உயர்வுக்கும் தாழ்வுக்கும் உறுப்பினர்கள் அனைவரும் முழுமையாகப் பங்கேற்கின்றனர்.

ஐந்து வகையான அமைப்புடைய தனிக் குடும்பங்கள் காணப்படுகின்றன. அவையாவன :

1. கணவனும்,மனைவியும் அடங்கிய குடும்பம்.
2. பெற்றோரும், பிள்ளைகளும் அடங்கிய குடும்பம்.
3. தாயும், குழந்தைகளும் உள்ள குடும்பம்.
4. தந்தையும், குழந்தைகளும் உள்ள குடும்பம்.
5. பாட்டியும், பேரனும் உள்ள குடும்பம்.

இவ்வகை தனிக் குடும்ப உயர்வுக்கும், தாழ்வுக்கும் பெண்களின் பங்கு மிகவும் முக்கியமான ஒன்றாகும்.

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் 27 கதைகள் தனிக்குடும்ப அமைப்புமுறையும் 56 கதைகளில் கூட்டுக் குடும்ப அமைப்பு முறையும் காணப்படுகிறது. மேலும் 71 கதைகளில் குடும்ப அமைப்புமுறை இன்றியும் கதைகள் சுட்டப்பட்டுள்ளன.

'சில வேறு தினங்கள்' எனும் சிறுகதை ஒரு தனிக்குடும்பக் கதை. பொறுப்பான மனைவி அக்குடும்பத் தலைவி. முன்கோபத்தனமான

கணவனைச் சமாளித்து அக்குடும்பத்தை வழிநடத்த அத்தலைவி படும்பாடு கணவன் மீது கொள்ளும் பயம் கதையாக உள்ளது.

"அப்பா முன் கோபிதான். அம்மா அதைச் சகித்து கொண்டு வந்திருக்கிறது பெரிய விஷயம். அப்பாவின் கோபம் எனக்காகி வந்திருக்கிறது. அம்மாவிடமிருந்து....... அம்மாவிடமிருந்து பயத்தையே நான் சுவ்கரித்துக் கொண்டேன். அம்மா அப்பாவைக் கண்டு கொள்கிற பயம் மீறி வீட்டு வேலைகள் கூடச் சிரத்தையாகச் செய்து முடிக்கப்பட வேண்டும் என்பதில் கூடப் பயம் கொள்வாள்"[6] இப்படிப்பட்ட கணவனோடு வாழும் பெண்ணின் துயரம் இக்கதையின் வழி ஆசிரியர் விளக்குகிறார்.

**கூட்டுக்குடும்பம்**

கூட்டுக்குடும்பம் என்பது ஒரு குடும்பத் தலைவன். அவனுக்கு கீழ் மனைவி, குழந்தைகள், தந்தை, தாய், உடன்பிறந்த சகோதரர்கள், சகோதரிகள் ஆகியோர் ஒன்றிணைந்து வாழ்க்கை நடத்துவதைக் குறிக்கும். அதாவது ஒரு மனிதனின் தலைமையில் ஒரே வீட்டில் அவனோடு உறவுமுறை உடைய பலரும் ஒன்று கூடி வாழ்வதே கூட்டுக் குடும்பம் என்று அழைக்கப்படுகிறது. கூட்டுக்குடும்பம் தமிழ்ச் சமூகத்தின் உயர்ந்த பண்பினை வெளிப்படுத்துகிறது என்று கூறலாம். இவ்வகை கூட்டுக்குடும்ப அமைப்பு கிராமப்புறங்களில் இன்னும் அதிகம் காணப்படுகிறது.

கூட்டுக் குடும்பம் என்பது உணவு முறையிலும் வேலையைத் தங்களுக்குள் பகிர்ந்து கொள்வதிலும் பாசத்தைப் பகிர்ந்து கொள்வதிலும் முக்கிய இடம் பெறுகிறது.

"கூட்டுக் குடும்பம் என்பது தனிக்குடும்பம் நிலையைவிடப் பெரியதாக அமைந்தும் மூன்று பரம்பரைகள் கூட ஒன்றாக வாழும் தன்மை உடையது."[7]

கூட்டுக்குடும்பத்தில் பாசம் யாவரையும் இணைத்துச் செல்கிறது. இணைத்துச் செல்வதற்குப் பெண்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றனர். ஆயினும் அங்குள்ள உறுப்பினர்களிடையே தனிமனித உரிமை விருப்பு வெறுப்பு காரணமாக அவ்வப்பொழுது பிரச்சனைகள் ஏற்படுவது இயல்பு. இப்பிரச்சனை இல்லாமல் இருப்பதற்குத் தனிக்குடித்தனம் சிறந்தது என்ற நிலைக்கு வருகின்ற நிலையினைக் காணமுடிகின்றது. வேலை நிமித்தம் காரணமாகத் தன் மனைவியை அழைத்துக் கொண்டு வேறு ஓர் ஊருக்குச் செல்கிறார். எப்போதாவது பார்க்கும் தன் உறவுகளைக் கொண்டு இக்கதை வளர்கிறது.

"சிவக்குமார் உங்களையே கேட்டிருக்கான் அப்பா..... தாத்தா ஊருக்குப் போறேன்னு சொன்னேன். பணத்தைப் பாக்கெட்டில் வைத்தபடியே தாராளமாய்ச் சிரித்தார். அவனை ஒரு கை கூட்டிட்டு வந்திருக்கலாம்ல...... கொழந்தே மொகம் பார்த்தாலே ஒரு சொகந்தா... சொமெ ஒரு பாடு கொறையுமே" என்கிறார் வெறிச்சென்றிருந்த வீதியைப் பார்த்தபடியே"[8] என்ற கூற்றில் கூட்டுக்குடும்பம் எத்தனைப் பாசங்களை உள்ளடக்கியது என்பதை அறியமுடிகிறது. சூழ்நிலை காரணமாக தனிக்குடித்தனம் சென்றாலும் மனநிறைவைத் தருவது கூட்டுக்குடும்பம் என்பதை தம் கதைகளின் வழி வெளிப்படுத்துகிறார்.

**பெண்களின் நிலை**

சமூகத்தில் பெண்கள் கருவறை முதல் கல்லறை வரையிலும் பிறரைச் சார்ந்து வாழும் நிலையில்தான் உள்ளனர். ஓர் அச்சில்

வார்க்கப்பட்டது போன்ற அமைப்பில் தான் பெண்கள் வாழ்க்கை உள்ளது. அதிலிருந்து அவர்களால் மீளவே முடியவில்லை.

பெண் இயல்பாகவே பல ஆற்றல்களைப் பெற்றவள். அறிந்தோ, அறியாமலோ முற்கால சமுதாயத்தில் அவளுடைய திறமைகள் வடிகட்டப்பட்டுப் பயன்படுத்தப்பட்டு வந்தன. 'மிக்கோனாயினும் கடிவரை இன்றே' என்று தான் தமிழன் பெண்ணைப் பார்த்துள்ளான். மனிதன் இனத்தைப் பெருக்குவதற்காகவும் குடும்பத்தைப் பேணுவதற்காகவும் மட்டுமே அவர்களுடைய ஆற்றல்கள் தேவைப்பட்டன போதிய கல்வியறிவு இல்லாததால் பெண்கள் வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடந்தனர். பின்னர் படிப்படியாக வளர்ச்சியடைந்து எட்டுத்திசைக்கும் சென்று எட்டும் அறிவினைப் பெற்றனர்.

தற்பொழுது எல்லாத்துறைகளிலும் அவர்களின் அரும்பணி ஆற்றலுடையதாக மிளிர்கின்றது.

"தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்து சோர்விலாள் பெண்"[9]

என்பது வள்ளுவம் இத்தகைய அறநூல்களில் பெண்ணின் சிறப்புக் கூறப்பட்டிருந்தாலும் அவர்களின் வளர்ச்சி சமுதாயத்தில் பின்தங்கிய நிலையில் இருப்பதைச் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள் சுட்டிக் காட்டுகின்றன.

பெண் வாழ்க்கையில் பாதி மட்டுமல்ல சமுதாயத்தில் பாதி. வாழ்க்கை முழுவதும் தாயாக, உடன் பிறந்தவளாக, மனைவியாக, தோழியாகத் தொடர்ந்து வருகிறாள். இன்று பாரதி கண்ட பெண்ணுரிமைச் சமூகம்

மலர்ந்து விட்டது என்று பெருமை கொள்கிறோம். உண்மையில் முழுமையான பெண்ணுரிமை சமுதாயம் மலரவில்லை என்பதை ஆய்வுக்குரிய சிறுகதைகளின் வழி அறியலாகிறது.

பெண்ணியத் தத்துவம் என்பது உலகலாவியது. இது உலகிலுள்ள அனைத்து மனித குலத்திற்கிடையே ஒவ்வொரு காலக்கட்டத்திலும் பெண்களின் முன்னேற்றத்தை விமர்சிக்க பெண்ணியப்பார்வை பெரிதும் உதவியது.

"பெண்ணியம் என்ற இயக்கமானது பெண்கள் தாமாக முடிவெடுத்து அவர்களின் விருப்பப்படி வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஒரு சமூகத்தை உருவாக்குவதாகும். இது பெண்களிடையே பல மாற்றங்களை ஏற்படுத்தி அவர்களின் மேற்கூறிய இலக்கை அடைவிக்க உதவும் புரட்சிகரமான செயற்பாடு உடையதாகும்" என்கிறார். இரா.பிரேமா.

பிறந்த வீட்டில் ஆண்களுக்கு கொடுக்கப்படும் உரிமை பெண்களுக்கு கொடுக்கப்படுவதில்லை. ஆதலால் ஒரு குறுகிய வட்டத்திற்கு உட்பட்ட பட்டறிவே பெண்களுக்கு கிடைக்கின்றன. அதற்கேற்ப அவர்களது மனப்பதிவும் அமைகிறது. எனவே இன்றைய நவீன யுகத்தில் பெண்களின் நிலை பரிதாபத்துக்குரியதாக அமைகிறது. இதனைப் படைப்பாளிகள் சிறுகதையின் மையக்கருவாக படைக்கின்றனர். நவீன இலக்கியங்களாகிய சிறுகதை, புதினம், புதுக்கவிதை போன்றவற்றில் பெண்கள் படும் இன்னல்களை அவ்வப்போது பதிவு செய்கின்றனர்.

*சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் வரும் ஆய்வுக்குரிய பெண் மாந்தர்கள் கீழ்வருமாறு வரிசைப்படுத்தலாம்.*

**சிறுகதை - கதைமாந்தர்**

*1. இடம் - ஜோதி*

*2. அவளும் அவளும் - சந்திரா*

*3. எஞ்சியது - சுஷ்மா*

*4. பங்கீடு - பெரியவர் மனைவி*

*5. ஆழம் - சிந்தாமணி*

*6. சிதைவு - ருத்ரம்மா*

*7. நிழல் உறவு - செல்லம்மா*

*8. வேற்றுமண்ணும் புதுக் குழந்தையும் - கிருஷ்ணவேணி*

*9. யோகம் - சரஸ்வதி*

*10. கசிவு - கண்மணி*

*11. சூரிய நாடா - நெசவு நூற்கும் பெண்*

*இக்கதை மாந்தர்கள் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் ஆய்வுக்குரிய மாந்தர்கள் ஆவார்.*

**பெண் கொடுமை**

*குடும்ப வாழ்விலும் சமுதாய வாழ்விலும் பெண்கள் பல்வேறு கொடுமைகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. பெண்கள் உடல் சார்ந்த, உணர்வு சார்ந்த பாலியல் வன்கொடுமைகள் அன்றாட வாழ்வில் கணவனால் மனைவியருக்கு ஏற்படும் மனபாதிப்பு குடும்பங்களில் காணப்படுகிறது.*

"பெண்படும் துன்பம், பசி, வேதனை, அவமானம் போன்ற அவலங்களை சித்தரிப்பதே பெண் சித்தரிப்பாகும்"[11] என்கிறார் அன்பு கஸ்தூரி அவர்கள். இல்லற வாழ்க்கையைப் புரிந்து கொண்டு வாழ்பவர் மிகச் சிலரே. ஆடவர் பலர் தாம் பயன்படுத்தும் உடமைப் பொருளாகவே பெண்களை நினைக்கின்றனர். பேச்சுக்களிலும் ஏச்சுக்களிலும் பெண்களை அவமானப்படுத்துகின்றனர். குடும்பத்தலைவன் தனது அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்திப் பெண்ணை வேதனைக்குள்ளாக்குகிறான். இதனை ஆசிரியரின் கதைமாந்தர்கள் மூலம் அறியலாம்.

'இடம்' என்ற சிறுகதையில் தங்கராஜ் தன் மனைவி ஜோதியை தான் நினைக்கும் போது தன் ஆசையை நிறைவு செய்யவில்லை என்பதால் இரவில் தூங்கும் போது அடிக்கிறான்.

"அவனின் கை அவளின் தலை மயிரைப் பற்றியது. இழுத்தான். அவள் 'ஆ' என்ற அலறலுடன் எழ முயர்ச்சித்தாள். 'திருட்டு நாயே' என்று முகத்தில் அறைந்தான். என்னங்க… என்னங்க… அவள் குரல் பயத்தில் சிதைந்திருந்தது. அவனின் அம்மா முதலில் எழுந்து மூலையில் சாத்தினதுபோல் உட்காந்திருந்தாள். என்னடா என்றாள். திருட்டு நாய்.. ஒரு ஆம்பளப் பெயரைத் திரும்பத் திரும்பத் சொல்லி உளர்றா… திருட்டுச் சுகத்திலே ருசி வந்திருச்சோ என்னவோ… இல்லே பழைய உறவு ஏதாச்சுவொ என்னவோ…"[12] என்ற தங்கராஜின் வார்த்தைகள் அவளை காயப்படுத்தியது. இவ்வளவு கேவலமாகத் தன்னை கூறுகின்றானே அவரது தாய், தந்தையர் விழித்தவுடன் ஏன் அடித்தாய் எனக் கேட்பதற்கு முன்பே ஒரு பொய்யான காரணத்தைக் கூறி சமாளிக்கின்றானே என நினைத்து வேதனைப்படுகிறாள். உண்மையான

காரணத்தை வெளியில் சொல்ல முடியாத ஜோதி படும் துயரத்தையும் பெண் கொடுமையையும் சுப்ரபாரதிமணியன் அழகுற வெளிப்படுத்துகிறார்.

**இன்னலான இல்வாழ்க்கை**

உழைப்பே வாழ்க்கை என வாழும் பெண்கள் தங்களுக்குக் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு வாழ்கின்றனர். கணவர் எப்படிப்பட்டவராக இருப்பினும் அவரை அனுசரித்துச் செல்பவர்களாகவே பெண்கள் படைக்கப் பட்டுள்ளனர். ஆசிரியரின் பெரும்பாலான சிறுகதைகள் இதே அமைப்பில் உள்ளது குறிப்பிடத்தக்கது.

'அவளும் அவளும்' என்ற சிறுகதையில் வரும் 'சந்திரா' என்பவள் கணவனோடு சண்டையிட்டு, அடிபட்டு தன் தாய்வீட்டுக்கு வந்துள்ளாள். அங்கு "சந்திராவைத் தொட்டணைத்து அவளுக்கு ஆறுதல் சொல்ல வேண்டும் எனப்பட்டது. உங்கப்பனோட நான் வாழ்ந்ததுக்கும், நீ சண்முகத்தோட வாழ்றதுக்கும் பெரிசா வித்யாசம் தெரியலே எனக்கு..."[13] என்று சந்திராவின் அம்மா கூறுவதிலிருந்து எவ்வகைத் துன்பங்களை இருவருமே அனுபவிக்கின்றனர் என்பதை உணரமுடிகின்றது. வாழ்க்கை முழுவதும் வேதனையும், சலிப்பும் இருப்பதை பெண்கள் கூற்றின் மூலம் உணரமுடிகின்றது.

**குறிப்பறியும் மனைவி**

மூத்த தலைமுறையைச் சார்ந்தவர் 'பங்கீடு' என்ற சிறுகதையில் வரும் பெரியவர். தன் மனைவியின் இறப்புக்கு பின் தன் வாழ்க்கையும் போய்விட்டது எத்தனை உறவுகள் இருப்பினும் தன் மனைவிக்கு ஈடாகாது எனறு நினைக்கிறார். அவள் இருக்கும்போது நினைத்தவுடன் தன் தேவையை அறிந்து நிறைவேற்றி வைப்பாள். இனி யாரையாவது எதிர்பார்த்துதான் வாழவேண்டும், பெற்ற பிள்ளைகள் மூன்று

அவையும் வந்து தன் சொத்துக்களை பங்கிடுவதையே குறியாக உள்ளனர் என நினைத்து மனதில் நொந்துகொள்கிறார்.

"கண்களில் நீர் வழியும் அம்மாவுக்கு முகத்துச் சுருக்கக் கோடுகளில் நீர் தாரையும் கலக்கும் எதையோ எதிர்கொள்கிற பயம்." "சரசரவென வாசைலை நோக்கி நடக்க ஆரம்பித்தார். பங்குபோட்ட பாத்திரங்களை எடுத்துக் கொண்டவர்கள் தட்டியும், உரசியும் பார்த்துக்கொண்டிருந்தனர். சங்கு இப்போது கைகள் மாறி குழந்தைகளுக்குள் திரிந்துகொண்டிருந்தது நாதமாய் சப்தம் யாரிடமிருந்தும் வரவில்லை"[14] என்ற புலம்பலில் மனைவியின் பாசநிலை விளங்குகிறது. மக்கள் செய்யாததை மனைவி குறிப்பறிந்து கணவனுக்குச் செய்பவள், மூத்த தலைமுறைப் பெண்களில், மனைவி நிலையில் இருப்பவர்கள் குறிப்பறிந்து செயல்படுபவர்கள் என்பதை இப்பகுதி விளக்குகிறது. சார்ந்து வாழும் நிலையில் நோயாளியாகக் கிடக்கும் கணவனுக்குப் பணிவிடைகள் குறிப்பறிந்து செய்பவள் மனைவிதான். பெண்ணின் இயல்புகளும் வருங்காலத்திலும் மனைவி உறவு இவ்வாறு அமையின் சமுதாயம் நலம் பெறும் என்பதையும், மனைவி இறந்த நிலையில் வெயிலின் அருமை நிழலில்தான் தெரியும் என்பதையும் ஆசிரியர் இப்பாத்திரக்கூறு வழி உணர்த்துகிறார்.

**காதல் மனைவி**

'வேற்று மண்ணும் புதுக் குழந்தையும்' என்ற சிறுகதையில் வரும் கதாப்பாத்திரம் சுந்தரன். இவன் தன் மனைவி கிருஷ்ணவேணியை பிரசவத்திற்கு அவள் தாய் வீட்டில் விட்டுவந்துள்ளான். வந்ததும் தன் மனைவியின் நினைவாகவே உள்ளான். கிருஷ்ணவேணியும் தன்னைப்

பார்க்க சுந்தரன் எபபோது வருவான் எனக் காத்து நிற்கிறாள். குழந்தை பிறந்தது. சிறிதுகாலம் அங்கு இருந்தாள் கிருஷ்ணவேணி.

"சுந்தரனுக்கு வீட்டை விட்டுப் பிரிந்து வரும்போது கண்களில் நீர் தளும்பி விழுகிறது. துக்கத்தை அடக்கக் கஷ்டப்படுபவன்போல் உதடு பிதுங்கி அழுகையைத் தவிர்க்க வேண்டியுள்ளது. இந்தமுறை கிருஷ்ணவேணியும் அழுதாள். குழந்தையின் சிரிப்பையும் மழலையையும்விட கிருஷ்ணவேணியின் அழுகைதான் ஞாபகம் இருக்கும்"[15] என்று சுந்தரன் தனக்குள் ஆறுதல் அடைந்துகொள்கிறான். இவ்வகையில் மனைவியானவள் கணவனுக்குப் பிரியமானவளாக விளங்குகிறாள். கிருஷ்ணவேணி காதல் மனைவியாக விளங்குவதை இப்பகுதியின் வழி அறியலாம்.

### "மலடி" என்ற பட்டம்

சமூகத்தில் திருமணமான பெண்ணுக்கு குழந்தையில்லை என்றால் இச்சமூகம் அப்பெண்ணை 'மலடி' என்ற பட்டம் சூட்டுகிறது. இதில் ஆணுக்கு எந்த பங்கும் இருப்பதில்லை. கணவனை இழந்த மனைவிக்கு 'விதவை' என்ற பெயரும் குழந்தையின்மையால் 'மலடி' என்ற பெயரும் பெண்களுக்கு மட்டுமே உரியது.

இதனை 'யோகம்' என்னும் சிறுகதையில் சுப்ரபாரதிமணியன் குறிப்பிடுகிறார். சரஸ்வதி என்ற பெண் குழந்தையின்மையால் அவ்வூர் மக்களால் 'மலடி' என்று அழைக்கப்படுகிறாள். வறண்ட அவ்வூர் மக்கள் குடிநீருக்குக் கஷ்டப்பட்டனர். அவ்வூர் மக்கள் சேர்ந்து கிணறு தோண்டி போர்போடத் தீர்மானித்தனர். அப்போது அங்கு ஊற்று ஊரிய நிலம் சரஸ்வதியின் நிலம். இப்பகுதியில் "கன்னியப்பனுக்கு

எடமில்லெ... அவன் பொண்டாட்டி பேர்ல்லதா இருக்கும்...” “அந்த மலடி பேர்லியா?” மலடிக்கும் யோகம் இருக்குமா? என்ற பரிசீலித்தார்கள். நமுட்டுச் சிரிப்பாய் குழந்தை இல்லாத்தனம் பேசப்பட்டது.” சரஸ்வதி இனிநான் மலடியில்லை...” நான் மலடியில்லை...” என்ற சரஸ்வதியின் குரல் மெஷினின் இரைச்சலை மீறி உடம்புகளை மோதினபடி திரிந்தது.”[16]

‘யோகம்’ என்னும் கதையின் வழியாக பெண்கள் படும் மனவருத்தத்தையும் அவர்களுக்கு இச்சமூகம் கொடுக்கும் பட்டங்களையும் சுப்ரபாரதிமணியன் எடுத்துக்காட்டுகிறார்.

**வரதட்சனை**

இன்று பருப்பில்லாமல் கல்யாணம் நடக்கலாம் ‘வரதட்சனை’ இல்லாமல் கல்யாணம் இல்லை என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. வரதட்சனை என்பது பிள்ளை வீட்டாருக்குப் பெண் வீட்டார் கொடுக்கும் பணம். பெண் வீட்டார் கொடுப்பது என்றால் அவர்கள் விரும்பியபடி அல்ல. பிள்ளை வீட்டார் கேட்டபடி கொடுப்பதாகும். வரனுக்குத் தட்சனை என்ற பெயரில் திருமணத்தை வியாபாரமாக்கி விட்டார்கள். பெண் வீட்டாரும் எப்படியாவது தன் பெண்ணுக்குத் திருமணம் முடிந்தால் சரி என்று மாப்பிள்ளை வீட்டார் விருப்பத்திற்கே உடன்பட்டு வரதட்சனை கொடுத்துவிடுகிறார்கள்.

நம் சமுதாயத்தில் ஒரு பெண் பிறந்த வீட்டிலிருந்து புகுந்த வீட்டிற்கு அதாவது தான் அறியாத புது மனிதர்கள் வாழும் வீட்டிற்குப் போய் வாழ வேண்டும். அவள் தன் கணவனுடன் இணைந்து அவனுடைய சுகம், துக்கம், கோபதாபம் முதலியவற்றுக்கு ஈடுகொடுத்துப் பொறுமையே உருவமாகக் குடும்பம் நடத்துகிறாள்.

மேலை நாடுகளில் திருமணம் ஆனதும் பெண்ணும் மாப்பிள்ளையும் தனிக்குடித்தனம் நடத்துகிறார்கள். மற்றவர்கள் தொல்லையுமில்லை, அவர்களது பழக்கவழக்கம், பண்பாடு, கலாச்சாரம் வேறுமாதிரி அமைந்துள்ளது. அவர்கள் தாங்களே பொருளீட்டித் தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைத் தேடிக்கொள்கிறார்கள். நம் நாட்டின் நிலை வேறு, பிள்ளைகள் விவசாயம் செய்துகொண்டு இருக்கும்போதோ, படிக்கும்போதோ அல்லது வேலைக்குப் போவதற்கு முன்போ திருமணம் நடந்துவிடுகின்றது. இவர்கள் குடும்பம் நடத்தப் பெற்றோர்களைச் சார்ந்து வாழவேண்டிய நிலை உள்ளது.

இதனால்தான் ஆரம்ப காலங்களில் பெண்வீட்டார்கள் சீர் என்ற பெயரில் பாத்திரங்கள், மரச்சாமான்கள், பூசைப் பொருட்கள், வெள்ளிப் பொருட்கள், அவசியமான நகைகளைக் கொடுத்து அனுப்புவது வழக்கமாக இருந்தது. இவை யாவும் பெண் புகுந்த வீட்டில் புதிய இடத்தில் சிரமத்திற்கு ஆளாகக்கூடாதே என்பதற்காக விரும்பிக் கொடுத்துவந்தார்கள். மாப்பிள்ளை வீட்டார் கேட்பது கிடையாது. நாளடைவில் வரதட்சனை இன்றி ஒரு திருமணம் நடக்காது என்ற நிலை ஏற்பட்டது.

திருமணத்தின்போது வரதட்சனை கொடுப்பதையும் வாங்குவதையும் தடைசெய்து 1961 ஆம் ஆண்டு சட்டம் கொண்டுவரப்பட்டது. வரதட்சனை தடைச் சட்டத்தில் வரதட்சனை கொடுப்பதும் வாங்குவதும் குற்றமாகும். வரதட்சனை கேட்டுக் கொடுமைப்படுத்தும் கணவனுக்குச் சிறைத் தண்டனையும் அபராதமும் விதிக்கச் சட்டம் வகை செய்கிறது.

‘எஞ்சியது’ என்ற சிறுகதையில் நன்றாக வாழ்ந்த குடும்பம் வறுமையில் கஷ்டப்படுகிறது. தன் மகள் சுஷ்மாவைத் திருமணம் செய்து கொடுக்கப் பணம் இன்றிக் கஷ்டப்படும் தந்தை, தன் வீட்டில் உள்ள பழைய மரச்சாமான்கள் விலை உயர்ந்த அவற்றை விற்று தன் வீட்டுத் தேவைகளைப் பூர்த்திசெய்யவேண்டிய நிலை. அச்சாமான்களை வாங்க வரும் ரவீந்திரன் இவர்களின் நிலையைக் கண்டு மனம் வருந்துகிறான்.

வரதட்சனை கொடுத்து திருமணம் செய்ய முடியாத சூழலில் ‘சுஷ்மாவின்’ தந்தை உள்ளார். இதனைப் போன்று இருக்கும் பெண்களின் வாழ்க்கை நிலையின் சுப்ரபாரதிமணியன் விளக்குகிறார். வரதட்சனை வாங்காமல் சுஷ்மாவை இரக்கப்பட்டு யாராவது திருமணம் செய்துகொண்டால்தான் அவளுக்கு வாழ்க்கை, இல்லையேல் சுஷ்மா வாழ்க்கை என்னவாகும் என ரவீந்திரன் நினைத்துக் கொண்டுதான் அவ்விடத்தை விட்டு நகர்கிறார். ஒருவேலை எனக்குத் திருமணம் ஆகாமல் இருப்பின் அவர்களுக்கு உதவியிருக்க முடியும் என்று மனதில் நினைக்கிறார்.

சுப்ரபாரதிமணியன் பெண்களை வரதட்சனை இன்றித் திருமணம் செய்துகொள்ள ஆண்கள் முன்வரவேண்டும் என்ற கருத்தையும், வரதட்சனையால் சுஷ்மாவைப் போன்று முதிர் கன்னிகளாகும் பெண்கள் இன்னும் எத்தனை பேரோ என்ற ஆசிரியரின் கருத்தையும் இக்கதையில் வெளிப்படுத்துகிறார்.

**பாலியல் கொடுமை**

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் பெண்கள் பாலியல் சுரண்டலால் பாதிக்கப்படுவதைக் காட்டுகிறார். பாலியல் உணர்வு

என்பது உலகத்து உயிர்களிடம் இயல்பாகக் காணப்படும் ஓர் உணர்வுதான் எனினும் பகுத்தறிவு படைத்த மனிதர்களிடம் இவ்வுணர்வு பலநிலைகளில் செயல்படுகிறது. அவ்வுணர்வு மிகும் போது மிருகநிலைக்குத் தள்ளப்படுகிறான். இயல்புநிலை பிறழ்வு நிலையாக மாறிவிடுகிறது.

"பாலியல் மாறுபாடு என்பது நடைமுறையில் உள்ள சட்டதிட்டங்களுக்கோ, சமுதாய ஒழுக்கப் பண்பாட்டிற்கோ சிறிதும் பொருந்தாமல் முற்றிலுமாக மாறுபட்டது. சில சமயங்களில் ஏற்படும் விளைவுகளும் பாதகமானவை. சமுதாய வரையறைக்கு உட்படாதவை"[17] என்றும் உறவியல் அறிஞர் தமிழவன் கூறுகிறார்.

"எந்த மனிதனும் காம உணர்வை நிறைவுசெய்துகொள்ளும் ஆற்றல் பெற்றவனே என்பதால் கிடையாத பதிவிரதா தர்மப்படி மாறான வகைகளில் இன்ப உணர்வை அனுபவிக்க முற்படும் போது பாலியல் கோளாறுகள் தோன்றுகின்றன. பாலியல் உணர்வு உடல் தேவையோடு இணைந்து காணப்படும் இயல்பினை உடையது"[18] என்பார் பா.ஸ்ரீ.

'ஆழம்' என்னும் சிறுகதையில் சிந்தாமணி என்ற கதைமாந்தர் பனியன் கம்பெனியில் வேலை பார்ப்பவள். அங்கு உள்ள முதலாளிகள் வேலை செய்யும் பெண்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். சில நேரங்களில் மிரட்டியும் நினைத்ததைச் சாதிக்கின்றனர். மறுத்தால் வேலை போகும் என்று அப்பெண்கள் பயப்படுகின்றனர். இவ்வேலையை விட்டு வேறு கம்பெனி சென்றாலும் அங்கும் இந்நிலைதான் என்பது சிந்தாமணிக்குத் தெரியும். இதனை, "சட்டென விலகின கதவின் இடைவெளி உள் அறையின் மேற்கு மூலையைக் காட்டியது. கட்டிலில்

கசங்கிக் கிடந்த துணிபோல் சௌந்தரி கிடந்தாள். அந்த அறைக் கட்டில் முதலாளியின் ஓய்வு நேரத்திற்கென்று இருக்கும். இப்படி யாரையாவது கிடத்தி வேடிக்கை பார்ப்பான். அந்தச் சமயங்களில் அந்த அறை வாசலில் யாராவது ஒருவர் நின்றிருப்பர்."[19]

இதனைப் பார்த்தபடியே சிந்தாமணி தன் வேலைகளைப் பார்த்தாள். இந்த நிலை என்றோ ஒருநாள் தனக்கும் நேரலாம் என்ற பயத்துடனே வேலையைத் தொடர்ந்தாள்.

'சிதைவு' என்ற சிறுகதையில் வரும் கதைமாந்தர் 'ருத்ரம்மா' இவள் வீட்டுவேலை செய்யும் இடத்தில் முதலாளியால் பாலியல் வன்முறைக்கு ஆளாகிறாள். இருந்தும் வேறு இடம் செல்ல வழியின்றி அங்கேயே தங்கிவிடுகிறாள். மீண்டும் அங்கேயே வேலைக்குச் செல்கிறாள்.

"தோட்டத்தில் நுழைந்த ஆட்டைப் பார்த்தாள். கல்லை எடுத்து வீசியெறிந்தாள் ருத்ரம்மா. இதே போல் தனக்குப் பிடிக்காதவர்களையும் கல்லெறிந்து துரத்தினால் எப்படியிருக்கும். தான் கல்லெறிய வேண்டிய முதல் ஆள் முதலாளியாகத்தான் இருக்கும். கூடவே சின்னவரின் சில்விஷமங்கள் அவளுக்கு அருவருப்பூட்டின."[20] சமுதாயத்தில் மனித நேயத்தைச் சீர்குலைப்பதற்கு ஒருசில காமக் கொடுமைக்காரர்கள் இருக்கின்றனர். அவர்களைச் சட்டத்தின் மூலம் தண்டனை அளிக்கவேண்டும் என ஆசிரியர் விரும்புகிறார்.

**விதவைத்தாயின் வறுமைநிலை**

'கொடிது கொடிது வறுமை கொடிது ; அதனினும் கொடிது இளமையில் வறுமை' என்பர் ஔவையார். போதிய வருமானம் இன்மையால் தன் அடிப்படைத் தேவைகளையும் நிறைவேற்ற இயலாத

நிலையில் உள்ளவர்களை வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ளவர்கள் எனலாம்.

'நிழல் உறவு' என்ற சிறுகதையில் வரும் கதைமாந்தர் செல்லம்மா. இவள் விதவை, இரு குழந்தைகளுக்கு தாய். தான் கஷ்டப்பட்டு மோர் வியாபாரம் செய்து இரு குழந்தைகளையும் வளர்ப்பவள். கூடையில் மோர் சுமந்து ஒவ்வொரு ஊராகச் செல்வாள். அதில் வரும் பணத்தைக் கொண்டு தன் இரு பிள்ளைகளையும் பாசத்துடன் வளர்க்கிறாள்.

ஒழுக்கத்துடன் வாழவேண்டும் என தன் பிள்ளைகளுக்கும் சொல்லிக்கொடுத்து வளர்க்கிறாள். யாராவது ஏன் இவ்வளவு கஷ்டப்படுகிறாய் என்று கேட்டாள். அதற்கு "ஆம்பெள இல்லாத வூட்லே சம்பாத்தியத்திற்கு என்ன பண்ண முடியும்?" வயசுக்கு வந்த பொம்பள புள்ள ஒருத்தி இருக்கிறதை மறந்திட முடியுமா?"[21] என்பாள். பொறுப்புள்ள ஒரு தாயாகத் தன் குடும்பத்தை வழிநடத்தும் ஒரு விதவைத் தாயின் வறுமை நிலையை ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

**உழைப்பும் களைப்பும்**

நெசவுத் தொழில் செய்யும் பெண்ணின் அவல நிலையையும் அவள் படும் துயரத்தையும் ஆசிரியர் காட்டுகிறார். கைத்தறி நாடா அளவில் சற்று சின்னதாகவே இருக்கும். பவர்லூம் நாடாவின் அளவு சற்று பெரிதாக இருக்கும். நாடாவை விட்டு வாங்கி இழை இழையாய் கோர்த்து நெய்யும் சேலையின் வர்ணங்களில் ரத்தத் துளியும் இருக்கும் என்பதை அவள் பலமுறை பார்த்திருக்கிறாள்.

"அவள் நெய்து கொண்டிருந்த ஒருநாளில் வயிறு ஏகமாய் வலிக்கிறதே என்று தறிமேல் சாய்ந்தபோதுான் உதிரப்பெருக்கெடுத்தது.

அப்போது மட்டுமல்ல பல சமயங்களில் அதை அனுபவித்துள்ளாள். கன்னங்களில் விரையும் கண்ணீரோடு தான் மரத்துப்போகாமல் இருந்ததை நாடாவின் கூரிய முனைகளில் உள்ளங்கையில் குத்தி பார்த்ததும்தான் தெரிந்துகொண்டாள்."[22]

'கூரிய நாடா' என்ற சிறுகதையின் வழி நெசவு நூற்கும் பெண்களின் துன்பங்களை சுப்ரபாரதிமணியன் உணர்த்துகிறார்.

**கணவனால் கைவிடப்பட்ட பெண்**

இன்றைய சமூக அமைப்பில் திருமணம் என்ற உறவால் ஆணோடு குடும்பம் நடத்தும் பெண் பல்வேறு நிலைகளில் பாதிக்கப்படுவதாக படைப்பிலக்கியங்கள் பதிவுசெய்து வருகின்றன. வரதட்சனை, பாலியல் கொடுமைகள், கணவன் இறந்த நிலையில் ஒரு பெண்ணின் நிலை, குழந்தைப் பேறு இல்லாத பெண் சந்திக்கும் பிரச்சனைகள், குடிப்பழக்கத்திற்கு அடிமையான கணவன்மார்களின் மனைவிகள் சந்திக்கும் போராட்டங்கள், இவற்றோடு கருத்து வேறுபாடுகளால் கணவனால் கைவிடப்பட்ட பெண்களின் நிலையும் கொடுமையாக காணப்படுகிறது. ஆய்வுக்குரிய சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் ஒன்றான 'நிழல் உறவு' என்னும் சிறுகதை இதனை நன்கு சித்தரிக்கிறது.

குடும்பப் பாசம் இல்லாத, குடும்பப் பொறுப்பு இல்லாத குடிப்பழக்கமுள்ள, உழைக்காத கணவன்மார்கள் மனைவியை மேலும் சீதனம் வாங்கிவரச் சொல்லியோ, வேறு சில தேவையில்லாத காரணத்தால் பிறந்த வீட்டுக்கு அனுப்புகின்றனர். சில பெண்கள் சிறிது காலத்துக்குப் பின்பு வாழ்க்கையை மீண்டும் தொடங்குகின்றனர். சில பெண்கள் தனது வாழ்க்கையை முடித்துக் கொள்கின்றனர்.

ஓர் ஆண் தனித்து வாழ்கின்றபோது அவனைப் பற்றி எந்தத் தனிப்பட்ட திறனாய்வும் சமூகம் செய்துபார்ப்பதில்லை. ஆனால் ஒரு பெண் தனித்து வாழச் சமூகம் அனுமதிப்பதில்லை என்பதுடன் அவளைப் பற்றிப் பல்வேறு விமர்சனங்களையும் முன்வைக்கிறது. அவளது தனிமையைப் பயன்படுத்தி ஆண் சமூகம் பல தாக்குதல்களை அவள் மேல் தொடுக்கிறது. அவற்றையெல்லாம் அவள் தாங்கிக் கொண்டு சமூகத்தோடு போராடி வாழ வேண்டியிருக்கிறது. அவளுக்காக இல்லாவிட்டாலும் தன் பிள்ளைகளுக்காக அவள் வாழவேண்டும். இல்லையேல் குழந்தைகள் அனாதையாகிவிடும். இந்நிலை தற்போது மாறியுள்ளது. தாங்களே சிந்திக்கவும், செயல்படவும், பொருள் தேடவும் தொடங்கிவிட்டனர். குழந்தைகளுக்காக வாழத் தொடங்கும் நிலையினை சுப்ரபாரதிமணியன் தனது படைப்பில் கூறியுள்ளார்.

கணவன் இல்லாத நிலையை ஒரு பெரும் பொருட்டாக அவர்கள் கருதவில்லை. மாறாக மனவலிமையுடன் பிள்ளைகளை வளர்ப்பதில் தான் தன் வாழ்வை அர்ப்பணிக்கின்றனர்.

“நிழல் உறவு” என்ற சிறுகதையில் செல்லம்மா ஊர் முழுவதும் மோர் விற்று அதில் கிடைக்கும் காசைக் கொண்டு தன் பிள்ளைகளை ஒழுக்கத்துடன் வளர்க்க வேண்டும் என்று நினைக்கின்றாள். இந்த சிந்தனைகள் பிள்ளைகளின் பாசம் எப்படிப்பட்ட துயரையும் போக்கவல்லது என்பதைச் சுட்டிக்காட்டுகின்றார் ஆசிரியர்.

**குடிகாரக் கணவன்**

கள்ளுண்பரை நஞ்சுண்பவர் என்று சாடுகிறார் வள்ளுவர். ஆங்கிலேயர் ஆட்சியின் போது அண்ணல் காந்தி கள்ளுக்கடை மறியல் நடத்தினார். அதனை ஆதரித்த தந்தை பெரியார் தமக்குச் சொந்தமான

தென்னை மரங்களையும் கள்ளிறக்கப் பயன்படுத்தக்கூடாது என்பதற்காகவே வெட்டி வீழ்த்தினார்.

மூதறிஞர் இராஜாஜி முதலமைச்சராக இருந்தபோது மதுவிலக்கை நடைமுறைப்படுத்தினார். சுப்ரபாரதிமணியன் தனது படைப்பில் மதுவில் ஏற்படும் சிக்கல்களை விளக்கியுள்ளார்.

மது மதியை மயக்கும். தன் மதிப்பை வீழ்த்தும். மது அருந்துபவனைக் குடிகாரன் எனச் சமுதாயம் இழிவுபடுத்துகிறது. ஆயினும் சிலர் மதுவிற்கு அடிமையாகி அல்லற்படுகின்றனர்.

'கசிவு' கதையில், துரைசாமி குடிப்பழக்கத்தால் தன் குடும்பத்தைக் கவனிக்காது, வருவோர் போவோரிடம் குடிப்பதற்குக் காசு கேட்கிறான். துரைசாமியின் மகள் 'கண்மணி' வேலைக்குச் சென்று தன் குடும்பத்தையும் தன் தாயையும் கவனிக்கிறாள். மனைவியும், வீட்டில் இருந்தபடியே நூல்நூற்கும் வேலை செய்து குடும்பத்திற்கு தன்னால் முடிந்த வருமானத்தைத் தருகிறாள்.

துரைசாமி வருவோரிடம் எல்லாம், குடிப்பதற்குப் பணமும், ஒரு பீடித்துண்டும் கேட்பான். இதனை,

> "ஒரு பீடி இருந்தா குடேன். அவன் பேசாமல் நடக்க...
> விரைசலாய் போய் அவனின் தோளைத் தொட்டான்.
> "ஒரு பீடிதான கேட்டன். அதுக்கு இப்படித்தள்ளணுமா..."
> "சொர்தான் போய்யா..."
> 'போடா' அவன் தள்ள முயல துரைசாமி கையிலிருந்த கூர்மையான பொருளால் அவன் வயிற்றில் குத்தினான். பீறிட்ட ரத்தத்துடன் சேர்ந்து பிரிக்கப்பட்டிருந்த பீடிக்கட்டும் விழுந்தது."[23]

துரைசாமியால் குத்துப்பட்டு வழிப்போக்கன் விழுந்தான். இனி அவன் குடும்பத்தின் வேதனை இன்னும் கூடும். குடும்பத் தலைவனாக இருந்து தன் குடும்பத்தைக் காக்கவேண்டியவன். மதுவிற்கு அடிமையாகி தனது குடிப்பழக்கத்திற்கு ஏதேனும் ஒரு காரணத்தைக் கூறுகிறான். ஆனால் மதுவினால் ஏற்படும் தீமையையும், தன் குடும்ப அவல நிலையையும் நினைத்துக்கூடப் பார்க்கமாட்டான் துரைச்சாமி என்பதை இக்கதை வழி சுப்ரபாரதிமணியன் உணர்த்துகிறார்.

பெண்கள் குடும்ப வாழ்க்கையிலும் வரதட்சனை, குழந்தைப் பேறு இல்லாமை, கணவனை இழந்த நிலை போன்ற சூழலில் பெண்கள் பன்முக அவலங்களைச் சந்திக்கின்ற உண்மை தெரியவருகிறது. மேலும் கணவனால் கைவிடப்பட்ட பெண்களும் குழந்தைகளைக் காப்பாற்றப் பெண்கள் படும் இன்னல்களையும் இவரது கதைகள் சிறப்பாகச் சித்தரித்துள்ளன. தனிக் குடும்பம் மற்றும் கூட்டுக் குடும்ப நிலையிலும் பெண்கள் தொடர்ந்து பல காரணங்களுக்காகப் போராட்டங்களைச் சந்திக்கின்ற அவலங்கள் இவ்வியலில் தெளிவுபடுத்தப் பட்டுள்ளன.

**முடிவுரை**

- சமூகக் கட்டுக்கோப்பிற்குக் குடும்பம் என்னும் அலகு மிகவும் செம்மையாக அமைதல் வேண்டும். குடும்ப வாழ்வுச் சிதைவு ஒருவரை வழிதவறச் செய்துவிடும் என்ற உண்மை சுப்ரபாரதிமணியன் படைப்புகளின் வழி அறியலாகிறது.

- பெண்கள் குடும்பச் சூழலில் சிக்கித் தவிப்பவர்களாகவும், பிறந்த வீட்டில் ஆண்களுக்குக் கொடுக்கப்படும் உரிமை பெண்களுக்குக் கொடுப்பதில்லை. ஆதலால் ஒரு குறுகிய வட்டத்திற்கு உட்பட்ட பட்டறிவே பெண்களுக்குக் கிடைக்கின்றது. அதற்கேற்ப அவர்களது

மனப்பதிவும் அமைகின்றது என்பதை துரைச்சாமியின் மனைவி மூலம் ஆசிரியர் சிறுகதைகளில் மனம் நெகிழும் வண்ணம் வெளிக்கொணர்கிறார்.

♦ பணம் சம்பாதிப்பது தவறான வழியானாலும் சம்பாதித்தால் போதும் என்ற மனநிலை மனிதர்களிடம் காணப்படுகிறது என்பதை 'நிழல் உறவு' என்னும் சிறுகதை வழி அறியப்படுகிறது.

♦ திருமணத்திற்கு பின் கணவனை இழந்த பெண்களின் நிலை மேலும் தவிப்பிற்குரியதாக அமைந்துவிடுகிறது என்பதை 'செல்லமா' என்ற பாத்திரத்தின் மூலம் அறியமுடிகின்றது.

♦ திருமணங்கள் ரொக்கத்தால் தான் நிச்சயிக்கப்படுகின்றன என்பதை போல வரதட்சனை இன்றிப் பெண்களுக்குத் திருமணம் நடக்காது. வரதட்சனை கொடுக்க இயலாத பெற்றோர்கள் தங்கள் பெண் பிள்ளைகளை வைத்து எவ்வளவு மனவேதனைக்கு உள்ளாகின்றனர் என்பதை 'சுஷ்மா' என்ற கதைமாந்தர் வழி வெளிக்கொணர்கிறார் ஆசிரியர்.

♦ குழந்தைப்பேறு பெண்களுக்கு மிகவும் இன்றியமையாதது. அப்படி குழந்தையின்றி இருந்தால் ஆண்களை விட பெண்கள் அதிகம் பாதிக்கப்படுவர் என்பதையும், இச்சமூகம் அவர்களுக்கு கொடுக்கும் பட்டங்களையும் 'யோகம்' சிறுகதையில் 'சரஷ்வதி'யின் நிலையின் வழி அறியமுடிகிறது.

♦ பெண்களைப் போகப் பொருளாகவே பார்க்கும் ஆண்களை 'இடம்' என்ற சிறுகதையில், மனைவியாக இருப்பினும் அவளது விருப்பு, வெருப்புகளுக்கு இடம் தருவதில்லை என்பதை 'ஜோதி' என்ற கதைமாந்தர் மூலம் சுட்டிக் காட்டுகிறார்.

- குடும்பங்கள் சிதையாமல் இருப்பதற்குப் பெண்கள் பெரிதும் காரணமாக இருக்கின்றனர் என்பதை துரைச்சாமியின் மனைவி, கௌசி, செல்லத்தாயி, செல்லம்மா, சித்தாமணி, சந்திரா போன்ற பாத்திரங்களைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

- பெண்களின் பாதிப்புகளை வெகு நேர்த்தியாகச் சித்தரிப்பது சுப்ரபாரதிமணியனின் படைப்பாளுமைக்குச் சான்றாதாரமாகும். மேலும் இப்பாத்திரங்கள்வழி பெண்களின் விழிப்புணர்ச்சிக்கு வழிவகுக்கிறார் அசிரியர்.

## சான்றெண் விளக்கம்

*1. சுந்தரமதி, இலக்கியக் கொள்கை, ப.179*

*2. மேலது, ப.27*

*3. சண்முகம், தமிழ் இலக்கியக் கோட்பாடு, ப.207*

*4. அன்பு கஸ்தூரி, பெண்களுக்கு சமஉரிமை, ப.140*

*5. கிருஷ்ணன், தமிழ் இனம், ப.70*

*6. சுப்ரபாரதிமணியன் கதைகள், சிலவேறு தினங்கள், ப.37*

*7. சிவஞானம் எனது போராட்டம், ப.79*

*8. சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள், அப்பா, ப.2*

*9. திருக்குறள், ப.56*

*10. இரா.பிரேமா, பெண்ணியம், ப.2*

*11. அன்பு கஸ்தூரி, பெண்களுக்கு சமஉரிமை, ப.39*

*12. சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள், இடம், ப.237*

*13. மேலது, அவளும் அவளும், ப.472*

*14. பங்கீடு, ப.417*

*15. வேற்று மண்ணும் புதுக்குழந்தையும், ப.194*

*16. தமிழவன், படைப்பும் படைப்பாளியும், ப.74*

*17. பா.ஸ்ரீ, உதட்டோர மின்னல், ப.171*

*18. சுப்ரபாரதிமணியன், ஆழம், ப.385*

*19. சுப்ரபாரதிமணியன், சிதைவு, ப.778*

*20. சுப்ரபாரதிமணியன், நிழல் உறவு, ப.27*

*21. மேலது, ப.27*

*22. சுப்ரபாரதிமணியன், கூரிய நாடா, ப.698*

*23. சுப்ரபாரதிமணியன், கசிவு, ப.313.*

இயல் – 4

# சிறுகதைகளில் படைப்பாக்கத்திறன்

## பொருளடக்கம்

# சிறுகதைகளில் படைப்பாக்கத்திறன்

**முன்னுரை**

*சிறுகதையில் இடம்பெறும் ஒவ்வொரு கூறும் நேர்த்தியுடன் கையாளப்படும் பொழுது அவை உத்திகளாக வெளிப்படுகின்றன. படைப்பின் தரத்தை மதிப்பிடுவது படைப்பாக்கத் திறனாகும். படைப்பாளன் தன் கருத்தினைத் திறமையாக வெளிப்படுத்திக் காட்டுவது கலைநுட்பத் திறனாகும். அது கலைஞனின் தனித்துவங்களைச் சுட்டிக் காட்டுவதாகும். செய்திறன் என்பது உத்தி ஆகும். சுப்ரபாரதிமணியன் படைப்புகளில் எளிதில் புரிந்து கொள்ளும் தன்மை, இயல்பான பேச்சு வழக்குச் சொற்கள், எனப் பல உத்திகளைப் புகுத்தியுள்ளார். ஆசிரியர் பின்பற்றும் உத்திகளே படைப்புத் திறனாக வெளிப்படுகிறது. ஒரு சிறுகதை வெற்றிபெற அதன் படைப்புத் தன்மை முக்கியமானது. சிறுகதையின் உருவாக்கத்தில் ஆசிரியரின் பரந்த அறிவுப்புலம் முக்கியப் பங்கு வகிக்கிறது. இப் பின்புலத்தில் படைப்புக்கு அடிப்படையாய் விளங்கும் உத்திகளே இலக்கிய வெற்றிக்கு ஆணிவேராய் அமைகின்றன. இவ்வியலில் உத்திகள் விளக்கம், ஆய்வுக்குரிய சிறுகதைகளில் ஆசிரியர் பின்பற்றிய உத்திகளின் வகைகள் படைப்புத் திறனில் அதன் பயன்பாடுகள் போன்றவற்றை விரிவாக ஆய்வுசெய்யப்படுகிறது.*

**உத்திகள் - விளக்கம்**

*ஓர் இலக்கியத்தைப் படைக்கும் படைப்பாளனுக்கு இப்படித்தான் இலக்கியத்தைப் படைக்க வேண்டும் என்று எந்தக் கட்டுப்பாடும் இல்லை. அவனது விருப்பத்திற்கு ஏற்றவாறு எப்படி வேண்டுமானாலும் படைக்கலாம். "எழுதும் கலை பற்றி முடிந்த முடிவான கோட்பாடுகள்*

என்றுமே இருக்க முடியாது. படைப்பாளியும், படிப்பாளியும் தான் முக்கியம். இடையே எத்தனையோ கோட்பாடுகள் தோன்றலாம் மறையலாம்."[1] என்ற கருத்தும் மிக முக்கியமானதாகும்.

உத்தி என்பது ஆங்கிலத்தில் 'Technique' என வழங்கப்படுகிறது. நா.கதிரைவேற்பிள்ளை அவர்களின் தமிழ் - தமிழ் அகராதி 'உத்தி' என்னும் சொல்லுக்கு அனுமானம், அறிவு, சேர்தல், இசைவு, இணக்கம், செல்வம், சொல், தந்திரவுத்தி, திருவுறுப்பு தாக்கங்கள், ஆகிய பல பொருள்களைக் குறிப்பிடுகிறது.

படைப்பாளன் தன் அனுபவத்தை உணர்ச்சிப் பெருக்கோடு வெளிப்படுத்தும் போது உத்திகள் இயல்பாகவே அமைந்து விடுகின்றன. இது வாசகர்களுக்குப் படிப்பின் ஆர்வத்தைக் கூட்டுவதாகும். "கலைஞன் கொண்டுள்ள திறமையின் வடிவே உத்தி. அதனை அவன் ஒரு கைவினைஞனைப் போல் தனது சொந்த அனுபவத்தின் வாயிலாகவும், ஒரு பகுதியை மற்றவர்களின் அனுபவங்களில் பங்கு கொள்வதன் மூலமாகவும் பெறுகிறான். இங்ஙனம் பெறப்பட்ட உத்தித்திறன் அவனைக் கலைஞன் ஆக்குவதில்லை. ஏனெனில் உத்திகளால் உருவாக்கப்படுகிறான். ஆனால் கலைஞன் பிறக்கிறான்."[2]

படைப்பில் நல்ல உத்திகள் இருந்தால் மட்டுமே அது சிறப்பான வெற்றியைத் தரும் "ஆசிரியர் எவ்வளவு பெரிய மேதையாக இருந்தாலும் அவருடைய படைப்பில் நல்ல உத்தி நுணுக்கங்கள் இல்லையென்றால் அப்படைப்பு சிறக்காது"[3] என்பர்.

"உத்தி அல்லது உணர்த்தும் முறை அல்லது கலைத்திறன் என்பது கண்டுபிடிப்பைப் போன்றதாகும். உத்தி என்பது படைப்பாளன் தான்

சொல்ல விளையும் கருத்தினை வளர்த்துச் சென்று முழுமைபெறச் செய்யும் திறனேயாகும். படைப்பின் உள்ளடக்கத்திற்கும் அடையப்பட்ட உள்ளடக்கத்திற்கும் உள்ள வேறுபாடே உத்தி"[4] என மார்க்ஸ் கோரர் சுட்டுவர்.

"உத்தி என்பது கலை ஆக்கமுறை படைப்பில் முத்திரைப் பதிவாய் அமைவது அவன் ஆளுமைத்திறத்தின் தனித்தத்துவங்களைச் சுட்டவல்லது."[5] என்கிறார் சி.இ.மறைமலை.

உள்ளடக்கத்தின் வெளிப்பாட்டு முறையே உத்தியாகும். "ஒரு கலைஞன் தன் துறையின் செவ்விய வெளியீட்டிற்கும், பயன் கொள்ளும் ஆற்றலும் ஆக்கமுறையும் உத்தி எனப்படுகிறது."[6] "உத்தி என்பது தான் கூறவந்த செய்தியிலுள்ள பக்கத்தை வெளிப்படுத்தும் முறையே"[7] என்பர்.

"ஆக்குவோரின் படைப்பாற்றலும் தனித்தன்மையும் ஒவ்வொரு கூற்றிலும் வெளிப்படும் போது புலமை வண்ணம் தெரிகிறது. அதனை நுனித்து உணர்ந்து கொள்ள உத்தியாய்வு உதவுகின்றது"[8] என்கிறார் ச.வே.சுப்ரமணியன்.

**தொல்காப்பியம் கூறும் உத்தி இலக்கணம்**

பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் முப்பத்திரண்டு உத்திகளை,

"ஒத்த காட்சி, உத்திவகை விரிப்பின்
நுகலிய தறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்து மெய்ந்நிறுத்தல்
..............................................................

மனத்தி னெண்ணி மாசறத் தெரித்துக் கொண்டு

இனத்திற சேர்த்தி உணர்த்தல் வேண்டும்

நுனித்தகு புலவர் கூறிய நூலே"[9]

என உணர்த்துகிறது.

பவணந்தி முனிவர் தம் நன்னூலில் தொல்காப்பியர் குறிப்பிடும் உத்திகளையே பெரும்பான்மையாகக் குறிப்பிடுகிறார். இதனை,

"நுதலிப் படுத்தல் ஒத்த முறைவைப்பு தொகுத்துச் சுட்டல்

வகுத்துக் காட்டல் முடித்துக்காட்டல் முடிவிடங் கூறல்

மிக வெடுத்துரைத்தல், சொல்லின் முடிவில் அப்பொருள் முடித்தல்

ஒன்றின முடித்தல், தன்னின முடித்தல், உய்த்துரைவைப்பு"[10]

என்பது சுட்டும். நன்னூல் உரையாசிரியரான சிவஞான முனிவர் உத்தி இலக்கணத்தை, ஓரிலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல் வழக்கோடும் பொருந்தியும், உணர்த்தியும் அப்பொருளை மற்றோர் இலக்கிய நூற்கண்ணும் ஏற்குமிடம் அறிந்து இவ்விடத்திற்கு இதுதான் எனக் கருதத்தக்க வகையாகச் சொல்லுவது தந்திரவுத்தியாகும். என்று குறிப்பிட்டுள்ளார்.

திருப்பூரையும் அதனைச் சுற்றியுள்ள கிராம மக்களையும் அவர்களது வாழ்க்கையையும் அவர்களில் ஒருவராக நின்று படைப்புகளைப் படைத்துக் கொண்டிருக்கும் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளையும், அவரது படைப்புகளையும் வட்டாரப் படைப்புகளாகக் கருதலாம். இவருடைய படைப்புகளில் உத்திகள் வலிந்து கூறப்படாமல், தாமாகவே அமைந்துள்ளன. கிராம மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்க்கையை நடத்துகின்றனர் என்பதையும் சிறுகதைகள் சுட்டி நிற்கின்றன. இவருடைய உத்திகளைச் சிறப்பித்துக்

காட்டும் விதமாக ஆங்காங்கே இரட்டைக் கிளவி, அடுக்குத்தொடர், ஒலிக்குறிப்புச் சொற்கள், உவமைகள், உம்மைத்தொடர், சுருக்கிச் சொல்லும் உத்தி, முருகியல் உத்தி, கதைத் தொடக்கம், கதைக்குள் கதை கூறும் உத்தி, நனவோடைஉத்தி, கதைமுடிப்பு உத்தி, போன்றவற்றை மிகுதியாகப் பயன்படுத்திய செய்தியை இவ்வியலில் சுட்டப்படுகிறது. ஆசிரியரின் படைப்புத் திறனுக்கு இவை பொருத்தமான சான்றுகளாக விளங்குகின்றன.

**அடுக்குத் தொடர்**

ஒரு சொல்லானது இரண்டு அல்லது மூன்று முறை அடுக்கி வந்தால் அது அடுக்குத் தொடராகும். உவகை, அச்சம், வெகுளி, விரைவு, ஆகியவை உணர்ச்சியின் காரணமாக வரும் என்பதைத் தொல்காப்பியர்,

"இசைநிறை அசைநிலை பொருளோடு புணர்த்தல் என்று
அவை மூன்று என்ப ஒரு சொல் அடுக்கே"[11]

என்னும் நூற்பாவில் சுட்டுவர். சிறுகதையில் ஆங்காங்கே அடுக்குத் தொடரைச் சேர்த்து இலக்கியப் படைப்பை மெருகூட்டியுள்ளார் ஆசிரியர்.

"கொஞ்சம் கொஞ்சமாய்க் கரைந்து மோதிரம் காணாமல் போகாதா"[12] என்ற தொடர்களாலும், "சாந்தா கோபாலகிருஷ்ணன் என்று மாறி மாறி வந்து கொண்டேதான் இருக்கிறது."[13] என்ற தொடர்களாலும் "வீடு கெடக்கலே கெடக்கலேங்கறானே இப்ப ஒரு வருஷம் திரும்பவேயில்லையே' என்ற தொடர்களிலும் 'பீன்ஸ்... பீன்ஸ் என்பான் பழனிவேல், ஆட்டுக்கறி சாப்பிடுகிறபோது சாப்பாட்டிற்கு

*ஒரு மணி நேரம் முந்தி மூளையைச் சாப்பிடுற மாதிரி கோழி விஷயத்தில் குடல் ஆனால் மூளை மூளைதான்"*[14]

*"படகு நகர நகரக் கைகளை விட்டு நீரை அள்ளிக் கொண்டான். கைகளில் நீர் மிஞ்சவில்லை."*[15]

*"எல்லைக்கு வந்தாயிற்று வந்துட்டும், வந்துட்டும் என்றார் மலைச்சாமி இருவர் முகங்களிலும் துளிர்ப்பாய் ஆறுதல்"*[16]

*"குழி குழியான சிறு பள்ளஙகள் முதற்கொண்டு நீர் நிற்க ஏதுவான இடங்களிலெல்லாம் கலவையான நிறத்துடன் நீர் கழுவக்கழுவச் செருப்பு ஈரம்பட்டது."*[17] *"அம்மா சண்டை போடும், நாங்க வர்ல இல்ல இல்ல போடமாட்டேன்"*[18] என்ற தொடர்களாலும், *"மாப்பிள்ளையின் தலையில் மடிப்பு மடிப்பாய் வெளித் தெரியும் மாதிரிக் காட்டி, ஒரு முனையைத் தொங்கவிட்டு கட்டுவர்"*[19] என்ற தொடர்களிலும் அடுக்குத் தொடர் வந்துள்ளது.

*"காக்கைகள் எச்சமிட்ட கறை மாதிரித் திட்டுத் திட்டாய் அழுக்குகள் படிந்திருந்தன. எல்லோரையும் ஆசீர்வதிக்கத் தனக்கு அதிகாரம் கிடைத்துவிட்ட சந்தோஷத்தில் குடை விரித்தான்"*[20] என்ற தொடர்களிலும்,

*"வழக்கமாகச் சாப்பிடுவதைவிட நல்லதாகவும், விலை உயர்ந்ததாகவும் இருக்கம். சுடச் சுடக் குழம்பும், சோறுமாக முதல் கவளம் எப்போதும் நாக்கைச் சுட்டுவிடும்"*[21] என்ற தொடர்களிலும்,

*"அவன் காப்பாற்றட்டும் என நினைத்தான் மலைச்சாமி மகனே மகனே என்று அதட்டிய படி நடந்து கொண்டிருந்தார்"*[22] இவ்வாறு அடுக்குத்தொடர்கள் வந்துள்ளன.

“வேடிக்கை பார்ப்பதென்றால் இவற்றைத்தான் பார்க்க வேண்டும். மீண்டும் மீண்டும் பார்வையை மழை ஏற்படுத்தின வரிக்கோடுகளின் மேல்தான் பதிக்க வேண்டும். கூர்ந்து கூர்ந்து பார்த்து அதில் ஏதாவது உருவங்களைத் தேட வேண்டியிருக்கும்”[23] என்ற தொடர்களிலும்.

“ரொம்ப தூரம் நடக்கவில்லைதான் ஆனால் நடந்து களைத்துப் போன கால்களைப் போல ஆசுவாசப்படுத்திக் கொண்டான். ஈரம் அடிப்பகுதியிலிருந்து மெல்ல மெல்ல பரவி உடம்பு முழுக்க நிரம்புவது போலிருந்து”[24] என்ற தொடர்களிலும்,

“உங்களுக்கு எல்லாம் சிரமந்தா, உங்கப்பா கட்டுன வீட்டிலே காலம் காலமா இருந்து கழிங்க. பாக்கலாம் பாக்கலாமுன்னு பத்து வருஷமா சொல்லிட்டு இருக்கீங்க”[25] என்ற தொடர்களும், “அப்பா வரும்போதொல்லாம் நாங்களும் வந்திருக்கிறோம். இப்படி வருவது முதல் தரம், மறுபடியும் மறுபடியும் வர்லாங்கிரியா”[26] என்ற தொடர்களும் “அம்மா சண்டை போடும் நாங்க வர்ல. இல்ல. இல்ல. போடமாட்டேன்”[27] என்ற தொடர்களிலும் “சொல்லி வைத்த மாதிரி முதுகில் மூன்று முறை தட்டுவது சிவா... சிவா என்ற குரல்கள் இருக்கும். ஏதோ ஆபத்து என்கிற மாதிரித்தான் உணர்வான்”[28] என்ற தொடர்களிலும், “எல்லாம் கொஞ்சம் கொஞ்சமா போயிட்டிருக்கு ரொம்பவும் அந்தரங்கமா இருக்கிற புஸ்தகங்கள் ரிகார்ட்ஸ் பாக்கியிருக்கு”[29] என்ற தொடர்களிலும் “சுகுமாரன் ஊருக்குப் போறேன், ஊருக்குப் போறேன் என்று சொல்லிக்கொண்டிருந்தான். பிற குழந்தைகள் நாங்களும் வரட்டா என்றார்கள். அதற்கு சுகுமாரன் அத்தையைக் கேளு... என்று மகேஸ்வரியைக் காட்டிச் சொன்னான்.

அத்தை இல்லடா... அம்மா.. அம்மா... என்று திருத்தினாள். சுகுமாரனின் அம்மாவும் ஆமா.. அம்மா.. அம்மா என்றாள்"[30] என்ற தொடர்களிலும் அடுக்குத் தொடரை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

அடுக்குத் தொடர்கள் மக்களின் இயல்பான பேச்சு வழக்கை நினைவுபடுத்துகிறது. அடுக்குத் தொடர்கள் உரையாடலின் தரத்தை மேன்மேலும் மெருகூட்டுகின்றன. பாத்திரங்கள் தாம் கூற வரும் கருத்தை அடுக்குத்தொடரைப் பயன்படுத்தி கூறுவதன் மூலம் படைப்பின் நடை எளிமைப்படுத்தப்படுகிறது. இதன் பயனாக சிறுகதைகள் காலத்தை வென்று சமூக மாற்றத்திற்கு ஓர் அச்சாணியாக விளங்குவதை அறியமுடிகிறது. ஒரு சிறுகதையின் மையக் கருவைக் காட்டிலும் கதை சொல்லும் பாங்கு, உத்தியே படைப்பின் வெற்றிக்குக் காரணமாகிறது என்ற உண்மை புலனாகிறது.

"தனக்கோ, கணவனுக்கோ, மெல்ல மெல்ல அவனைப் பிடிக்காமல் போய்விட்டால் அவனை மறுபடியும் ஊருக்குக் கொண்டு போய்விட வேண்டியிருக்கும்"[31] என்ற தொடர்களிலும்,

"வேண்டா வேண்டான்னா... தியாகராஜன் சிகரெட்டைப் பற்றவைத்து புகையை வெளிவிட்டார்"[32] என்ற தொடர்களும், "கத்திக் கத்திப் பேசி அழுத்துப் போயிற்று, தொண்டையும் வலிக்க ஆரம்பித்துவிட்டது. என் குரல் வழக்கமாகத் தேய்ந்து முழு அர்த்தம் பெறச் சாத்தியங்கள் இல்லாதபடிதான் ஒழுங்கின்றி இருக்கும்"[33] என்ற தொடர்களும்,

"ஏதேதோ நினைவுகளைக் கிளப்பிக் கொள்வதாய் அவர்கள் பேசிக்கொள்வதும், அதனூடே சிரிப்பும் இருக்கும். மெல்ல மெல்ல

அசௌகரியங்கள் தோன்ற ஆரம்பித்திருக்க வேண்டும்"[34] என்ற தொடர்களும்,

"கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். கூரையின் சிறுசிறு ஓட்டைகளின் பனி வெளிச்சத்தில் எல்லாம் கறுப்பு போர்த்தினதாய்த் தெளிவற்று தென்பட்டது"[35] என்ற தொடர்களும், "மார்பில் நீரைத் தெளித்தார். டேய்... டேய் என்றார் ராமகிருஷ்ணா ராமகிருஷ்ணா எந்திரிடா கைத்தடியால் கால்களைத் தட்டினார்"[36] என்ற தொடர்களும்,

"அண்ணா... அண்ணா... எந்திரி என்றாள். கிருஷ்ணவேணியும் அம்மாவும் என்ன சொல்வது என்று தெரியாதவள் மாதிரிக் குனிந்து கொண்டிருந்தாள்"[37] என்ற தொடர்களும்,

"சுதேசி டூரிஸ்ட் பதறியபடி என்னய்யா அட்வான்ஸ் வாங்கிட்டுப் போறியே... இருய்யா... இருய்யா... என்றான்"[38] என்ற தொடர்களிலும்,

"சமத்தா தூங்கு தூங்கு... இன்னிக்கு ஞாயித்துக்கிழமை பாரு. இன்னம் கொஞ்சம் நேரம் தூங்கு... இப்பவே எந்திரிச்சு என்ன பண்ணப்போறே"[39] என்ற தொடரிலும்,

"அவளும் கொண்டுபோய்க் கொடுத்திருக்கிறாள் குடம், பக்கெட்டின் சிறுசிறு ஓட்டைகள் அடைக்கப் பயன்பட்டிருக்கிறது"[40] என்ற தொடரிலும்,

"எங்க போயிருந்தே... வெளியே... அவள் சொல்லச் சொல்ல அவள் முகத்தில் அறை விழுந்தது"[41] என்ற தொடரிலும்,

“முனீஸ்வரனுக்கு காவல் நிற்கும் பட்டிஸ்வரன்களுக்குள் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். அவர்களின் கண்களில் பளீரிடும் சிரிப்பு மீண்டும் மீண்டும் பார்க்கச் செய்யும்”[42] என்ற தொடரிலும்,

“இவனென்னவோ பெரிசா கூச்சப்படறான். போகப் போகச் செரியாயிரும். நானெதுக்குங்க சாராயக் கடைக்கெல்லாம்”[43] என்ற தொடரிலும்,

“டஜன் டஜனாய் பனியன் போட்டு அடுக்கின மெட்டடல் பாக்ஸ்கள் அவள் உட்கார்ந்திருந்ததை மறைத்திருந்தன”[44] என்ற தொடரிலும் அடுக்குத் தொடர் பயன்படுத்தியிருப்பதை அறியலாம்.

“இது எனக்குத்தா... எனக்குத்தா... என்றபடி ஸ்ரீமுகி கிண்டிச் சொம்பை எடுத்துக் கொண்டாள். அம்மா இனிமே இதிலதா பால் குடிப்பேன் என்றாள்”[45] என்ற தொடரிலும், “பதறிப் போனவர் மாதிரி எழுந்தார் வேண்டா வேண்டா அது அங்கியே இருக்கட்டும், யாருக்கும் வேண்டாம்”[46] என்ற தொடரிலும்,

“வாட்ச்மேன் குழந்தையைக் கூர்ந்து கூர்ந்து பார்த்தான் பின்னால் யாராவது வருகிறார்களா என்று பார்த்தான். யாரும் தென்படவில்லை. இன்னிக்கு உன்னைத் தனியா பாக்கறப்போ அடையாளம் தெரியாம போச்சு பாரேன்... சார் சார் தூக்கமா? உங்க குழந்தை வந்திருக்கு பாருங்க”[47] என்ற தொடரிலும்.

“வாங்கணும் - வாங்கணும் இந்த வருஷ போனஸ் வந்தப்புறம் வாங்கணும் அவன் ரிப்பேரான ஸ்டவ்வுடன் அலைகிறபோது மட்டும் இப்படிக் கேள்விகள் கேட்பதற்கென்று சிலர் கிடைத்துவிடுகிறார்கள் என்றிருந்தது”[48] என்ற தொடரிலும்,

“செரி… செரி… பேசிட்டு நிற்காதே ரெண்டு மணி நேரம் முடியுறதுக்கு முந்தி எல்லாம் பண்ணியாகணும் கௌம்பு”[49] என்ற தொடர்களில் அடுக்குத்தொடர் வந்துள்ளது.

“அடுத்த குகையிலிருந்து வெளிவருகையில் அவள் கர்ப்பிணியாக இருந்தாள். வயிற்றைத் தடவித் தடவி… சந்திரா… சந்திரா என்றாள். வயிற்றிலிருந்து கைகளை கீழே கொண்டு போகப் போக குழந்தை நழுவி வந்து அவள் கைகளில் விழுந்தது”[50] என்ற தொடரிலும்,

“உன்னோட வேகம், உணர்வுகள் பத்திச் சொன்னேன். இந்த வேகம் போகப் போக கொறஞ்சிரும். வேகம் இல்லாமெ நிதானமாக அசைபோட்டு பண்ணணும்”[51] என்ற தொடரிலும்,

“பார்த்தர்லாம்… பார்த்தர்லாம் என்ன சின்னப் பையன் ஜாதகத்தைக் குறிச்சுப் பார்க்கணும். பார்த்தர்லாமா? பார்த்தர்லாம் உங்கப்பா எங்கே போனார்டா?”[52] என்ற தொடர்களிலும்,

“நாம ஓட்டுனா ஓடாது பாருங்க… ஏனாம் எதை எதை கழட்டி வெச்சிருக்காங்களோ”[53] என்ற தொடர்களிலும்,

“ரத்தம் வழியுமே காயம் ஆகுமே வாள் வாள்ன்னு சத்தம் போட்டுட்டுத் திரியுமே”[54] என்ற தொடர்களிலும்,

“நாடாவின் இறுதி இரும்புப் பகுதியைக் கூர்மையாக்கவென்று சிறு இரும்பு ரம்பத்தை அப்பா பயன்படுத்துவார். மெல்லத்தேய்ந்து, சற்று எச்சிலை அதன் நுனியில் தொட்டு ஈரமாக்கி மீண்டும் மீண்டும் தேய்ப்பார்”[55] என்ற தொடர்களிலும்,

"தண்ணீரைப் பார்த்துப் பார்த்து தண்ணீரைக் குடிக்கக் கூட பயந்து தாகத்துடனே திரிவார்களா? நினைக்க நினைக்க விசித்திரமாகவே இருந்தது அவளுக்கு"[56] "அடுத்த வாரங்களில் யார் யார் வாடகை தரவேண்டும் என்ற பட்டியலை அப்போதே வாசிக்க ஆரம்பித்துவிடுவார்"[57] என்ற தொடரிலும், "நான் சொன்னதைத் திரும்பச் சொல்லிச் சொல்லி மார்க்ரெட்டும் சிரித்தாள். மார்க்ரெட்டின் சிரிப்பில் போதையின் உச்சமிருந்தது"[58] என்ற தொடரிலும்,

"ஒவ்வொரு திருவிழாவின் போதும் புதுசு புதுசாய் நாடகக் குழுக்களின் தோற்றம் இருக்கும்"[59] "சொல்லிச் சொல்லிச் சலித்துப் போனவர்"[59] மாதிரி சும்மா இருந்தார்"[60] "அப்பா பொறுமிப் பொறுமிப் பேசிக் கொண்டிருந்தார்"[61] "மூன்று பக்கங்களிலும் வலுத்த வாகனங்கள் நிற்க போலீசார் சோதனை செய்து கொண்டிருப்பது தெரிந்தது. தூரத்தில் இருந்தவனின் உடம்பைத் தொட்டுத் தொட்டுச் சோதிப்பது தெரிந்தது"[62] என்ற தொடர்களில் அடுக்குத் தொடர் வந்துள்ளமையை அறியலாம்.

"யோகம்... யோகம்... முணுமுணுத்தார் ஜலயோகி. மண்டியிட்டாள் சரஸ்வதி. நான் மலடியில்லை நான் மலடியில்லை என்ற சரஸ்வதியின் குரல் மெஷினின் இரைச்சலை மீறி உடம்புகளை மோதினபடி திரிந்தது"[63] என்ற தொடரிலும்,

"செரி.. செரி.. காலியான சீட்டுகள் பெட்டிகள் தாறுமாறாகத் துணிகள் அவர்களின் ஆர்வத்தில் கலந்துகொள்ள வேண்டும் போலிருந்தது."[64]

"கால்களை மெல்ல எம்பியபோது வலித்தது வலியினூடே எரிச்சல் மிகுந்தது. சிவகாமி... சிவகாமி... என்றார்" என்ற தொடரிலும்,

"*சின்னம்மிணியின் ஊரிலென்றால் பொசுக் பொசுக்கென்று மின்சாரம் போய்விடும். வருவதற்கு மணிக்கணக்காகும்*"[66] என்ற தொடரிலும்,

"*சிறு சிறு குச்சிகளின் சேகரிப்பில் சிறு கூட்டை உருவாக்கி இருக்கின்றன. அந்தக் கூட்டைக் கூர்ந்து ரசிப்பதற்கு என் கண் பார்வை இன்னும் மங்கிவிடவில்லை*"[67]

"*தலைமயிரின் தண்ணீர்த் துளிகள் சொட்டச் சொட்ட நிலத்தில் வீழ்வது படமாக்கப் பட்டிருக்கிறது*"[68]

"*அணையின் திடக்கழிவுகள் பாளம் பாளமாய் பிளந்து கிடந்தன. எங்கு கால் வைத்தாலும் உடம்பு கழிவுகளினுள் அமிழ்ந்து போகும்*"[69]

"*இலை இலையாக இருக்கும்போது மரத்தை அறிந்து கொள்ள முடியாது. மீன் அதாக இருக்கும் போது கடலை அறியாது*"[70]

"*எல்லோரும் இருக்கிற தொழிலையெல்லாம் விட்டு விட்டு பனியன் தொழிலுக்குப் போவதை சாதாரணமாக்கிக் கொண்டனர்.*"[71]

"*சுருள் சுருளாய் அடைப்பு நெஞ்சிலிருந்து வாய்க்கு வந்து கண்களில் கண்ணீரைத் தருவித்து விடும்*"[72] "*நல்ல கதைக்கின்னு ஓடி ஓடி தேடப் போறாங்க. எழுதறவனுக்குன்னு ஒரு பீடம் எப்பவும் இருந்துட்டுதான் இருக்கும்*"[73] என்ற தொடரிலும்,

"*நல்ல கனவுதான், என்னடா... ஜோடியா போற அவங்கள வெறிச்சு வெறிச்சப் பாத்துக்கிட்டிருக்கறே என்றாள் அம்மா*"[74] என்ற தொடரிலும்,

"*ஸார்... ஸார்... பார்வையைத் திருப்பினான். குழந்தையைப் பார்த்தான். இன்னைக்கு வேற யாராச்சும் விடுதலையாறாங்களா*"[75] என்ற வரிகளிலும்,

“இப்போது பசிக்கான சாதம் அவ்வளவுதான் அவசர அவசரமாக விழுங்கினான். எதற்காக இந்த அவசரம் என்றும் கேட்டுக் கொண்டான். நிதானமாக சமையலறை மூலையில் உட்காரலாம் என்று தோன்றியது”[76] என்ற தொடரிலும்,

“சிமெண்ட் தரையில் காசை போட்டு போட்டு எடுப்பது போல சப்தத்துடன் யாரோ வருவது போலிருந்தது. பெரிய அண்ணியின் மெட்டி சப்தம்தான் இப்படி கேட்கும்”[77] என்ற தொடரிலும்,

“கைகளைக் கட்டிக்கொண்டு ஏதோ ஆச்சரியப்படுகிறவள் மாதிரி பார்த்தாள். திருடு.. திருடு.. திருட்டுக்குன்னு தனி ருசிதா”[78] என்றாள் என்ற தொடரிலும்,

“மீண்டும் மீண்டும் இரண்டு விரல்கள் வாயினுள் சென்று வந்தன”[79] என்ற வரிகளிலும் அடுக்குத் தொடரை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“முடியாது.. முடியாதுங்கறேன் மறுபடியும் உட்கார்ந்திருந்தா என்ன பிரயோஜனம்? மனுசியை அரக்கி பண்ண வேண்டா”[80] என்ற தொடரிலும்,

“வீட்டைவிட்டு வெளியே வந்ததும். அட சிறுக்கி என்னை கேவலப்பட வெச்சிட்டியே.. என்று வந்த வேகத்திலேயே முகத்தில் மாறி மாறி அறைந்தார். கேவலப்பட வெச்சிட்டியே என்பதைத் திரும்பத் திரும்பச் சொன்னார்”[81] என்ற தொடரிலும் இரண்டு அடுக்குத் தொடர்கள் வந்துள்ளது.

“உம் பொண்ணுக்கு செய்யக்கூடாதுன்னு எனக்கு வீராப்பு. இன்னொரு இடம் பாரு உசிர்களை அழிச்சழிச்சு வாளிவாளியா

ரத்தத்தைக் கண்ணாலெப் பாக்கறதவிட உண்டான பொண்ணு அடிபடறதெ பாக்கறது அதவிடக் கொடுமை... போ"[82] என்ற தொடரிலும்,

"அப்பா பொருமிப் பொருமிப் பேசி நடந்து கொண்டிருந்தார். அவரின் நடை தளர்வு, குனிஞ்ச தலையும் சமீபமாய் ஆகிப்போயிற்று"[83] என்று அடுக்குத்தொடர் வந்துள்ளமையை அறியலாம்.

"குமுறிக் குமுறிக் கொண்டு அழுத அவளைத் தேற்றுவது குறித்து எந்த அக்கறையும் கொள்ளாதவர் மாதிரி சிகரெட்டொன்றை எடுத்துப் பற்ற வைத்துக்கொண்டார்"[84] என்ற தொடரிலும்,

"வுட்டுருங்கப்பா... வுட்டுருங்கப்பா என்றாள் மறுபடியும் சாகுனமுன்னு தீர்மானம் பண்ணிட்டால் போ... ஏதோ பேச்சுக்கு கோபத்தில் சாகுன்னு சொன்னாலும் சும்மா இருக்க முடியும்."[85]

"வயது ஏற ஏற சலித்துப் போயிருந்தாள். பெண் பார்க்க வருகிறவர்கள் முன் உட்கார்ந்து சலித்தாள். தங்கை சுகன்யாவும் செழுசெழுவென வளர்ந்து அவளின் போட்டியில் நின்றாள்"[86] என்ற தொடர்களின் மூலம் ஒரே பத்தியில் இரண்டு, மூன்று அடுக்குத் தொடர்களைப் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகிறது.

"அம்மாவும், அப்பாவும் அவளிடம் மாறி மாறி வந்து பணம் கேட்பதற்கான சந்தர்ப்பங்கள் நிறைய வாய்ந்தன சண்முகசுந்தரமும் சில சமயம் வந்தான்"[87] என்ற தொடரிலும்,

"மறுபடியும் மறுபடியும் உங்களுக்காக மத்தவங்ககிட்ட கையேந்திற நிலைமை வந்துடக் கூடாதுன்னு எனக்கு ஆசை"[88] என்ற தொடரிலும்,

“பதினெட்டு வருஷமாய் எட்டு வீதிகளும், நாலைந்து சின்னக் கடைகளும், பெரிய கோவில் ஒன்றும் அதற்குத் துணை நிற்கிற மாதிரி இரண்டு, மூன்று சிறு கோவில்களும் பார்த்துப் பார்த்து அந்த மனித முகங்களில் பழகி சலித்துப்போனது திலகவதிக்கு”[89] என்ற தொடரிலும்,

“மைதானம் புல்லாய் சிறுசிறு புதராய் தென்பட்டது. ஓட்டப் பந்தயத்திற்கு உட்கார்ந்து தயாராகிற ஆண், பெண்களைப் போல் எந்த பெரிய மறைப்பும் இல்லாமல் சற்றுத் தள்ளி தள்ளி ஆண்களும், பெண்களும் உட்கார்ந்திருந்தனர்”[90] என்ற தொடர்களிலும் இரண்டு அடுக்குத் தொடர்களைப் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

“எலக்ட்ரிக் டிரெயின் சப்தம் கேட்டதும் உட்காராதவள் எழுந்து எழுந்து நின்று கொள்வதைப் பார்த்த சுற்று இருந்தவர்களுக்கு ஆச்சரியமாய் பேச வைத்தது”[91] என்ற தொடர்களிலும்,

“வீட்டுக் கிணற்றடியில் குடம் குடமாய் போர்த்திக் கொண்ட தண்ணீரை நினைத்துப் பார்க்கையில் தெருக் கோடியில் பம்ப அடித்து கொண்டாள்”[92] என்ற தொடரிலும்,

“உடம்பை நகர்த்த முடியாமல் சங்கடப்படுவது போலக் கிடப்பாள். கொழந்தை அழுகுதம்மா என்பதை திரும்பத் திரும்பச் சொல்வாள்”[93] என்ற தொடரிலும்,

“இது வீட்டிற்குச் சென்ற பின்பும் தொடர்ந்தால் சிரமமாக இருக்கும் என்பதை திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டிருந்தாள் கண்ணம்மா”[94] என்ற தொடரிலும்,

“இப்படியே எல்லாத்தையும் அடக்கி வச்சு வச்சு ஸ்டோன் உள்ள பார்ம் ஆகப்போகுது”[95] என்ற தொடரிலும்,

“கலாவின் தலை அதன் ஓரத்தில் குவித்து வைக்கப்பட்ட மயிர் கற்றையையும் காட்டியபடி இருந்தது. குழந்தை விக்கி விக்கி அழுவதுபோல் குரல் தடைப்பட்டது”[96] என்ற தொடரிலும்,

“விநாயகர் சதுர்த்தியின் போது தெரு முழுக்க திருவிழா ஆக்கிவிடுபவர் பத்துநாள் திருவிழாவில் ஆயிரம் ஆயிரம் செலவு செய்வார்”[97] என்ற தொடரிலும்,

“எங்க வீட்டு ஸ்வீட்டை தின்னாமப்போன எப்படி சமையலறையிலிருந்து தட்டைக் கொண்டுவந்தான் வாய் நிறைய நிறைய லட்டைப் போட்டான்”[98] என்ற தொடரிலும்,

“அவள்கள் கைகளில் பெரிய பெரிய ராக்கிகள் கட்டியிருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் எலிசபெத்தும் இருந்தாள்”[99] என்ற தொடரிலும்,

“ஒரு வகையான அனுபவம், இது என்னை அழகு படுத்தப் போகிறது. வசீகரமாக்கப் போகிறது வெறிக்க வைக்கப்போகிறது. அதுவும் உழைத்து வருகிற காசில் பெருமிதம் தொட்டு தொட்டுப் பார்த்துக் கொண்டாள்”[100] என்ற தொடரிலும்,

“விட்டுக் கொண்டிருக்கிற மாதிரி தோன்றியது. ஏதாவது உபாதை காரணமாக இருக்கலாம் என நினைத்தார் என்ன பதிவு பண்ணிக்கிற ஆளு எப்ப வருவான் வருவார்... வருவார்”[101] என்ற தொடரிலும்,

“கிருஷ்ணமூர்த்திதான் வந்து கியூபெஞ்சில் உட்கார்ந்தபோதும் கேட்டார். பேசுவதற்கு விஷயமற்றது போல திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருக்கிற மாதிரி பட்டது”[102] என்ற தொடர்களிலும்,

“அதன்பின் எல்லோருக்கும் அழுகை முட்டிக்கொண்டு வந்துவிட்டது. கௌரி அம்மா அம்மா என்று அலறினாள். என்ன நீ மறுபடியும் மறுபடியும் அங்க இங்கன்னு நடக்கணுமா சும்மா இருக்கக் கூடாதா என்றார்”[103] என்று வரும் வரிகளிலும் ஒவ்வொரு நிகழ்வை விளக்கும்போதும் ஆசிரியர் அடுக்குத்தொடர்களைப் பயன் படுத்தியுள்ளமையை அறிய முடிகிறது.

மேற்குறித்தவற்றுள் அடுக்குத் தொடர்களாக, எண்ணிக்கைக்காகவும், விரும்புதலை வெளிப்படுத்தவும், அழைப்பதற்கும் மகிழ்ச்சியை வெளிப்படுத்தவும், செய்தியை வலியுறுத்தவும், ஒருவரை அழைப்பதற்கும் என செயல்களை வெளிப்படுத்துவதற்கே இவ்வடுக்குத் தொடர்கள் கதைகளில் வருகின்றன.

இவரது படைப்பாக்கத் திறனில் உத்திமுறை அட்டவணையின் படி (பின்னிணைப்பில் பார்க்கவும்) அடுக்குத்தொடர் இரண்டாமிடத்தை வகிக்கிறது. மக்கள் பேச்சு வழக்கிலும் இலக்கியப் படைப்பிலும் அடுக்குத்தொடர் தவிர்க்கமுடியாத உத்தி முறையாகக் குறிப்பிடலாம். பாத்திரங்களின் இயல்பான உரையாடலின்போது இத்தகைய சொற்கள் படைப்பின் மேன்மையை அதிகரிப்பதை உணரமுடிகிறது.

சுப்ரபாரதி மணியன் சிறுகதை தொகுப்பில் 120 சிறுகதைகளில் 200 அடுக்குத் தொடர்கள் இடம்பெற்றுள்ளன. இவ் அடுக்குத் தொடர்கள் பாத்திரங்களின் செயல்களில் காட்டும் வேகத்தைப் புலப்படுத்த எடுத்துக் காட்டியுள்ளார்.

**இரட்டைக் கிளவி**

சொல்லும் கருத்தில் வேகத்தையும், சுவையையும், கலை உணர்வையும் புலப்படுத்தவல்லது இரட்டைக்கிளவியாகும். அடுக்குத்தொடரைப் போன்றே இரட்டைக்கிளவியும் முக்கியப் பங்காற்றுகின்றன. ஒன்றை சிறப்பாக வலியுறுத்தவும், குணத்தை வாசகனுக்கு உணர்த்தவும் இச்சொற்கள் முக்கியப் பங்காற்றுகின்றன. இவை நம் பேச்சு வழக்கில் படபடவெனப் பேசினான். ஆறு சலசலவென ஓடியது என்று குறிப்பிடுவதைப் போல் படைப்பிலும் எளிமையாகப் பயன்படுத்தப்படுகின்றன. “ஒரு சொல்லானது இரண்டு அல்லது மூன்று முறை தொடர்ந்து வந்து, பிரித்தால் பொருள் தராதது இரட்டைக்கிளவி ஆகும். சொல்லும் கருத்து வெறும் செய்தியாக வெளிப்படாமல் உயர்ப்பாகவும் காட்சிப் பொருளாகவும் விளங்குவதற்கு இரட்டைக் கிளவி துணைநிற்கிறது. உணர்ச்சியில் அழுத்தம் காட்டுவதற்குப் பயன்படுகிற இந்த உத்தி இரட்டித்து வந்தபோதும் ஒரே சொல்லாக உருவம் பெற்று விளங்குகிறது. சில இடங்களில் தனிச் சொல்லாக நின்றும் கருத்தைப் புலப்படுத்துவதுண்டு”[104] என்று இயம்புகிறார்.

ஆய்வுக்குரிய சிறுகதைகளில் மிகுதியான இரட்டைக்கிளவி பயன்பாட்டில் உள்ளன. அடுக்குத் தொடரைப் போன்றே மக்கள் பயன்பாட்டில் இரட்டைக்கிளவி பேச்சுவழக்கில் காணப்படுகிறது.

‘அப்பா’ என்ற சிறுகதையில் “மனது கலவரமாகுது நா உன்னெப் பாக்கப் போறேன்னு சொன்னப்போ ஏதோ சொல்லணும், சொல்லணும் என்கிற மாதிரி பரபரத்தான்”[105] அப்பா ஊர் வந்தபோது கொடுத்த மாதிரி கலர் பனியன், போட்டிருந்தாள். அவளுக்குக்

கொஞ்சம் பெரிதாக தொள தொள வென்றிருந்தது"[106] அளவில் பெரியதாக என்பதை விளக்க இங்கு இரட்டைக் கிளவியைப் பயன்படுத்தியுள்ளார்.

"பரவாயில்லேப்பா, அடுத்த சேவல்தான் திமுதிமுன்னு நா போறேன் நிக்குதே அதனாலென்ன"[107] "காயத்தின் மேல் முதல் சொட்டு சாராயம் பட்டதும் அப்பாவிற்குக் கண்களில் கரகரவென்று கண்ணீர் வந்துவிடும்"[108] "திலகவதிக்கும் ஒரு பெண் கும்பல் இருந்தது. அவள் சொல்வதற்கெல்லாம் சிரித்தார்கள். பெண்களின் சிரிப்பையும் குழந்தைகளின் கலகலப்பையும் எந்தச் சூழலிலும் மறுக்காமல் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிற குணம் எல்லோர்க்கும்"[109] மகிழ்ச்சியை வெளிப்படுத்த இரட்டைக்கிளவியைப் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

"ஜோசப் காலனி முக்கு சேரிப் பக்கம் கால் வைத்து நடப்பது சிரமம் என்பது போல் சேறும், குழிகளும் அசுத்தமும் இருக்கும். எப்போதும் பன்றிகள் நமநமவென்று ஒரு விதக் குரலுடன் அலைந்து கொண்டிருக்கும்."[110]

"எப்போதும் சடசடவென்று நீர் ஒழுகும் சப்தம் காறித் துப்பும் இருமல் சப்தம், வார்த்தைகளுக்குக் குறைவில்லை என்பது போல் சளசளவென்று சப்தங்கள் கேட்டுக் கொண்டே இருந்தான்."[111]

"சாக்கடையாகிவிட்டது என்று முணுமுணுத்துக் கொண்டாலும் தவற விடுகிற உறுத்தல் உண்டு அவனுக்கு. இந்த பளபளப்பில் சாந்தியின் கைகளும் கால்களும் எவ்வளவு களைத்திருக்கும் என்பது சட்டென நினைப்பிற்கு வந்தது."[112]

"உதைத்த அவர் மண்ணோடு கிடந்தார். பின் அவரை தரதரவென இழுத்துப் போனார்கள். அவர் அதற்கப்புறம் வீட்டிற்கு வரவில்லை"[113] தீயாப் பறவைகள் என்ற சிறுகதையில் போதை பொருள் கடத்தல் செய்ததற்காக அவனை இழுத்துச் சென்றனர்.

"அவனின் தலைமீது படபடத்து பறந்து சென்றது ஹெலிகாப்டர். அதன் சத்தம் அவனின் காதுகளை அடைத்தது. இன்னம் சுறுசுறுப்புக் குடுக்கறதையெல்லாம் போட்டாச்சு வேணுமா உங்களுக்கு"[14] "சிறு பிளாஸ்டிக் குப்பியில் நீரை அள்ளிக் கொண்டார் ராமகிருஷ்ணன் சர்ட் பட்டன்கள் தளர்த்திருக்க கொச கொசவென்று மயிர்கள் அடர்ந்திருந்தது. பரபரவென்று கிருஷ்ணவேணி ஓடிவந்தாள்."[115]

"இப்போ முரசரசன் சாமிகூட இந்தப் பீலையே ஏத்துக்கறாரே. உடம்பு அசதியாய் படபடக்கிற மாதிரி பற்களின் நெரிப்பு"[116] "ஒரு பொம்பள கூட இந்த வெதுவெதுப்பான சொகத்தெ குடுக்க முடியாது என்பார் அதன் சூட்டை உணர்ந்தபடி."[117]

"தண்ணிலாரி ஏதாச்சும் வந்தா விறுவிறுன்னு நாலு கொடம் எடுத்துட்டு போயி நில்லுங்க"[118] வேகத்தைச் சுட்டுவதற்கு இங்கு இரட்டைக்கிளவியைப் பயன்படுத்தியுள்ளார்.

"வயதானவர்களின் முணுமுணுப்பு ஒட்டிக்கொண்டது. இனி அந்த முணுமுணுப்பு போக்கிவிடுவது அவ்வளவு சுலபமல்ல."[119]

"விசைத்தறிகள் தடதடத்து பயமுண்டாக்கின. தடதடப்பின் தொடரலில் நீளக்கணக்கில் துணிகளை வெளித்தள்ளின. கைத்தறிகளின் பார்டர்கள் விசைத்தறியில் வர்ணங்களாயின."[120]

“சரசரவென வாசலை நோக்கி நடக்க ஆரம்பித்தார். பங்குபோட்ட பாத்திரங்களை எடுத்துக் கொண்டவர்கள் தட்டியும், உரசியும் பார்த்துக்கொண்டிருந்தனர்.”[121]

“பரபரவென ஜனங்கள் வீடுகளிலிருந்து வெளியே வந்துகொண்ருந்தார்கள். சிறுசிறு கூட்டம் என்பதுபோல் நகரத் தொடங்கினர்.”[122]

“அப்பண்ணசாமி மார்பைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். படபடவென அடித்துக் கொண்டது. இந்த நொடியில் இயக்கம் நின்றுவிட்டால் நன்றாக இருக்கும் என நினைத்தான்.”[123]

“முணுமுணுத்தபடி திரும்பியபோது அவளின் புது உடம்பு வாசம் அவனின் மூளைக்குள் சுலபமாக இறங்கிக்கொண்டிருந்தது.”[124]

“தொண்ணூற்று மூன்றிலும் வரிசை இருந்தது. அவனின் படபடப்பு கையில் வைத்திருந்த தாள்கள் பரபரத்துக் கொண்டிருந்ததில் தெரிந்தது.”[125]

“ஆனால் அந்தப் பெண்கள் கலகலப்பானவர்கள். பேச்சினை சிரிப்பினூடே சுவாரஸ்யமாக்குபவர்கள் என்ற விபரம் பலருக்கு அதிசயமாகவே இருந்துவந்துள்ளது.”[126]

‘வாக்கு’ என்னும் சிறுகதையில் மேலே கூறிய இரட்டைக்கிளவிகளைக் காட்டிலும் இக்கதையில் ஆம், இல்லை பதிலைக் கூறும்போது உம், உம் எனக் கூறுவதோடு, குழந்தையைத் தூக்கி மடியில் கிடத்திய காட்சியை விளக்கும்போது தர, தர என்ற ஒலிக்குறிப்புச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளனர்.

*"உம்.. உம்.. தரதரவென்று இழுத்தான். சின்னப் பையனை மடியில் இருத்தினான்."*[127]

*"அவனின் பரபரப்பில் பசி தெரிந்தது. மிச்சமிருந்த உப்புமாவைச் சிறு உருண்டையாக்கி அவன் வலது கையில் வைத்தாள் பழத்தைக் கொறிக்கும் சிறு பிராணிபோல அவன் அதைச் சுவைத்துக் கொண்டிருந்தான்."*[128]

*"கண் புருவ நெறிப்பு பயம் தரத்தக்கதாய் இருந்தது. கையிலிருந்த சூலாயுதம் விளக்கு வெளிச்சத்தில் மினுங்கியது. வெங்கடாசலம் பதபதப்புடன் வந்து நின்றார்."*[129]

*"பகபகவென்று வாய்விட்டுச் சிரித்தார் கிறிஸ்டோபரி. நான் சொன்னதைத் திரும்பச் சொல்லிச் சொல்லி மார்க்ரெட்டும் சரிந்தாள். மார்க்ரெட்டின் சிரிப்பில் போதையின் உச்சமிருந்தது."*[130]

*"இது பளபளவென்று வண்டியைப் பண்ணும் பாலிஷ் பண்ற களிம்பு வண்டியில் இருக்கிற முக்கியமானதை இதை வெச்சு தொடச்சா பளிச்சுன்னு ஆகும்."*[131]

*"துப்பாக்கியை விறுவிறுவென்று துடைத்தான் சின்னச்சாமி. குண்டுகளைக் கைகளில் பரப்பி வேடிக்கை பார்த்தான். என்னமோ மக்கர் பண்ணுது, இருந்தாலும் பாத்திருவம். மரத்தில் ஏறி பட்டாசைக் கட்டிவிட்டு வந்தார்கள். தீ வைத்தபோது பட்டாசுக் கட்டு படபடவென்று வெடித்தது."*[132]

*"விதவிதமான துகள்களால் மண் பரவி இருந்தது. ஈரப்பசை எங்குமாக இருந்தது. சிறு ஊற்றிலிருந்து குபுகுபுவெனத் தண்ணீர் வருவது போன்று இருந்தது."*[133]

“டியூப்பலிருந்து பற்பசை மாதிரி எதையோ பிதுக்கிக் கொள்வான் உள்ளங்கயைில் வைத்து நசுக்கிக் கொண்டு முகர்ந்து பார்ப்பான் சரசரவென்று கைகள் மற்றும் கால்களில் பரவலாகத் தேய்த்துக் கொள்வான்.”[134]

படைப்புத்திறனில் விரைவைச் சுட்டவும், எண்ணிக்கையை வெளிப்படுத்தவும், விருப்பத்தை வெளிக்கொணரவும் இரட்டைக் கிளவிகளை ஆசிரியர் மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். இவரின் 154 சிறுகதைகளில் 70 சிறுகதைகளில் 108 இடங்களில் இரட்டைக் கிளவி இடம்பெற்றுள்ளது.

ஆய்வுக்குரிய சிறுகதைகளில் இரட்டைக்கிளவியின் பயன்பாடு உத்திமுறை அட்டவணையில் நான்காமிடம் வகிக்கிறது. ஆசிரியரின் சிறுகதை வெற்றிக்கு இரட்டைக்கிளவியின் பயன்பாட்டை இதன்வழி நன்கு அறியலாம். படைப்பாக்கத் திறனில் இரட்டைக்கிளவி குறிப்பிடத்தக்க பங்காற்றுவதை இங்கு மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

பெரும்பான்மையும் இவ்விரட்டைக்கிளவிகள் பண்பு பற்றியும், ஓசை பற்றியும் விளக்கவே ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

**ஒலிக்குறிப்புச் சொற்கள்**

அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவியைப் போன்றே ஒலிக்குறிப்புச் சொற்களும் பேச்சுவழக்கில் பயன்படுத்தப்படும் ‘ஒலி’ குறித்த சொற்களாகும். சப்தத்தின் இயல்பை வாசகனிடம் உணர்த்துவதற்கு ஒலிக்குறிப்புச் சொற்கள் முக்கியப் பங்காற்றுகின்றன. இவை சிறுகதையை மெருகூட்டுவதில் சிறப்பான பங்களிப்பை வழங்கியுள்ளது.

சொற்களை ஒலியினால் வெளிப்படுத்துவது ஒலிக்குறிப்புச் சொற்களாகும். “ஒலிக்குறிப்புகள் தாம் முதலில் தோன்றின. பின்னரே

அவற்றிலிருந்து சொற்கள் உருவாயின"[135] என்பார் இந்திராணி மணியன். "சொல்லுகின்ற கருத்தின் தன்மையை உணர்த்தவும் கருத்திற்கு அழுத்தத்தை உருவாக்கவும், சித்தரிக்கும் காட்சியை நிழற்படம் போல் பருப்பொருளாக்கிக் காட்டவும் ஒலிக்குறிப்புச் சொற்கள் இலக்கியத்தில் வழங்கப்படுகின்றன"[136] எனக் குறிப்பிடுவர். சுப்ரபாரதிமணியன், சொல்லின் வேகம், செயலின் விரைவு, உணர்வின் நுட்பம் ஆகியவற்றைப் புலப்படுத்த ஒலிக்குறிப்புச் சொற்களைக் கையாண்டுள்ளார்.

அடுக்குத் தொடர், இரட்டைக்கிளவியைப் போன்றே ஒலிக்குறிப்புச் சொற்களும் சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகளில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. அதனைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. கருத்தின் தன்மை அழுத்தம் பெறவும்
2. சொல்லின் வேகம் சுட்டவும்
3. செயலின் விரைவை வெளிக்கொணரவும்
4. உணர்வின் நுட்பம் சுட்டவும்
5. காட்சியை தெளிவுபடுத்தல்

என்ற ஐந்தின் அடிப்படையில் ஒலிக்குறிப்புச் சொற்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"புரோகிதர் காதை அறுக்கிற மாதிரி குரலெடுத்தது பிசிறலுடன் வெளிப்பட்டது. "அய்யய்யோ... இதெல்லாம் என்னது தலை தூக்கி முறையிடுகிற மாதிரி பெண்ணின் அப்பாவைப் பார்த்தார்."[137]

"மாடு அவனைக் குறி பார்த்துத் துரத்தியது. வேறு புஸ்புஸ்ஸென்று வெளி வந்தது. என்ன செய்வது என்று தெரியாமல் "அய்யோ அய்யோ" என்றான்."[138]

*"ஆடுகளின் மே... மே கூச்சல் அதிகரித்துக் கொண்டே இருந்தது."*[139]

*"சை..." என்றாள் ஒருவிதமான வெட்கத்துடன். அந்த வெட்கம் ரொம்பவும் பிடித்திருந்தது."*[140]

*"க்யா... க்யா...' என்றபடி போலீஸ்காரன் ஒருவன் அவனை நெருங்கினான். செகந்திராபாத் சார் என்றான். நடுங்கும் குரலில் கைத்தடியால் அவனின் மூட்டைகளைத் தட்டினான்."*[141]

*"கிளிகளின் கீச் கீச் அதிகரித்தது. அவன் கூண்டுக் கதவை மெல்லத் திறந்தான். தலையிலும் தோள்புறத்திலும் கிளிகள் ஏறிக்கொண்டன. கீச் கீச் இன்னும் அதிகரித்தது."*[142]

*"தே... தே... தே... என்ற ஆறுதல் குரல்கள். வெள்ளாட்டின் முதுகை ஒரு சிறுவன் தடவிக் கொண்டிருந்தான். தோலின் கறுப்புப் புள்ளிகள் தனி அழகு தந்தது. மே... மே... என்றபடி நாக்கைத் தொங்கவிட்டது ஆடு."*[143]

*"மாடியிலிருந்து தம்தம்மென்று தொடர்ச்சியான பாதங்களில் மிதிபடல் சப்தம் தொடர்ந்து கொண்டிருந்தது. மெல்ல மாடிப்படிகளில் ஏறும் தபதபா சத்தம் கேட்டது."*[144]

*"கசமுச வென்ற குரல்களில் சந்தோஷம் அலைந்து திரிந்தது. வறண்ட மண்ணைக் கிளறிச் செம்புக் கம்பியால் கோடிழுத்தார்."*[145]

ஒலிக்குறிப்புச் சொற்கள் உத்திமுறை அட்டவணையில் ஆறாமிடம் வகிக்கிறது. படைப்புத் திறனில் இச் சொற்கள் சிறப்பிடம் பெறுகின்றன. சிறுகதைப் படைப்பு உயிரோட்டமிக்கதாக விளங்குவதற்கு இவை பெரிதும் பயன்படுகின்றன.

இவ்வாறு ஒலிக்குறிப்புச் சொற்களைப் பரவலாகப் பயன் படுத்தியுள்ளார். படிப்பவர்களின் உள்ளத்தில் வேகத்தையும் உணர்ச்சியையும் தூண்டுகின்றன. சொல்லுகின்ற கருத்திற்கு உயிரூட்டிச் செல்வதாகவும் திகழ்கின்றன.

**பழமொழிகள்**

மக்களின் அனுபவங்களைச் சுருக்கமாகக் குறித்து வரும் சொற்றொடர்களே பழமொழியாகும். பழமொழியினை 'முதுமொழி' என்றும் அழைப்பர். மக்களால் முற்காலத்தில் வழங்கப்பட்டு வந்த பழமையான மொழி, பழமொழியாகும். இவை மக்களின் கருத்துக்களை எடுத்துக்கூற உதவுகின்றன.

"மக்கள் வாழ்க்கையில் பொது உண்மைகளையும், அன்றாட நிகழ்ச்சிகளையும் அடிப்படையாகக் கொண்டு பழமொழிகளைப் பொருத்தமான சூழலில் பயன்படுத்தும் போதே அதன் நுண்மைத் தன்மை சிறக்கும்"[146] என ஜே.ஏ.காட்டன் கூறுவதாகக் குறிப்பிடுவார்.

"நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
மென்மையும் என்று இவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப"[147]

என வரும் நூற்பாவில் பழமொழிப் பற்றி தொல்காப்பியர் இயம்புகிறார். பழங்காலத்திலிருந்து வழங்கப்பெற்றுவரும் தொடரமைப்பான பழமொழி (Proverb) எல்லா நாடுகளுக்கும் மக்களுக்கும் பொதுவானது. மக்களிடையே இன்றும் சாதாரணமாகப் பேச்சு வழக்கில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

மரணம் எல்லோருக்கும் வரும். இது இயற்கையான ஒன்று. இதனையே அம்மா அழுகையுடன் சொன்னாள், "நீ தேருக்குப் போனா நாங்க தரிசனத்துக்கு வருவோம்"[148] என்றாள்.

"தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழிக்காதே"[149] என்று தண்ணீரைக் குறை சொல்லாதே என்றான்.

"அரக்காசு உத்யோகம்னாலும் அரைத்திண்ணை உத்யோகம்னாலும் அரசாங்க உத்யோகம்"[150] என்று அரசு வேலை செய்வதை பெருமையாக சொல்கிறார்.

"மூட்டைப் பூச்சிக்குப் பயந்துக்கிட்டு வீட்டைக் கொளுத்திவிடவா முடியும்"[151] என்ற சிறுகதையில் வருகிறது.

இவரின் 154 சிறுகதைகளில் 40 சிறுகதைகளில் 90 இடங்களில் பழமொழிகள் இடம்பெற்றுள்ளன. சில பழமொழிகள் வந்தவையே மீண்டும் மீண்டும் இடம்பெற்றுள்ளன.

இவ்வாறாகப் பழமொழிகள் கையாளப்பட்டுள்ளன. பாத்திரங்களின் இயல்பினையும், தன்மையையும் குறிக்க இவை எடுத்தாளப் பட்டுள்ளன. இதன் மூலம் படைப்பாசிரியரின் ஆழ்ந்த புலமையினை அறியமுடிகிறது.

**சொலவடைகள்**

ஆசிரியர் திருப்பூர் வட்டார மக்களின் வழக்குச் சொற்களைத் தன் படைப்புகளில் தக்க இடங்களில் எடுத்தாண்டுள்ளார். இது புதுமொழியாகப் பரிணமித்து சிறுகதைகளின் உயிரோட்டத்திற்கு பக்கபலமாக விளங்குகின்றன.

சிறுகதையின் யதார்த்தமான, இயல்பான போக்கிற்கு இவை பெரிதும் உதவுகின்றன.

“பேருக்குத்தான் மைசூர் மகாராஜா வம்சம்”[152]

“இந்த வேலைய அரசல் புரசலா செஞ்சுட்டு போயிர்லாம்.”[153]

“கடிகாரம் நின்று போனாலும் சூரியனும், ராத்திரியும், நட்சத்திரங்களும் நிக்கறதில்லே.”[154]

“அரசல் புரசலா செஞ்சுட்டு போயிரலாம்”[155]

“காலம் உறஞ்சு போனாப்பலே தோன்றினாலும் ஓடிட்டேதான் இருக்கு.”[156]

“சாகக் கெடக்கற கெழவி மாதிரிதா இந்த நெசவுத் தொழில்.”[157]

“காசிக்கு போயும் கெரகம் தீராது போல”[158]

“எப்பவும் உடம்பும் சதையும் மாதிரி ஒட்டிட்டே இருக்கறே”[159]

“செத்த பின்பு உடம்பு மண்ணுல போனா என்ன, தண்ணீயில போன என்ன.”[160]

சொலவடைகளைக் கையாளும் போது மிக எதார்த்தமாக மக்கள் பேசும் பேச்சுநடையை அப்படியே கையாண்டுள்ளதால் இதுவும் கதையின் வளர்ச்சிக்கு துணைபுரிகிறது. சில இடங்களில் ஒரே சொலவடையே இரு கதைகளில் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**பிறமொழிச் சொற்கள்**

சிறுகதை, நாவல் போன்ற இலக்கியங்களில் பாத்திரங்களின் உரையாடலில் தமிழோடு ஆங்கிலம் கலந்து படைப்பது படைப்பாசிரியரின் உத்தியாகக் கருதப்படுகிறது. இவற்றில் ஆங்கிலச் சொற்களின் மொழி பெயர்ப்பைத் தவிர்த்து அச்சொல்லை ஒலிபெயர்த்து (Transliteration) எழுதுகின்றனர். ஆங்கிலம் தவிர வடமொழிச் சொற்களும், அரபி, இந்தி

போன்ற பிறமொழிச் சொற்கள் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் காணப்படுகின்றன.

இவரது கதைகளில் வாசகர்களால் எளிதாகப் புரிந்துகொள்ளக்கூடிய எளிமையான பிறமொழிச் சொற்களே கையாளப்பட்டுள்ளன.

**அப்பா** என்ற சிறுகதையில் 'ஸ்கூல், ஹாய், ஷிப்ட் டூட்டி, ஆபீஸ் ஸ்டாப், லீவ், ஓவர் டைம், நைட், நெர்வஸ், டிரபிள், மென்டல் டிபரசன்' எனவும், **இன்னும் மீதமிருக்கிற பொழுதுகளில்** என்ற சிறுகதையில் 'அயன்பாக்ஸ், லேபிள், பனியன் கம்பெனி, அட்சதை, விஷேசம்' எனவும், **அடையாளம்** என்ற சிறுகதையில் 'ஜாக்கெட், பெல்டு, பூணூல், தேஜஸ், எம்ப்ளாய்மெண்ட், சுவீகாரம், பாஷை, ஸ்லோகம்' எனவும், அது **ஒரு பருவம் என்ற சிறுகதையில்** 'ஹேப்பி நியூ இயர், போன், ரயில்வே ஸ்டேஷன், டயல்டோன், டெலிபோன் ஆப்ரேட்டர், தேங்ஸ், சாக்லெட், தியேட்டர்' எனவும், **கோடை** என்ற சிறுகதையில் 'காம்பவுண்ட், எல்கேஜி, யூகேஜி, ஜலதோஷம், பஜார், பார்டர், போலீஸ்காரர், உஷ்ணம், ஹவுசிங் போர்டு, ஆபிஸ், எலக்ஷன், கார்பரேசன்' எனவும், **நாதம்** என்ற சிறுகதையில் 'ஹலோ, பாத்ரூம், லெட்டர், ரூம், பிரஷ், யூனியன், கேரியர்' எனவும், **விருட்சங்களும் அவனும்** என்ற சிறுகதையில் 'ஆபீஸ், விஸ்தாரம், கலெக்டர், ஸ்டுடியோ, வீடியோ, ஜங்கள், பஸ் ஸ்டேண்ட், ஸ்வெட்டர்' எனவும், **கண்ணாமூச்சுகளும் முகமூகளும்** என்ற சிறுகதையில் 'டவுன், ஹெலிகாப்டர், ஜுவாலை, தாமஷ்ஷா, லோன், கான்கிரிட்' எனவும், **எல்லை** என்ற சிறுகதையில் 'லவ்லெட்டர், காம்பவுண்ட், பேப்பர், போலீஸ் ஸ்டேசன், ஆட்டோ, கார், ஸ்கூட்டர்கள், சிகரெட்' எனவும், **எஞ்சியது** என்ற சிறுகதையில் 'போஸ்டர்கள், சன், பஸ், சினிமா, டி.வி.,

டைரி, புட்போடு, ஆஸ்பத்திரி, ஆயியே சாப், பிரண்ஸ், மியூசிக், இன்டரஸ்ட், புக்ஸ்' எனவும், **பார்வை** என்ற சிறுகதையில் 'மிலிட்டரி ஜெயில், காலர் சர்ட், என்ஜினியரிங், ரிப்போட்டு, ரிடெயர்மெண், லைப்ரரி, டேபிள், ரெஜிஸ்டர், கேசட்' எனவும், **புதுப்பழக்கம்** என்ற சிறுகதையில் 'ஷிப்ட்டு, ஆபிஸ், மேனேஜர், டிக்கெட்டு, டூரிஸ்டர்கள், வேஸ்ட், காலேஜ், பிரதர், சிஸ்டர்ஸ்' எனவும், **அரேபியக் கிராமம்** என்ற சிறுகதையில் 'டெம்பரவரி, டெய்லி, வாக்கிங், ஏஜன்சி, கம்ப்ளயிண்ட், கிளாஸ்மெட்' எனவும், **வரமும் சாபமும்** என்ற சிறுகதையில் 'நியூஸ், எச்சிகிட்டியூவ், ஸ்டிக், ஸாரிசார், பார், ஹைஸ்கூல், ரிலாக்ஸா' எனவும், **வதை** என்ற சிறுகதையில் 'டிப்ளமோ, கோர்ஸ், பம்பர் சேல்ஸ், பேண்ட், அசைன்மெண்ட், நர்ஸ்கள், மிஷின், டிமாண்ட், சார்ஜ்' எனவும், **விமோசனம்** என்ற சிறுகதையில் 'டெம்ப்ரவரி, மெஸ், வெயிட்பண்றேன், சேமமாய் இரு, கிரவுண், பாஸ்போட்டு, விசா, ஷேவ், பேக்கரி' ஆகிய வேற்றுமொழிச் சொற்களை ஆசிரியர் தனது 150 சிறுகதைகளில் கையாண்டுள்ளார்.

பிறமொழிச் சொற்களில் ஆங்கிலம், வடமொழி போன்ற சொற்களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன. படைப்பிலக்கியங்களில் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துவதை ஓர் உத்தியாகக் கையாண்டுள்ளனர். பாத்திரங்களின் இயல்புகள், படிப்பறிவு போன்ற குணங்களை எளிதில் உணர்த்துவதற்குப் பிறமொழிச் சொற்கள் பெரிதும் பயன்படுகின்றன என படைப்பாளர் நம்புகிறார். ஆனால் பிறமொழிச் சொற்களின் பயன்பாடு சிறுகதைகளில் அதிகம் இடம்பெறக்கூடாது என திறனாய்வாளர்கள் கருதுகின்றனர்.

**நனவோடை உத்தி**

சிறுகதைகளில் 'நனவோடை உத்தி' சிறந்த பண்பாகக் கருதப்படுகிறது. ஒரு கதையைச் சொல்லிக் கொண்டே போகின்றபோது கடந்தகால நிகழ்ச்சிகளை ஒரு பாத்திரத்தின் நினைவோட்டமாக ஆசிரியர் எடுத்துக்காட்டுவர். இலக்கியத்தின் வெளிப்பாட்டிற்குச் சிறப்பளிக்கும் பல உத்திகளில் ஒன்றாக முன்னிகழ்வினைப் பின்பு கூறுதல் அமைகின்றது. முன்கதைச் சுருக்கம் உரைத்தலாகாயன்றி கூறப்படாததைத் தேவை ஏற்படுமிடத்து மிக்க கால இடைவெளிக்குப் பின் தருவதாக இணைகின்றது. எனவே நனவோடை கதைக் கூட்டமைப்பில் மிகவும் இன்றியமையாத உத்தியாக உருவாகின்றது.

இதைப் பற்றி இர.இராமானுசாச்சாரியார், "இத்தகைய மனவோட்டத்தில் காணப்படும் எண்ணங்கள், உணர்ச்சிகள், புலப்பதிவுகள் தனித்தனியாக இருப்பதாகக் கருதினர். ஒருவர் இன்னொருவர் மனத்திற்குச் சில ஆற்றல்கள் உண்டென்றும் பலவாக அமையும் பதிவுகளை ஒழுங்குபடுத்தி உட்படுத்தி அவற்றினிடையே இயைபு கண்டு பொருள் பயக்கும் காட்சியாகக் காணத் துணைசெய்வது மனம்"[161] என்று இவ்வுத்தியைப் பற்றிச் சொல்கிறார். இதில் எவ்விதக் கட்டுப்பாடுமின்றிப் பாத்திரங்கள் வாசகனுக்கு நேரடியாகக் கதை சொல்வதைப் போல இருப்பதால் அவனை ஒன்றிப் போகச் செய்கிறது.

கதையோட்டத்திற்கேற்பச் சிறுகதைகளில் இவ்வுத்தியைக் கையாண்டுள்ளார் ஆசிரியர். பிறரிடம் சொல்லமுடியாத மனத்தின் சுமைகளைக் கதைமாந்தர் வெளிப்படுத்தவும் இது ஒரு வழியாக அமைகிறது.

சுந்தரரேசன் வயதான பிறகு தன் இளமைப் பருவத்தில் நடந்த நிகழ்வுகளை நினைத்துப் பார்க்கிறார். "எந்த விஷயமோ, தகவலோ, அறியப்படுகிற தொனியில் அந்த சூழல் அற்புதமாகத்தான் இருந்திருக்கிறது. அன்றைக்கு ஆங்கிலப் புத்தாண்டு டெலிபோனை எடுத்தால் புத்தாண்டு வாழ்த்துச் சொல்லிய விதமாய் ஒரு பெண்குரல் இருக்கும் என்கிறதைக் கேள்விப்பட்டதும் அப்படித்தான். ஆனால் அதற்காக சுந்தரேசன் ஒரு வருடம் காத்திருக்க வேண்டும் என்பதில் வருத்தமிருந்தது. புத்தாண்டின் கடைசி மணி நேரங்களான இரவு பத்து மணியில் அன்றைக்கு வீட்டு வாசல் முன் பேசிக்கொண்டிருக்கும்போது தான் இது தெரியவந்தது. வீட்டிற்கு என்று மனதிற்குள் நினைத்துப் பார்க்கிறார்."[162]

ராமசாமி தன் தமிழாசிரியர் சண்முகசுந்தரம் என்பவரை நினைத்துப் பார்க்கிறார். அவர் கற்றுக்கொடுத்த பிராத்தனை, பிறருக்கு உதவவேண்டும் என்ற கொள்கையை எண்ணி வியக்கிறார். ராமசாமி தனக்கு வயதான பின்பும் அக்கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறார்.

"திருநீற்றுக்கீற்று நெற்றியில் மிளிரும், வெள்ளை வேட்டி, வெள்ளை சட்டைதான் அவை உஜாலாத் தன்மை எதுவும் பெறாமல் ஒருவகை காவி நிறத்தின் ஆரம்பக் கட்டத்தை எட்டியிருக்கும். தீயணைப்பு வண்டிச் சப்தம் கேட்கிற போதெல்லாம் கண்களை மூடிக்கொள்வார். அவரின் உதடுகள் எதையோ முணுமுணுக்கும். ஏதோ ஆபத்து, ஒரு நிமிஷப் பிராத்தனை. நாம நெனைக்கிறது பிராத்தனையில பலிக்கும். பிராத்தனை பண்ணிக்கங்கோ என்பார்"[163]

அவரின் அந்த குணம் தான் தனக்கும் வந்துவிட்டது என தன் ஆசிரியரை நினைத்துப் பெருமைப்படுகிறார் ராமசாமி.

துளசி திருமணத்திற்கு முன் தன் குடும்பத்துடன் தம்பி, அப்பா, அம்மா என மகிழ்ந்திருந்த தருணங்களை நினைத்துப் பார்க்கிறாள். முன்பு அவள் விளையாடி மகிழ்ந்த தோட்டம், தோப்புகள் எல்லாம் இப்போது கட்டிடங்களாக காட்சி அளிக்கின்றனவே என நினைத்து மனம் வேதனைப்படுகிறாள்.

"வீட்டு எதிரில் இருந்த தோட்டம் முழுசாய் அழிந்துவிட்டது. எல்லாம் வீடுகள், கான்கிரீட் வனம். அப்போது இந்த இம் சோளக்காட்டைக் கடந்து மஞ்சள் பயிரிட்டிருந்த இடம். தென்னை மர நிழல் அழகான இயற்கைக் காட்சி, விளையாட்டாக நாங்கள் ஓடி ஒளிந்துகொண்ட அந்த இடம் இப்போது இல்லை. கட்டிடங்களாக காட்சியளிக்கின்றன."[164]

பங்கீடு என்ற கதையில் வரும் மகன் ஒருவன் தன் தந்தையிடம் சிறுவயதில் அவரின் தடியால் வாங்கிய அடியை நினைத்துப் பார்க்கிறார். "அந்த மூங்கில் பிரம்பால் நான் அடிபட்ட தருணங்கள் நினைவுக்கு வந்தன. என் படிப்பில் அக்கறை கொள்ளுமளவிற்கு அப்பாவிற்கு படிப்பறிவோ, ஆர்வமோ இருந்திருக்கவில்லை. ஆனால் எல்லோரும் தன் ஆளுமைக்குள் இருக்க வேண்டும் என்று எப்போதும் விரும்புவார். முறுக்கின தடித்த மீசையும் கெட்டியான சப்தம் போடுகிற செருப்பும் பயப்படவே வைக்கும். அவரை எதிர்த்து பேசியபோது நிறைய அடிபட்டேன்"[165] என்று தன் தந்தையின் நினைவு வருகிறது மகனுக்கு.

நவீனம் என்ற சிறுகதையில் வரும் பொன்னுச்சாமி தன் அண்ணன் தன்னைப் படிக்க வைக்க பட்ட கஷ்டத்தையும், தன் அம்மாவின் கைருசியையும் நினைத்துப் பார்க்கிறார்.

"அண்ணன் குக்கர் கம்பெனியில் இருந்தார். அதனை நினைக்கப் பக்கம் பக்கமாய் நினைவுகள் நீளும்... நெசவு தந்த உழைப்பிலிருந்து அவர் என்னைப் படிக்க வைத்தது இன்னும் ஆச்சரியமாகவே இருந்தது. கஷ்டங்கள் என்ற வார்த்தையைத் தவிர வேறெந்த வார்த்தையும் நினைவுக்கு வராது. ஆனால் அதிலிருந்து என்னைக் கரையேற்றியிருக்கிறார் என்பதுதான் கண்களில் நீர் துளிர்க்கச் செய்திருக்கிறது. நினைத்துப் பார்க்கும்போது எங்கம்மா நல்லா இருந்தப்போ வெறும் பருப்பு பண்ணுவாங்க. ஒரு கை பருப்பு, நாலு வரமிளகாதா... அத்தனை ருசி இருக்கும்"[166] என்று பொன்னுச்சாமி தன் மனைவியிடம் தன் நினைவுகளைக் கூறுகின்றார்.

இவ்வாறாக நனவோடை உத்தியானது பெரும்பாலான சிறுகதைகளில் காணமுடிகிறது. இதன் மூலம் கதையின் புரிதலை வாசகனுக்கும், உணர்த்தவந்த கருத்தினையும் தெளிவுபடுத்தியுள்ளார்.

**கதைக்குள் கதை கூறும் உத்தி**

கதைக்குள்ளேயே மற்றொரு கதையைக் கூறும் உத்தியை ஆசிரியர் கையாண்டுள்ளார். முன்பு நடந்த ஒரு கதையைக் கூறும்போது இளைய தலைமுறையினரும் அதை அறிந்துகொள்கின்றனர். சிறுகதைக்கு மேலும் மெருகூட்டுவதாகவும் அமைகிறது.

'நிழல் உறவு' என்ற சிறுகதையில் 'காரமடைப் பெருமாள் நோன்பு' என்பதை ஆசிரியர் கதையாகச் சொல்கிறார். இதில்

கதையாசிரியரே கதை சொல்வதாக இக்கதை அமைகிறது. தன் சிறுவயதில் புரட்டாசி மாத சனிக்கிழமையில் அதிகாலையில் எழுந்து ஆண் குழந்தைகளை சட்டை அணியாமல் நாமம் இட்டு, பூணூல் போட்டு, எட்டு முழவேட்டியை பஞ்சக் கச்சம் மாதிரி உடுத்திவிடுவர். தோளில் ஒரு பையை மாட்டிக்கொண்டு வீடுவீடாகச் சென்று அவர்கள் கொடுப்பதை வாங்கி மொத்தமாகக் கடைசி சனிக்கிழமையில் பொங்கல் வைத்து அன்னதானம் செய்வர். இக்கதையை ஆசிரியர் கதையின் இடையில் கூறுகின்றார்.

"பன்னிரண்டு வயசுவரை புரட்டாசி மாதச் சனிக்கிழமைகளில் என் தோற்றம் குழந்தையும், தெய்வமும் என்ற சொற்றொடரில் வைக்கப்பட்டிருந்தது. எண்ணெய்ப் பசையான தலையில் அரப்பைத் தேய்க்கிறபோது உடம்பு முழுக்க குளிர்ச்சி வந்துவிட்டது மாதிரி இருக்கும். என் அரைஞாண் கயிறு பெல்டாகி எட்டு முழ வெள்ளை வேஷ்டியைப் பிடித்துக்கொள்ளும். ஒற்றைப் பூணூல் உடம்பில் உடம்பைப் போர்த்திக்கொள்ள எதுவுமிருக்காது. நெற்றியில் இரு வெள்ளைக் கீற்றுக்கிடையில் சிவப்பு நாமம் இடும்போது நெற்றி பளிச்சென்றாகிவிடும். வீடு வீடாய்ப் போய் காரமடைப் பெருமாள் பெயரைச்சொல்லி அரிசியையும், காணிக்கையையும் பெற்றுக் கொள்கையில் ஒரு வீரன் மாதிரி உணர்ந்திருக்கிறேன்"[167] இவ்வாறு கதைக்குள் கதை கூறும் உத்தியைத் திறம்பட ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

**முருகியல் உத்தி**

இயல்பாகத் தான் காணும் ஒன்றினை தனது கண்ணோட்டத்தில் கண்டு அதை எழில்படுத்தி அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் கூறுவது முருகியலாகும். அதாவது முருகியல் என்பதற்கு 'அழகியல்'

எனப் பொருள்படும். படைப்புகளில் அழகான வருணனைகள் இடம்பெறுவது என்பது கதையை வெற்றியடையச் செய்யும் சிறந்த உத்திகளுள் ஒன்று.

**அழகியல் அல்லது முருகியல் கொள்கை**

"*அழகைக் கண்டு உணர்வதாலும் அனுபவிப்பதாலும் படைப்பாளன் உள்ளத்திலே அது அகத்து எழுச்சியைத் தோற்றுவிக்கிறது. நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற விழுமிய உணர்வோடு பிறருக்கு எடுத்துரைத்து, அனுபவித்து இன்புறுமாறு செய்வதே படைப்பாளனின் நோக்கமாக அமைகிறது. இத்தகைய அகத்து எழுச்சியால் தோன்றுவதே இலக்கியம் என்னும் கருத்தினை மையமாகக் கொண்டு விளக்கப்படுவதே அழகியல் அல்லது முருகியல் கொள்கையாகும்.*"[168]

வெறும் உணர்ச்சிப் பெருக்கால் உருவெடுப்பது அழகு அன்று. இசையிலும் ஓவியத்திலும் பிற கலைகளிலும் ஒழுங்குணர்வு இழையோடிச் செல்லுவதைப் போல இலக்கியத்திலும் அது அமைதல் வேண்டும். 'கலை கலைக்காகவே' என்னும் கருத்திலிருந்து மாறி இலக்கியத்தின் வடிவத்திற்கே என்றும் பெரும்பாலும் முக்கியத்துவம் கொடுத்து வருகின்றன.

"*கற்பனை நயமும் எடுத்துரைக்கும் முறையில் கலையழகும் இணைந்து இயங்குகின்ற பொழுது படைப்பிலக்கியம் கவர்ச்சி மிகு கலையழகைப் பெறுகிறது. இதனோடு அழகான பொருள் வற்றாத இன்பம் என்னும் கருத்திற்கேற்பப் படிப்பவரை மகிழ்விக்கவும் செய்கிறது. இந்த இரு வகை இயல்புகள் படைப்பு இலக்கியத்தில் முதன்மை இடம்பெற்று இருப்பதைச் சுட்டிக் காட்டுவதே முருகியல் நோக்கமாகும்.*"[169]

இயற்கையை வருணிப்பதில் சுப்ரபாரதிமணியன் முன்னோடியாகத் திகழ்கிறார். இயற்கையாக நிகழக்கூடியவற்றைத் தம் படைப்புகளின் ஊடே கதையோடு தொடர்புப்படுத்திக் கூறியுள்ளார். 'கோடை' என்ற சிறுகதையில் இயற்கை வருணனைகளைக் காணமுடிகிறது.

"பெரிது பெரிதான அந்த வாகை மரங்கள் சிவப்பாய்ப் பூக்களை உதிர்த்துக் கொண்டு கடும் வெய்யிலிலும் பச்சையாய் இருந்தன. விழுதுகள் விட்ட ஆலமரத்தின் குறுகிய நிழல்கள் போலில்லாமல் பரவலாக நிழல் பரப்பி நின்றன. காலனியின் தெருக்களில் வாகை மரங்கள் இருந்த இடங்கள் இன்னும் அழகானதாகச் சிவப்பாய் பூக்கள் கீழே தாறுமாறாய் விழுந்து கிடக்க மரத்தின் உபயமாய் நிழலும், மரத்தின் பாதுகாப்பிற்கென்றே மேலே கூடாரம் போட்டுக் கொண்ட மாதிரி நிழல் அடர்த்தியாகவும், வெளிச்சம் புகுந்து ஒலி வட்டங்களையோ, கோடுகளையோ, தரையில் பரப்பாமலும் இருந்தது"[170] என்று வரும் வருணனைகளின் இடையே கதையும் செல்கிறது. மரங்கள், பூக்கள், நிழல் எனக் கூறிச் செல்லும் ஆசிரியர், இடையில் தன் மனைவி, குழந்தைகள் இவர்களின் செயல்பாடுகளையும் கூறுவதில் இருந்து இயற்கையோடு கதையை முடிவுக்குக் கொண்டுவருகிறார்.

'ஸ்தலங்கள்' என்ற சிறுகதையில் "சின்ன வயதில் மரங்கள் ஊடேயே காலம் கழிந்தது நினைவுக்கு வந்தது. தென்னந்தோப்பின் ஒரு பகுதியில் குடிசை வீடு. மூச்சைச் சுகமாக இழுத்திழுத்து விரிந்த மார்புகள். பறவைகளின் வெவ்வேறு ஒலிகளை ரசித்து உள்ளுணர்ந்த மனம்."[171]

'விருட்சங்களும் அவனும்' என்ற சிறுகதையில் வரும் இயற்கை வருணனை "புல்வெளிகளில் உட்கார்ந்து அதன் சார்பான மரங்களில்

சாய்ந்துகொண்டு ஆசுவாசப்படுத்த வேண்டியிருந்திருக்கிறது. மரங்களின் உச்சிகள் வானத்தைத் தொடுவதைக் கண்கள் கூசப் பார்க்க பார்த்ததுண்டு. வெளிர் நீலமான ஆகாயத்தைக் கூர்ந்து பார்த்திருக்கிறேன். ஈரமான பாத்திகள், மிதித்துக் கொண்டு நடந்தோம் சேறானது கால்கள், சோளைத் தட்டைகள் உடம்பில் உரசின. ஒருவகையான வெண்மைத் தூளைத் தூவியது போல சோளத் தட்டைகள் முகத்திலும், உடையிலும் பூசின."[172]

"வயிற்றுப் பசியோடு இருப்பவனுக்கு ஆகாரங்கள் கிடைத்த மாதிரி, என்ன மழை பெய்தாலும் உறிஞ்சிக் கொள்கிற நிலம் அவனுக்கு ஆச்சர்யமாக இருக்கும். இதை மீறித் தெருக்களில் மழைத் தண்ணீர் எப்படி ஓடும் என எண்ணிப் பார்த்தான்."[173]

'சேதாரம்' என்னும் சிறுகதையில் வரும் இயற்கை வருணனை சிறப்பாக அமைந்துள்ளது. 'அழகுணர்ச்சி' என்பது படைப்பிலக்கியத்தில் அணிசேர்க்கும் சிறந்த உத்தியாகும். இயற்கையை உள்ளவாறு உணர்ந்ததை வாசகனோடு பகிர்தல் சிறுகதையின் போக்கைச் செம்மைப் படுத்துகிறது. கதையின் நிகழிடம், சூழல் போன்றவற்றை எளிதில் உணர்த்தவும் இவை பெரிதும் பயன்படுகிறது. இக்கூற்றைச் சுப்ரபாரதிமணியன் தனது சிறுகதைகளில் பொருத்தமுற அமைத்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**உவமை உத்தி**

கதையோட்டத்திற்கு ஏற்ப படைப்பாளிகள் ஆங்காங்கே உவமைகளைச் சேர்த்துப் படைப்புகளை வலிமையுடையதாகப் படைக்கின்றனர். அவ்வாறு பயன்படுத்தப்படும் உவமைகள் கதைக்கு முக்கியமானதாகக் கருதப்படுகின்றன.

தெரிந்த பொருளைக் கொண்டு தெரியாதப் பொருளை விளக்குவது உவமையாகும். உவமையின் மூலம் கண்ணால் காணமுடியாதப் பொருள்களின் இன்பத்தினைப் பெறலாம். எல்லாப் படைப்பாளர்களாலும் உவமையை எளிதாகக் கையாளக் கூடியதாயினும் அவரவர் தன்மைக்கேற்ப பல இயல்புகளை உள்ளடக்கிக் கூறுவதால் படைப்பு மேலும் சிறப்படைகிறது.

"படைப்பாளனின் படைப்பின் ஆற்றலை உணர்த்தக் கருதிய உணர்வின் எல்லையை வெளிப்படுத்தும் இலக்கிய உத்திகளுள் உவமை சிறப்பிடம் பெறவல்லது. உவமைகள் இலக்கியப் புலவனின் படைப்பாற்றலையும் கூர்ந்து நோக்கும் பார்வையையும் சமுதாயச் சூழலின் செல்வாக்கையும் உணர்த்துவனவாகும்"[174] எனக் கூறுவர்.

இரு வேறுபட்ட பொருள்களிடையே தொடர்பையும் ஒப்புமையையும் காண்பது மட்டுமின்றி ஒரு பொருள் பற்றிய கவிஞனின் உணர்வை அல்லது மனப்பதிவை மற்றொரு பொருளுக்கும் பொருத்திப் பார்க்கக்கூடியதாக அமைவது உவமை.

"வினைபயன் மெய்வரு என்ற நான்கே வகை பெற வந்த உவமைத் தோற்றம்"[175] வினை, பயன், மெய், உரு எனத் தொல்காப்பியர் உவமையை வகைப்படுத்துகின்றார்.

"பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளோடு பொருள் புனைந்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை"[176]

என்று தண்டியலங்காரம் கூறுவதைப் போல பண்பு, தொழில், பயன் இவற்றில் ஒரு பொருளோடு ஒரு பொருள் ஒரு பொருளோடு பல

பொருள், பல பொருளோடு பல பொருள் மற்றும் பல பொருளோடு ஒரு பொருளையோ உவமையாகக் கூறுவர்.

"காணப்பட்ட பொருள்களை ஒப்பிட்டுப் பார்க்கும் இயல்பு மனிதனிடம் இயற்கையாக அமைந்துள்ள ஓர் இயல்பாகும். மனிதனிடம் என்று எண்ணம் தோன்றிற்றோ அன்றே மொழியுந் தோன்றி இருத்தல் வேண்டும். மொழி தோன்றிய அன்றே உவமை தோன்றி இருக்கும்."[177]

உவமை, உருவகம் முதலிய அணிகள் அணி இலக்கணத்துக்குள்ளேயே காணப்பட்டாலும், அவை ஏனைய அணிகளைப் போலில்லாமல் மிகவும் சிறப்புடையனவாக உள்ளன.

ஆகவே மனிதன் எண்ணத் தொடங்கியதிலிருந்தே உவமை தோன்றியிருக்கும். இவை இல்லாத இலக்கியமே இருக்காது. "உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும்"[178] என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கிணங்க பொருத்தமான உவமைகளை எளிமையாகப் படைப்பாசிரியர் கையாண்டுள்ளார்.

"காக்கைகள் எச்சமிட்ட கறை போல திட்டுத் திட்டாய் அழுக்குகள் படிந்திருந்தன."[179]

"ஆட்டுக் கறி குழம்புடன் கிடைக்கிற இட்லி போல இந்த பகல் தூக்கம்."[180]

"நா அவரெக் கல்யாணம் பண்ணியிருந்த இப்பிடியா ஒடக்க மாதிரி இருப்பேன், சேவக் கட்டு கோழி போல கோச்சக் கறியெத் தின்னுட்டு நிமிந்து நிப்பேன்."[181]

"நாயைக் குளிப்பாட்டி சிவிகையில் ஏற்றியது போல."[182]

"சுனைத் தண்ணி தேனாமிர்தம் போல இருக்குமுங்க"[183]

"முத்தின கோழி தண்ணியில ஊற வச்சபாக்கு போல இருக்கு"[184]

"சூயஸ் கால்வாய் போல நீளமான கால்வாய்"[185]

"வானம் கறுப்பு வர்ணத்தைப் பூசிக்கொண்டது போல இருந்தது."[186]

"உள்ளங்கையைத் தொட்டா வெந்துபோன சாதம் போல கொழஞ்சு வலிக்குது."[187]

"அந்தக் காலத்து தலையாரிக் கையில பெரிய கம்பு வெச்சிருப்பாங்க. சுடுகாட்டு வெட்டியான் போல."[188]

"கழுத பொதி சுமக்குறது போல"[189]

"பலா பிஞ்சொன்று கிடந்தது. அதன் பச்சையும் முட்களும் முள்ளம்பன்றி உருவத்தைக் குறுக்கிக் கொண்டு கிடப்பதைப் போல இருந்தது."[190]

"புதிதாய் கட்டிய பாலம் திரைச்சீலையை கட்டிவிட்டது போலக் கிடந்தது."[191]

"கீதாவின் ஒடுங்கின தோற்றத்தை ஒற்றை வெள்ளைத் தாளில் அடக்கிவிடலாம் போல இருந்தது."[192]

"உள்ளறை வலது மூலையில் தண்ணீரில் நனைந்த கோழிக்குஞ்சு போல குறுகி நடுங்கினாள் கீதா."[193]

"பொச்சம்மா சிலை மழுங்கி காரணமறியாத நோயால் சிதைந்துபோய் ஆதிவாசிப் பெண்ணின் உடம்பு போல சிதிலமடைந்துவிட்டது."[194]

*"முள் கரண்டியை வெச்சுச் சாப்புடறது கிட்டிப் புள் வெளையாடற போல தான் இருக்கும்."*[195]

*"அப்பா முகம் பேய் அறைந்தது போல இருந்தது."*[196]

இவ்வாறு உவமைகள் சூழலுக்கேற்பவும், நிகழ்ச்சிக்கேற்பவும் அருமையாக சித்தரிக்கப்பட்டுள்ளன.

சுப்ரபாரதிமணியன் தன்னுடைய சிறுகதைகளில் உவமையினை ஓர் உத்தியாகப் பயன்படுத்தி உணர்வுகளைச் சிறப்பாக வெளிப் படுத்தியுள்ளார். பெரும்பாலும் பாத்திரங்களின் நிறங்களையும், மன உணர்வுகளையும் கூறுவதாகச் சுட்டப்பெற்றுள்ளது.

**உம்மைத் தொடர்**

உம்மைத் தொடரானது இரு பெயர், பலபெயர், அளவுப் பெயர், எண்ணியற் பெயர், நிறைப் பெயர், எண்பெயர் என இவ்வாறு நிலைகளிலும் வரும். இதனைத் தொல்காப்பியர்,

"இரு பெயர் பல பெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப் பெயர்க் கிளவியும்
எண்ணின் பெயரொடு அவ்வாறு கிளவியும்
கண்ணிய நிலத்தே உம்மைத் தொகையே"[197]

என வரும் நூற்பாவில் சுட்டியுள்ளார். சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் பெரும்பாலும் உம்மைத் தொடர் இடம்பெறுகின்றன.

*"சீதாவிடமும், பத்மாவிடமும் பணத்தை அதிகமாய்ப் பார்க்க நேரிட்டதில்லை."*[198]

*"பத்மாவும் சீதாவும் அவர்களோடு அடையாளம் தெரியாத இருட்டில் பேசிக்கொண்டிருப்பார்கள்."*[199]

*“என் தோற்றம் குழந்தையும், தெய்வமும் என்ற சொற்றொடரில் வைக்கப்பட்டிருந்தது.”*[200]

*“உடம்பு வர அகப்பை அகப்பையா நெல்சாதமும், கறியும் வேண்டியதில்லை.”*[201]

*“பெண்களின் சிரிப்பையும், குழந்தைகளின் கலகலப்பையும் மறுக்காமல் வேடிக்கை பார்க்கும் குணம் எல்லோருக்கும்.”*[202]

*“மூன்று வருஷத்தில் ஜோசப்புடன் ராமானுஜமும், இளங்கோவும் சேர்ந்து கொண்டார்கள்.”*[203]

*“வீணையில் உறங்கும் ராகங்களையும் புது வானவில் தரை தொடாத மின்னல்களையும் வெவ்வேறு தெருக்களில் தனித்தனியே அந்த வருஷம் நடத்தின.”*[204]

*இவ்வாறு உம்மைத் தொடர்களைச் சிறுகதைகளில் பயன்படுத்தி அதனை ஓர் உத்தியாகச் சிறப்பாகப் பயன்படுத்திய செய்தி புலனாகிறது.*

**கூற்றுகளின் தன்மை**

*பாத்திரங்களின் இயல்பு, பின்னணி, வாழ்க்கைச் சூழல் ஆகியவற்றை வாசகனால் முழுமையாக அறிந்துகொள்வதற்கு அவர்களின் உரையாடல் உதவுகிறது. இதனை,*

*1. தன்மை கூற்று நோக்குநிலை*

*2. படர்க்கைக் கூற்று நோக்கு நிலை*

*என்று இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.*

**தன்மை கூற்று நோக்குநிலை**

எண்ணங்களை நேரடியாக வெளியிடுவது தன்மை கூற்று நோக்குநிலையாகும். இதன் மூலம் அப்பாத்திரத்தின் செயல்பாடுகளை ஆழமாக அறிந்துகொள்ள முடிகிறது.

"என் அப்பாவின் நாடோடி வாழ்க்கை போன்ற பிடிபடாத தொழில் காரணமாய்ச் செல்லம்மாவை நாங்கள் இழக்க வேண்டியதானது. சின்ன ஊர்களும், நகரங்களுமாக என் இருபத்தைந்து வயசில் செல்லம்மா ஒரு புராண கதாப்பாத்திரம் போல் எப்போதும் சந்தோஷமான அனுபவங்களை நினைவு கூர்வதுமாகிறது."[205]

"நான் சொன்ன சொற்ப வார்த்தைகளின் வெகு சந்தோஷமாகி என் நிஜமான உணர்வுகளைப் புரிந்துகொள்கிற விதமாய்ச் சிரித்தாள்."[206]

"நான் கல்யாணம் பன்ற இளம் வயசிலே நான் யூனியனிஸ்டா இல்லே. பெரியவங்க பண்ணி வெச்சுக் கல்யாணம், சாதாரணப் பொண்ணு அவ."[207]

தன் கூற்று நோக்குநிலையில் 'நான்' என்ற தன்மைச் சொல் காணப்படுகிறது. பிறருடைய எண்ணங்கள் வழியும் பிறருடைய கூற்று வழியும் கதையை வளர்த்துச் செல்வது படர்க்கை கூற்று நோக்கு நிலையாகும்.

படர்க்கை நிலையில் நின்று ஆசிரியர் கதையைக் கூறினாலும் சிறுகதையின் பெரும்பகுதியை உரையாடல் மூலமே நடத்திச் செல்கிறார். கதையின் கருவும், கருத்தும், கதைமாந்தர் படைப்பின்

பங்கும், பாங்கும் இத்தகு உரையாடல் வழியே நல்விளக்கம் பெறுகின்றன.

பாத்திரங்களின் குணநலன்கள், கல்வி, வாழ்க்கையனுபவம், குடும்பச் சூழல், எண்ணவோட்டங்கள் ஆகியவற்றைச் சரியாக வெளிக்காட்டுபவை இவ்வகையான கூற்றுகளே ஆகும்.

*"அவன் அப்பா வேலைசெய்துவந்த பனியன் கம்பனி கூடக் கிறிஸ்துவர் ஒருவருடையது என்பதால் புத்தாண்டில் விடுமுறைதான்."*[208]

*"அவர் ஆபிஸ் போய்விட்ட பகல்களில் உட்காரத் தோன்றியது. சுகந்தி போகணுமா? என்றாள்."*[209]

*"அவளைப் பற்றிய நினைவுகள் எல்லோருக்கும் நிகழ்ந்து போனது மனதில். மனம் கொஞ்சம் பிசகிப் போனவளா என்ற கேள்வியை எல்லோரும் எதிர் கொண்டனர்."*[210]

*"அவள் வி.பி. தெருவெல்லாம் தாண்டி லட்சுமி தியேட்டர் ரோட்டில் போய்க் கொண்டிருந்தாள்."*[211]

*"அவள் மறைகிறவரை நின்றுவிட்டுப் படிகளில் இறங்கிய போது அவன் பஸ் ஸ்டாண்டிலிருந்து இரண்டு பர்லாங் வந்துவிட்டதாய் உணர்ந்தான்."*[212]

*"அவன் அப்பா கூடப் பல சமயங்களில் சொல்வார். அவங்களைப் பார்க்க பொறாமையா இருக்குடா. உங்க தாத்தா அந்தப் பஞ்சக் காலத்திலே உம்ன்னு சொல்லியிருந்தால் போதும், நாமும் இப்போ வேதக்காரங்கதா."*[213]

இவ்வாறாக எல்லா சிறுகதைகளிலும் படர்க்கைக் கூற்று உத்தி அதிகமாகக் காணப்படுகிறது. அவன், அவள், அவர் என்ற படர்க்கை தன்மையுடைய தொடர்களால் பாத்திரங்களின் செயல்பாடுகளை அறியமுடிகிறது.

**சிறுகதைத் தொடக்கம்**

சிறுகதையின் தொடக்கம் படிப்பவரின் ஆர்வத்தையும், கற்பனையையும் தூண்டக்கூடிய வகையில் இருக்க வேண்டும். இவ்வகையில் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள் படிக்கும்போதே ஆர்வத்தை ஏற்படுத்துகின்றன. சிறுகதைகளின் தொடக்கத்தில் முதன்மைப் பாத்திரப்பெயர், வருணனைகள், ஏதோ ஒரு ஆச்சரியத்துடனும் கதை தொடங்குவதைக் காணமுடிகிறது.

*"சாந்தா படை சூழப் போய்க்கொண்டிருந்தாள். படையென்றால் அவளுடன் எப்போதும் ஒட்டின புதுக்கைகளாய்."*[214]

*"இந்த வருஷம் மாதிரி எந்த வருஷமும் இப்படி வெயில் இருந்திருக்காது."*[215]

*"அதற்கப்புறம் ராயபுரம் போகவே இல்லைதான் சொர்ணாகூட போயிட்டு வாயேன் என்றுதான் சொல்கிறாள்."*[216]

*"அவளின் வருகை அவனுக்குச் சுற்று அதிர்ச்சி அளிக்கும் வகையாக இருந்தது."*[217]

*"பிய்த்தெறியப்பட்ட மரங்களைப் பார்க்க பார்க்க சங்கடமாகவே இருந்தது."*[218]

*"எனது தோற்றமே எனக்குச் சிரிப்பை வரவழைத்தது."*[219]

*"வெயில் கொஞ்சம் இதமாக இருந்தது. சுள்ளென்று அடித்து உடம்பை உபத்திரவம் செய்யும் வெயில் எப்போதும் வரும் என்று ராஜேந்திரனிடம் கேட்டேன்."*[220]

*"வெறி பிடித்தவர் மாதிரி கைக்கெடிகாரத்தை உதறிக் கொண்டார் சண்முகம்."*[221]

*"பிரதமர் வருகை பற்றிக் கிராமத்தில் பத்து நாட்களாய்ப் பேச்சு. செல்லத்தாயிக்கு ஆச்சர்யமாக இருந்தது."*[222]

*"ஸ்ரீமுகி பார்த்த பார்வையில் கொட்டடியில் அடைபட்ட மாட்டைப் பார்ப்பது போலிருந்தது."*[223]

*"ஷட்டரைப் போட்டுக் கடையை மூடுங்க மொதல்லே... கடைக்குள் நுழைந்த பெண் கலவர முகத்துடன் ஷியாமளாவைப் பார்த்தாள்."*[224]

*"கண்களை உயர்த்தி வானத்தைப் பார்த்து ரொம்ப நாளாகிவிட்டது மாரியப்பனுக்கு."*[225]

*"புதுப்புடவையைக் கையில் எடுத்துக்கொண்டாள் வசந்தி. கைகளில் பூக்களையும், மயிலிறகுகளையும் அள்ளிக் கொண்டது போலிருந்தது."*[226]

*"அடர்த்தியான பனி இன்றைக்கு குறைந்திருக்கிறது. மூன்று நாட்களாய் தொடர்ந்த மழையைப்போல் பெய்துகொண்டிருந்தது."*[227]

*இவ்வாறாகச் சிறுகதைகளின் தொடக்கம் விருவிருப்பாக, ஆர்வத்தை தூண்டும் விதத்தில் தொடக்க உத்தியை சுப்ரபாரதிமணியன் கையாண்டுள்ளார்.*

**கதை முடிப்பு உத்தி**

கதையின் முடிவானது சுபமாகவும் இருக்கலாம், துக்கமாகவும் இருக்கலாம். சுப்ரபாரதிமணியன் இவ்விருவகையான முடிவுகளையும் தன்னுடைய படைப்புகளில் காட்டியுள்ளார். அந்தந்த முடிவிற்கேற்ப வாசகர்களின் உள்ளமும் சுப, துக்கத்தை அனுபவிக்கும் விதத்தில் அமைக்கப்பட்டுள்ளது கதையின் சிறப்பம்சமாகும்.

ஆசிரியரின் சிறுகதைகளில் 56 சிறுகதைகள் மகிழ்ச்சியைத் தரக்கூடியதாகவும், 98 சிறுகதைகளின் முடிவுகள் வருத்தத்தைத் தரக்கூடியதாகவும் அமைந்துள்ளன.

'வெடி' என்ற சிறுகதையில் 'சுப்பையன்' என்பவர் தண்ணீர்த் தட்டுப்பாட்டால் கிணறு வெட்ட வேண்டும் என நினைத்துப் பாதியளவு வெட்டிவிட்டான். ஆனால் பாதியில் மொழிப் பிரச்சனை காரணமாக வன்முறை வெடிக்கிறது. அவ்வூரில் பள்ளி, கல்லூரிகளுக்கு விடுமுறை, யாரும் எங்கும் செல்லமுடியாத சூழல் உருவாகிறது. கிணறு பாதி வெட்டியாயிற்று. இப்போது வெடிவைத்தால் எளிதில் தண்ணீர் வந்துவிடும் என்ற நிலை சுப்பையனுக்கு. ஆனால் கலவரம் காரணமாக யாரும் வெடிபோடக்கூடாது என காவல்துறையினர் அறிவித்தனர். மன வருத்தத்துடன் சுப்பையன் கலவரத்தின் முடிவுக்காகக் காத்திருக்கிறார்.

'அரேபியக் கிராமம்' என்ற சிறுகதையில் சொக்கநாதன் என்பவர் வெளிநாடு சென்று வேலைபார்த்து சம்பாதித்தவர். ஊருக்கு வந்தபின் எந்த வருமானமும் இன்றி சாப்பாட்டிற்கே கஷ்டப்படும் நிலை. திருமண வயதில் ஒரு பெண். பேருக்கு ஆண் பிள்ளை என்று ஒருவன் எந்த உதவியும் இல்லை. மனதால் தன் நிலைகண்டு வேதனைப்படுகிறார் சொக்கநாதன்.

‘கிணற்றலை’ என்ற சிறுகதையில் வரும் புதுமணத் தம்பதிகள் இவர்களின் அன்புமயமான வாழ்க்கை ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து செல்லும் விதம் என கதைமுழுவதும் காதல் நிரம்பியுள்ளது. மனைவிக்காக ஒவ்வொன்றையும் பார்த்து பார்த்துச் செய்யும் கணவன் என கதையின் முடிப்பு உத்தி மகிழ்ச்சியில் நிறைவடைகிறது.

இவ்வாறு சுப்ரபாரதிமணியனின் 154 சிறுகதைகளில் பல்வேறு விதமான உத்திகளைக் கையாண்டு சிறுகதைகளைச் சிறக்கச் செய்துள்ளார். பெரும்பான்மையான சிறுகதைகளின் முடிவுகள் வருத்தத்தைத் தரக்கூடியதாக உள்ளது.

## உத்திமுறை அட்டவணை




| **y** அச்சில் உத்திமுறை விழுக்காடு | |
|---|---|
| **x** அச்சில் உத்திகள் | *1.* அடுக்குத்தொடர்<br>*2.* நனவோடை<br>*3.* இரட்டைக்கிளவி<br>*4.* ஒலிக்குறிப்பு<br>*5.* பழமொழி<br>*6.* சொலவடை<br>*7.* பிறமொழி<br>*8.* கதைக்குள் கதை<br>*9.* உவமை<br>*10.* உம்மை<br>*11.* முருகியல் |

**முடிவுரை**

♦ இலக்கியப் படைப்பாளரின் வெற்றிக்கு அவர் கையாளும் உத்திகள் மிக முக்கியமான காரணிகளாகும். முகத்திற்குத் திலகம் இடுவதுபோல் படைப்பிற்குப் பெருமை சேர்ப்பது உத்தியாகும். எளிமையான உத்திமுறைக்கு வாசகர்களைக் கவரும் சக்தி உண்டு.

♦ படைப்பாசிரியர் தன் மொழிப் புலமையை விளக்கும் விதத்தில் அடுக்குத் தொடர்கள், இரட்டைக் கிளவி, ஒலிக்குறிப்புச் சொற்களை எடுத்தாண்டுள்ளார்.

♦ பாத்திரங்களின் இயல்பினையும் தன்மையும் குறிக்கப் பழமொழிகளும், சொலவடைகளும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

♦ காலப்போக்கிற்கேற்ப பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். ஒரு பாத்திரம் முன்னால் நடந்த நிகழ்வையோ அல்லது அவ்வவ்போது நடந்த நிகழ்வையோ நினைத்து மனதிற்குள்ளேயே பேசிக்கொள்வதான நனவோடை உத்தியும் இடம்பெற்றுள்ளது.

♦ கதைக்குள்ளேயே மற்றொரு கதையைச் சொல்லும் முறையான கதைக்குள் கதை கூறும் உத்தியும் எடுத்தாளப்பட்டுள்ளது.

♦ நோக்குநிலை ஆசிரியரின் நடை, தன்னோக்கு நிலை, படர்க்கைக் கூற்றுநிலை உத்தியும் இடம்பெற்றுள்ளன.

♦ முருகியல் கூறுகளையும் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறையும் இவரது தனித்த வெளிப்பாட்டு உத்திகளாகும்.

♦ கதைத் தொடக்க உத்தியும், கதை முடிப்பு உத்தியும் கையாளப் பட்டுள்ளன. பிறவற்றை ஒப்பிட்டுக் கூறுவதற்கு உவமைத் தொடர் உத்தி போன்றவையும் காணப்படுகின்றன. உம்மைத் தொடர் உத்தி போன்றவையும் காணப்படுகின்றன. உத்திமுறை பயன்பாட்டை அட்டவணை கொண்டு விளக்கப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**


1. Cossells, Encycelopedia of Literature (ed.) S.H.Steninberg, P.505

*2. சண்முகவேலன், தமிழ்ப் பொழில், மலர் 3 ஜுலை 1986, ப.100*

*3. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.146*

*4. பா.உதயக்குமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன், பக்.236-237*

*5. சி.மறைமலை, புதுக்கவிதை முப்பெரும் உத்தி, ப.61*

*6. இரா.குருநாதன், கரந்தை மலர் 4, ப.211*

*7. ந.பிச்சமுத்து, திறனாய்வும் தமிழ் இலக்கணக் கொள்கைகளும், ப.4*

*8. ச.வே.சுப்ரமணியன், இளங்கோவின் இலக்கிய உத்திகள், ப.5*

*9. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள்., நூ.எ.112*

*10. சிவஞானமுனிவர் (உ.ஆ), நன். நூ.எ.14*

*11. தொல்காப்பியம், எச்சம். நூ.எ.15*

*12. கை குலுக்க நிறையச் சந்தர்ப்பங்கள், ப.67*

*13. வெளிச்சமற்றவை, ப.72*

*14. மேலது, ப.76*

*15. எதிர்ப்பதியம், ப.131*

*16. மேலது, ப.132*

*17. விருட்சங்களும் அவனும், ப.147*

*18. கண்ணாமூச்சுகளும் முகமூடிகளும், ப.179*

*19. இன்னும் மீதமிருக்கிற பொழுதுகளில், ப.20*

*20. அடையாளம், ப.52*

*21. ஒவ்வொரு இராஜகுமாரிக்குள்ளும், ப.87*

*22. எதிர்ப்பதியம், ப.131*

*23. ஸ்தலங்கள், ப.135*

*24.* நதிக்கரையும், கான்கிரிட் வனங்களும், *ப.161*

*25.* உயிர், *ப.171*

*26.* கண்ணாமூச்சுகளும் முகமூடிகளும், *ப.176*

*27.* மேலது, *ப.179*

*28.* எல்லோருக்குமான நேசம், *ப.181*

*29.* எஞ்சியது, *ப.203*

*30.* பகல், *ப.208*

*31.* மேலது, *ப.209*

*32.* மேலது, *ப.211*

*33.* கூட வரும் அவர்கள், *ப.216*

*34.* சுவர், *ப.230*

*35.* இடம், *ப.238*

*36.* வசந்த விஹார், *ப.243*

*37.* மேலது, *ப.244*

*38.* மேலது, *ப.252*

*39.* ஒரு தற்காலிக உறவு, *ப.253*

*40.* புதுப்பழக்கம், *ப.261*

*41.* மேலது, *ப.264*

*42.* மிச்சம், *ப.296*

*43.* புகை, *ப.374*

*44.* மேலது, *ப.375*

*45.* பங்கீடு, *ப.420*

*46.* மேலது, *ப.425*

*47.* காலம், *ப.442*

*48.* சமாதானம், *ப.451*

*49.* நரகத்திலிருந்து நகரத்திற்க, *ப.466*

*50. அவளும் அவளும், ப.472*

*51. வழித்துணைகள், ப.526*

*52. வாக்கு, ப.597*

*53. பிணவண்டி, ப.619*

*54. திகில், ப.655*

*55. கூரிய நாடா, ப.700*

*56. மீட்சி, ப.713*

*57. எண்களுடன் சில எழுத்துக்கள், ப.740*

*58. காதலர்கள் தினம், ப.775*

*59. உறுத்தல், ப.809*

*60. மேலது, ப.815*

*61. மேலது, ப.816*

*62. சார்ந்து நிற்க ஒரு மரம், ப.839*

*63. யோகம், ப.941*

*64. தொலைதல், ப.956*

*65. மேலது, ப.957*

*66. பிரகாசம், ப.959*

*67. ஓலைக்கீற்று, ப.1002*

*68. நீலப்படமும் சுசித்ராவும், ப.1019*

*69. கழிவு, ப.1026*

*70. சூடு, ப.1033*

*71. சாம்பல், ப.1037*

*72. மேலது, ப.1038*

*73. காற்றில் அலையும் சிறகு, 1064*

*74. நொய்யல், ப.1068*

*75. காத்திருக்கிறவர்கள், ப.1081*

*76.* எல்லோருக்குமான துயரம், *ப.1089*

*77.* மேலது, *ப.1089*

*78.* மேலது, *ப.1089*

*79.* மேலது, *ப.1089*

*80.* மேலது, *ப.1091*

*81.* மேலது, *ப.1092*

*82.* மேலது, *ப.1092*

*83.* மேலது, *ப.1092*

*84.* மேலது, *ப.1094*

*85.* மேலது, *ப.1094*

*86.* துறவு, *ப.1097*

*87.* மேலது, *ப.1098*

*88.* மேலது, *ப.1101*

*89.* பிரம்மைகள், *ப.1103*

*90.* மேலது, *ப.1106*

*91.* மேலது, *ப.1107*

*92.* மேலது, *ப.1109*

*93.* விதை, *ப.1115*

*94.* மேலது, *ப.1116*

*95.* மேலது, *ப.1116*

*96.* மேலது, *ப.1116*

*97.* ராக்கி, *ப.1124*

*98.* மேலது, *ப.1124*

*99.* மேலது, *ப.1125*

*100.* விரதம், *ப.1128*

*101.* தானம், *ப.1135*

102. மேலது, ப.1135

103. பலிச்சோறு, ப.1141

104. பா.உதயகுமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன், ப.314

105. அப்பா, ப.6

106. மேலது, ப.7

107. சிலவேறு தினங்கள், ப.46

108. மேலது, ப.48

109. அடையாளம், ப.53

110. வெடி, ப.103

111. ஸ்தலங்கள், ப.135

112. நாதம், ப.140

113. தீயாய்ப் பறவைகள், ப.157

114. மேலது, ப.158

115. வசந்த விஹார், ப.243

116. மிச்சம், ப.299

117. தீர்ப்பு, ப.306

118. கசிவு, ப.313

119. நசுக்கம், ப.381

120. மேலது, ப.382

121. பங்கீடு, ப.425

122. நரகத்திலிருந்து நகரத்திற்கு, ப.466

123. வழித்துணைகள், ப.524

124. மேலது, ப.531

125. வதை, ப.560

126. தருணம், ப.575

127. வாக்கு, ப.597

128. மிதிபடல், ப.733

129. பூ, ப.755

130. பழைய ஒயினும் புதுச்சாராயமும், ப.761

131. மணல், ப.871

132. ஒரு துப்பாக்கியும் சில பறவைகளும், ப.923

133. யோகம், ப.940

134. ஈரம், ப.978

135. இந்திராணிமணியன், இருபதாம் நூற்றாண்டிற்கான தமிழ் இலக்கணம், ப.83

136. பா.உதயகுமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன், ப.317

137. அடையாளம், ப.56

138. எல்லோருக்குமான நேசம், ப.185

139. மிச்சம், ப.296

140. எதிர், ப.433

141. நரகத்திலிருந்து நகரத்திற்க, ப.470

142. கூண்டும் வெளியும், ப.532

143. ஒளிப்பொறி, ப.600

144. மகா வாக்கியம், ப.880

145. யோகம், ப.937

146. பா.உதயகுமார், அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன், ப.317

147. தொல்.செய்.நூ., 175

148. சில வேறு தினங்கள், ப.49

149. சுடுகாட்டுப் பூங்கா, ப.610

150. எதிர்ப்பு, ப.763

151. நவீனம், ப.427

152. இன்னும் மீதமிருக்கிற பொழுதுகளில், ப.22

153. புகை, ப.372

154. காலம், ப.440

155. புகை, ப.373

156. காலம், ப.440

157. விரதம், ப.1130

158. புதைந்த காற்று, ப.689

159. வாகனம், ப.744

160. நெருப்புக் கோளம், ப.820

161. இர.இராமானுச்சாரி, அறிவு ஆராய்ச்சி இயல், ப.43

162. அது ஒரு பருவம், ப.59

163. அஞ்சலி, ப.858

164. கண்ணாமூச்சுகளும் முகமூடிகளும், ப.177

165. பங்கீடு, ப.424

166. நவீனம், ப.427

167. நிழல் உறவு, ப.27

168. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.125

169. மேலது, ப.17

170. கோடை, ப.99

171. ஸ்தலங்கள், ப.137

172. விருட்சங்களும் அவனும், ப.147

173. சேதாரம், ப.722

174. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.125

175. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்.பொருள். உவமை. நு.எ.272

176. தண்டி, நூ.எ.31

177. அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.240

178. மு.கூ.நூ. உவமை. நூ.8

179. அடையாளம், ப.52

180. அது ஒரு பருவம், ப.62

181. ஒவ்வொரு இராஜகுமாரிக்குள்ளும், ப.91

182. மூன்றாவது வரம், ப.339

183. வெடி, ப.106

184. தீர்ப்பு, ப.312

185. கடைசிப் பார்வை, ப.367

186. வழித்துணைகள், ப.323

187. பூ, ப.753

188. எதிர்ப்பு, ப.763

189. பிரகாசம், ப.962

190. மேலது, ப.963

191. சாம்பல், ப.1039

192. பாதுகாப்பு, ப.1052

193. மேலது, ப.1054

194. மறைந்த பிரதேசம், ப.1060

195. காற்றில் அலையும் சிறகு, ப.1062

196. பலிச்சோறு, ப.1141

197. தொல்.எச்சம். நூ.21

198. அப்பா, ப.12

199. மேலது, ப.13

200. நிழல் உறவு, ப.27

201. சில வேறு தினங்கள், ப.37

202. அடையாளம், ப.53

203. அது ஒரு பருவம், ப.62

204. உறுத்தல், ப.814

*205. நிழல் உறவு, ப.32*

*206. கை குலுக்க நிறைய சந்தர்ப்பங்கள், ப.71*

*207. ஸ்தலங்கள், ப.136*

*208. அது ஒரு பருவம், ப.62*

*209. கோடை, ப.98*

*210. ஒரு சின்ன பிரயாணத்திலும்கூட, ப.117*

*211. மேலது, ப.119*

*212. மேலது, ப.120*

*213. உறைவிடங்கள், ப.281*

*214. வெளிச்சமற்றவை, ப.72*

*215. கோடை, ப.92*

*216. வெடி, ப.103*

*217. காயம் பட்டவனும் காக்கைகளும், ப.120*

*218. விருட்சங்களும் அவனும், ப.147*

*219. தீட்டு, ப.343*

*220. கடைசிப் பார்வை, ப.363*

*221. காலம், ப.440*

*222. வருகை, ப.499*

*223. ஒட்டு, ப.853*

*224. மூவர், ப.903*

*225. கழிவு, ப.1021*

*226. விரதம், ப.1128*

*227. புகார், ப.1110.*

இயல் – 5

# அகப்புறப் போராட்டம்

## பொருளடக்கம்

9. முதிர் கன்னி

- ♦ வறுமையால் திருமணம் ஆகாத பெண்
- ♦ ஊனம் உற்ற பெண்
- ♦ அழகற்ற தோற்றம் உடையவர்கள்

10. மகப்பேறின்மை

11. பரத்தையர்

- ♦ காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள்
- ♦ மனநிலை சரியில்லாத பெண்கள்
- ♦ வறுமையால் பாலியலுக்குத் தள்ளப்பட்டவர்கள்
- ♦ வேலைக்குச் செல்லும் பெண்கள்

12. புறப் போராட்டம்

- ♦ சமுதாய உறவு
- ♦ நட்புறவு
- ♦ நட்பின் மேன்மை
- ♦ இலக்கியங்களில் நட்பு
- ♦ உழைப்பின் சிறப்பு
- ♦ தொழில் போராட்டம்
- ♦ கலவரம்
- ♦ சுற்றுச்சூழல்
- ♦ சுற்றுப்புறச் சூழ்நிலை
- ♦ வேலையின்மை
- ♦ வறுமை
- ♦ சாதி – மதம்

13. கலாச்சாரச் சீரழிவு

14. முடிவுரை

15. சான்றெண் விளக்கம்

# அகப்புறப் போராட்டம்

## முன்னுரை

மனிதன் தன் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களால் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகின்றான். தன் அக வாழ்விலும், புற வாழ்விலும் ஏற்படும் சிக்கல்களுக்குத் தொடர்ந்து தீர்வுகாண முற்படுகின்றான். இதனால் மனிதர்களுக்கு வாழ்க்கையே போராட்டக் களமாக மாறிவிடுகிறது. பண்டைத் தமிழர் அகம் என்று வழங்கிய காதல் வாழ்க்கையை இன்று தனி வாழ்க்கை என்ற சொல்லால் குறிக்கின்றனர். ‘புறம்’ என்று வகுத்ததற்கு இணையான சொல்லாக பொது வாழ்க்கையைக் குறிப்பிடுகின்றனர். ஆதலின் அகம், புறம் என்பன முறையே இன்று தனி வாழ்க்கை, பொது வாழ்க்கை என்ற சொற்களால் வழங்கப்படுவதை அறியமுடிகிறது.

சமூகத்தில் காணப்படும் இக்கட்டமைப்பு பல்வேறு முரண்களால் ஆனது. தனது தேவைகளை நிறைவேற்றுவதற்கு மனிதன் பல்வேறு போராட்டங்களை, சிக்கல்களைத் தொடர்ந்து சந்திக்க நேரிடுகிறது. குடும்ப வாழ்க்கையிலும், குடும்பம் தவிர நிறுவனம் சார்ந்த பொது வாழ்க்கையிலும் போராட்டக் களங்கள் மிகுந்து காணப்படுகின்றன. இதனைச் சிறுகதை இலக்கியங்கள் சிறப்பாகச் சித்தரிக்கின்றன. ஆய்வுக்குரிய சிறுகதைகளில் குடும்பம், கணவன், மனைவி, குழந்தைகள், பெற்றோர்கள் போன்றோர் தொடர்புடைய சிக்கல்களை அகப் போராட்டம் எனவும், குடும்பம் அல்லாத பணிபுரியும் இடங்கள், தொழில், சுற்றுச்சூழல், சாதி, மதம், அரசியல், சமூகச் சடங்குகள், கலவரங்கள் போன்ற மனிதனின் புற வாழ்க்கையோடு தொடர்புடையவை புறப் போராட்டம் எனவும் இவ்வாய்வுப் போக்கு அமைந்துள்ளது. இவ்விரு போராட்டங்களில்

ஆசிரியர் உணர்த்தும் சமுதாயக் கருத்துக்களை இவ்வியலில் விரிவாக ஆராயப்படுகிறது.

இவ்வியலில் சமூகவியல் விளக்கம், தனிமனிதன் சமூகம் தொடர்பு, மனித உறவுகள், மானுடச் சிக்கல்கள், போராட்டம் விளக்கம், வகைகள், அகப்போராட்டம் அதன் சிறுகதை வகைகள், புறப்போராட்டம், இதற்குக் காரணமாக அமையும் சிறுகதைகளின் வகைகள் போன்றவை ஆய்வுக்குரிய சிறுகதைகளோடு ஒப்பிட்டு ஆய்வு செய்து மெய்ம்மைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

தமிழர் தம் வாழ்க்கையை அகம், புறம் என இரண்டாகப் பகுத்துள்ளனர். காதல் வாழ்க்கையை அகமென்றும், காதல் தவிர்த்த பிறவற்றைப் புறமென்றும் அமைத்துக் கொண்டனர். ஒத்த தலைவனும் தலைவியும் தாம் எதிர்ப்பட்டு தம்முள் கூடித் துய்த்த இன்பத்தைப் பிறருக்குக் கூறமுடியாத உணர்வின் நிலையை அகம் என்கிறது. புறம் என்பது வீரம், கொடை போன்றவற்றைக் கூறுவர்.

கதைமாந்தர் படைப்பாலும் சிறுகதையில் கருவிற்கு வலிமை ஏற்படும். சிறுகதைகளில் கதைக் கரு அழுத்தம் பெறும் வகையில் கதைமாந்தரின் படைப்பு அமைந்துள்ளது. படைப்பாசிரியர் தன் மொழிப் புலமையை விளக்கும் விதத்தில் அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி, ஒலிக்குறிப்புச் சொற்களை எடுத்தாண்டுள்ளார்.

பாத்திரங்களின் இயல்பினையும் தன்மையையும் குறிக்கப் பழமொழிகள், நனவோடை போன்ற உத்திமுறைகளையும் பயன்படுத்தியிருக்கிறார்.

இவருடைய சிறுகதைகளில் தலைப்பைப் படித்த உடனேயே அவை கதையின் ஒட்டுமொத்தத் தன்மையை விளக்குவதாக அமைந்திருப்பது தனிச்சிறப்பாகும். ‘நிழல் உறவு’ என்ற சிறுகதையில் தன் நிழல் போன்று கூட வருவது பணமே என மனிதன் நினைக்கின்றான் என்பதை இக்கதையில் சுட்டியிருக்கிறார். ‘சிதறல்’ என்ற சிறுகதையில் தொழில் சிதைவையும், ‘நவீனம்’ என்ற சிறுகதையில் நாகரிக மாற்றத்தையும் அழுத்தமாகச் சித்தரித்துள்ளார்.

முற்போக்கு பெண்ணியக் குழுக்கள், அறிவு உழைப்பில் ஈடுபடும் பெண்மணிகளின் உரிமைகளில் காட்டுகின்ற அக்கறையை, வறுமையில் இருக்கும் ஏழைப் பெண்களின் நிலையை இவரின் சிறுகதைகளில் தனித்து ஆய்வு செய்வதற்கு இவ்வாய்வு களம் அமைத்துக் கொடுக்கிறது.

**சமூகவியல்**

சமூகவியலின் தோற்றம் பற்றி இரா.கல்பகம் பின்வருமாறு கூறுகிறார். “சமூகவியல் அகஸ்டே காம்டே (Auguste comte) என்னும் பிரான்ஸ் தத்துவ சமூகப் பேரறிஞரால் 1839 ஆம் ஆண்டில் முதன் முதலாக தோற்றுவிக்கப்பட்டது. சமூகவியல் அண்மையில் தோன்றியதால் உலகிலுள்ள மற்ற இயல்களைக் காட்டிலும் இளமையானது. இச்சொல் சமூகம் + இயல் என்னும் சொற்களின் சேர்க்கை ஆகும். ஆதலால் இலக்கண முறைப்படி அறிவியல், சமூகவியல் என்று கூறப்படுகின்றது”[1] என்கிறார்.

**சமூகம் அமைப்பு**

ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பே சமூகம் எனப்படும். ஒரு குழுவாகக் கூடி வாழும் மக்கள் கூட்டமே

சமூகம் என்பது இதனால் பெறப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கின்ற சிக்கலான சமூக உறவு முறைத் தொடர்புகளைத்தான் சமூகம் என்பர். மனிதன் கொள்கின்ற தொடர்புகளெல்லாம் சமூகத் தொடர்பு ஆகிவிட்டது. சமூகம் என்பது புலனாக உள்சார்புடைய கருத்தியல் பொருள் ஆகும்.

சமுதாயம் என்பது "ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மனித இனத்தவர் தங்கள் தேவைகளை நிறைவு செய்துகொள்ள ஏற்படுத்திக்கொண்ட ஒரு கூட்டமைப்பு ஆகும். ஒரு சிறிய நிலப்பரப்பின் ஒரு பொது வாழ்க்கை வழியைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதியே சமுதாயம் எனப்படும். இது மக்கள் ஒன்றுகூடி ஒன்றுபட்ட எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறிக்கும்"[2] என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகின்றது. சமூகக் கட்டமைப்பில் இதனை அடித்தளமாகக் குறிப்பிடலாம்.

**சமூகம் பற்றி அறிஞர்கள் கருத்துக்கள்**

கூட்டமாக வாழும் மக்கள் வாழ்க்கை முறைகளை அறிஞர்கள் பலர் விளக்கியுள்ளனர். கிங்சுலி தேவிசு என்ற அறிஞர் "சமுதாயம் சமூக வாழ்க்கையின் அனைத்து நிலைகளையும் கொண்டிருக்கின்ற சில நிலப்பகுதியில் உள்ள குழுவைக் குறிப்பதாகும்"[3] என்று கூறுகிறார்.

"சமூக உறவுமுறைகள் சமூகத்தை உருவாக்குகின்றன. ஒத்த தன்மைகளையும், பொதுவான தன்மைகளும், கூட்டுறவும்தான் சமூகத்தின் அடித்தளங்கள் ஆகும். ஆகவே சமூகம் என்பது ஒரு குழுவாகச் சேர்ந்து வாழும் மக்கள் அமைப்பே ஆகும்"[4] என்கிறார் திருமதி வெ.கனகசுந்தரம்.

"ஒரு குறிப்பிட்ட எல்லைப் பகுதியில் மிகுதியான காலம் வாழ்கின்ற மக்கள் பொதுவான கருத்துக்கள், பரம்பரைக் கருத்துக்கள், ஒருவரோடு ஒருவர் தோழமை உணர்வுடன் பழகுதல் போன்ற பல சமூகப் பண்புகளை வளர்த்துக் கொள்ளுதல் தவிர்க்க முடியாததாகிறது. இவ்வாறான சமூக வாழ்க்கையும் குறிப்பிட்ட பொதுவான பகுதியுமே சமுதாயத்தை உருவாக்குகின்றன"[5] என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகின்றார்.

**தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பு**

சமூகத்தில் தனிமனிதன் ஓர் அங்கம். ஆதலால் சமூக உறவுகள் தனிமனிதரது பங்கையும் சமூக அமைப்பையும் கலைஞன் நுணுக்கமாக அணுகுதல் வேண்டும். "ஒரு படைப்பாளி எந்த நிகழ்ச்சியைப் புதினமாகப் படைக்க விழைகிறானோ அந்த நிகழ்ச்சியின் பொதுப் போக்கையும், அதற்குரிய இயக்கத்தையும் தனி நிகழ்வுகளின் பின்னின்று இயங்கும் சமூக வலிமைகளையும் விளங்கிக் கொள்ளுதல் வேண்டும்"[9] என்பர் சோ.கிருஷ்ணராசர்.

மனிதனை இலக்கியம் சமூகத்தின் அடிப்படை அலகாகப் பார்க்கின்றது, "மனிதனை சமூகவியல்புடைய விலங்கு என்பர். மனிதன் விலங்கிலிருந்து தோன்றினான் என்பர். மனிதனை 'மா' வினின்று பிரித்துக் காட்டவே சமூகவியல்புடைய விலங்கு என்னும் சொற்றொடர் வழங்குகின்றது. எனவே மனிதனை விலங்கினத்திலிருந்து பிரிப்பதே இந்தச் சொல்தான் என்பதை உணர வேண்டும்"[10] என்கிறார் அ.மு.பரமசிவானந்தம்.

சமூகம் என்பது மனிதனால் உருவாக்கப்பட்டது. சமூக நிறுவனங்களும் மனிதனால் உருவாக்கப்பெற்றவை "மனிதனைப்

பற்றியும், அவனது ஆக்கங்களையும் நடத்தையை பற்றியும் மானுடவியல் விரிவாக ஆராய்ந்துள்ளது. தனிமனிதன் அன்றி மானுடக் குழுக்கள், இனங்கள், சமூகங்கள் பற்றிய ஆய்வுத் துறையாக மானுடவியல் அமைகின்றது. அது மனிதனைச் சமூக மனிதன் என்ற நிலையில் வைத்து ஆராய்கிறது."[11] சமூகத்தில் மனிதன் எவ்வாறு சூழலுக்கு ஏற்ப நடந்து கொள்கிறான் என்பதை இலக்கியங்கள் அந்தந்தக் காலத்தில் பதிவு செய்கின்றன.

"வாழ்க்கையைப் படைத்துக் காட்டுவது இலக்கியம். அந்த வாழ்க்கையைச் சித்தரிப்பதும் ஒரு சமூக நிகழ்ச்சிதான். இதை அறிகின்றபொழுது இலக்கியத்திற்கும், சமுதாயத்திற்கும் இடையே அமைந்துள்ள உறவு தெளிவாகும்"[12] என்கிறார் டாக்டர் திருமதி வெ.கனகசுந்தரம்.

இலக்கியத்தைப் படைக்கின்ற படைப்பாளன் சமுதாயத்தின் ஓர் உறுப்பினராக நின்றே படைப்புத் தொழிலைச் செய்கின்றான். பணம் படைத்தவன், பதவியில் இருப்பவன், பண்பில் உயர்ந்தவன் எனப் பல்வேறுபட்ட மனிதர்கட்கும் சமுதாயத்தில் ஓர் உயர்நிலை இருக்கின்றது. அதைப் போலவே படைப்பாளனுக்கும் சமுதாயத்தில் ஓர் உயர்நிலை உண்டு, சமுதாயத்தில் இன்று ஓர் உயர்ந்த மதிப்பையும், உரிய இடத்தையும் பெற்றே அவன் விளங்குகின்றான். இந்த உயர்வு அவனுக்குத் தன் பார்வை பட்டுத் தெறிந்த அறிவினால் கிடைத்த உயர்வாகும். அறிவுடையோனாறு அரசுஞ் செல்லுமாறு போலவும் பண்புடையார் பட்டுண்டுலகம் போலவும் இஃது ஓர் உயரிய சிறப்பாகும். அனால் எழுத்தாளன் எழுதுவது ஏதேனும் ஒருவகையில் சமுதாயத்தை நோக்கியதாகவே அமைந்துள்ளது.

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள் சமுதாயக் கூர்மையும், சிக்கல்களைக் கண்டறிந்து படைப்பாக மாற்றும் சிறப்பும் கொண்டவை. தனிமனிதனுக்கும் சமுதாயத்தில் தவிர்க்க இயலாத உணர்வுப் பூர்வமான தொடர்பையும் நன்கு விளக்கியுள்ளது.

சமுதாய விலங்காகிய மனிதன் வாழ்வில் சக மனிதர்களோடு கலந்து வாழ்கிறான். தன்னலத்தை மறந்து பொதுநலத்தைப் பேணிக் காத்து ஒற்றுமையுடன் வாழ முடியாத நிலையும் சமுதாயத்துடன் நல்லுறவு கொள்ளமுடியாத நிலையும் இன்று காணப்படுகின்றது. மக்களிடையே காணப்படும் முரண்பாடுகளுக்கு சில கூறுகள் காரணங்களாக அமைகின்றன. “சாதிசார் பெண்ணியம், தொழிலியல் அமைதியின்மை, குற்றமும் அறநெறிப் பிறழ்வும் ஆகியவை பெரும் சமூகப் பிரச்சினைகளில் சிலவாகும்”[13] என்கிறார் முனைவர் அ.அந்தோனிகுருசு.

**மனித மனங்கள்**

சமூக உளவியல் அறிஞர் எர்க்ஃபிராம், மக்களுடைய குண இயல்புகளின்படி ஆராய்ந்து மனிதர்களை நான்கு வகையாகப் பாகுபாடு செய்துள்ளார். அவையாவன, “இணக்க உணர்வினர், சுரண்டல் உணர்வினர், பதுக்கும் இயல்பினர், சந்தை வயதினர் என்பனவாகும். இந்நான்கு குணங்களும் அனைத்து மனிதரிடமும் கலந்து இருக்கும்”[14] என்பது அ.அந்தோனிகுருசு என்பவரின் கூற்றாகும். மேலும் மனிதர்களை பற்றிக் கூறும்போது,

“ ♦ ஆதிக்க மனோபாபம்
♦ சீரழிக்கும் மனோபாபம்
♦ சூழலுக்கேற்ப மாறிக்கொள்ளும் மனோபாவம்”[14]

என மனித மனங்களைக் கொண்டு மனிதர்களை வகைப்படுத்துகிறார்.

“மனிதர்களின் இருப்பை அவர்களது உணர்வுகள் தீர்மானிக்கவில்லை. ஆனால் அதற்கு மாறாக அவர்களது சமூக இருப்பே அவர்களது உணர்வுகளைத் தீர்மானிக்கிறது”[15] என்று ஜார்ஜ் தாம்சன் குறிப்பிட்டுள்ளார். மனிதன் மனிதனாக வாழ அவனுடைய மனமே அடிப்படையாகக் காரணமாக விளங்குவதை அறியமுடிகிறது.

மனித மனத்தில் தோன்றுவதுதான் மனிதநேயம். “ஆறறிவதுவே அவற்றொடு மனமே”[16] என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இதற்கு அடிப்படை மனம் ஆகும். மனிதன் என்ற சொல்லின் அடியாக மனம் என்ற சொல் தோன்றியிருக்க வேண்டும். மனத்தை உடையவன் மனத்தன் என்றிருந்து, பின்பு மனிதன் என்று ஆகியிருக்கலாம். மானிடம் என்றும் ஆகியிருத்தல் வேண்டும். மனித மனத்துக்கு உரிய பண்புகள் இல்லையெனில் உருவத்தில் மட்டுமே மனிதனாகவும், உள்ளத்தில் விலங்காகவும் மதிப்பீடு செய்யப்படுகிறான்.

“மனம் திருந்தின் இனம் திருந்தும்
இனம் திருந்தின் நாடு திருந்தும்
நாடு திருந்தின் உலகமே திருந்தும்”[17]

உலகம் திருந்தும் போது தான் மனிதநேயம் சிறக்கும். உலகம் திருந்துவதற்கு அடிப்படை ஒவ்வொரு தனி மனிதனின் மனமேயாகும். மனம் என்பதைக் குறிக்க “நெஞ்சம், உள்ளம், சிந்தை, சித்தம், அகம், இதயம்”[18] போன்ற சொற்கள் தமிழில் வழங்கப்படுகின்றன.

இந்திய தத்துவவாதிகள் “மனம், புத்தி, அகங்காரம், சித்தம்” என நான்கு வகையாகக் கூறுவர். “உளம் ஒரு தனிப் பொருள் அன்று. உயிரி வளர்ச்சி பெறுங்கால் பல படிகளில் காணப்படும் தொழிலே உளம் என்றும், அதனை வெளியிலிருந்து வரும் தூண்டல்களுக்கு

இயைத்துலங்கும் தொகுதியே மனம்”[19] என்றும் உளவியல் அடிப்படையில் மனம் என்பதற்கு முனைவர் சுந்தரசண்முகனார் குறிப்பிடுகிறார்.

ஐம்பொறிகளான மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து சுரப்பிகளும் தசையும் தண்டுவடத்தின் வாயிலாக மூளையோடு தொடர்பு கொள்கின்றன. அதுபோலவே மூளையும் நேராகத் தொடர்பு கொள்ளாமல் தண்டுவடத்தின் வாயிலாகவே பொறிகள், சுரப்பிகள் முதலியவற்றோடு தொடர்புகொள்கிறது. மூளையின் கீழ் தண்டுவடம் உள்ளது. தண்டுவடமானது பொறிகளில் இருந்து மூளைக்கும், மூளைகளில் இருந்து பொறிகளுக்கும் செய்திகளை வாங்கி அனுப்புகிறது. எனவேதான் தண்டுவடத்தை பல மாறி வினைகளின் இருப்பிடம்”[20] என்பர் அறிவியலார். இக்கருத்தை மாணிக்கவாசகர் திருவாசகர் திருவாசகத்தில்,

“மெய்ப்பால் நரம்பு கயிறாக
மூளை என்பு தோல் போர்த்த”[21]

என்றும்,

“என்பினை நரம்பிற் பின்னி
உதிரம் தோய்ந்து இறைச்சி மெத்திப்
பின்புறத் தோலைப் போர்த்து
மயிர்புறம் பொலிய வேய்ந்திட்டு
ஒன்பது வாயில் ஆக்கி
ஊர்பயில குரம்பை செய்தான்
முன் பெருந்தச்சன் மருள என்றான்”[22]

என்று திருத்தக்கத் தேவர் சீவகசிந்தாமணியிலும் கூறியுள்ளார். இக்கால அறிவியல், உளவியல் கருத்துகள் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுக்கு

முன்பே தமிழர்கள் 'நரம்பின் இயக்கமே மூளை' என்ற கருத்தை கூறி இருப்பது வியக்கத்தக்கதாகும். எனவே மனம், அகம் என்பதை ஒன்றாகக் கருதலாம். மூளையின் இயக்கமே மனமாகும்.

சிறுகதை ஆசிரியர்கள் இயல்பான மனித மனத்தைத் தங்கள் கதைகளில் இடம்பெற்றுள்ள பாத்திரங்களின் வழியே சித்தரிக்கின்றனர். குடும்ப வாழ்க்கையில் மனதைச் செம்மைப் படுத்தியவர்களே வெற்றியடைகின்றனர். சிக்கல்களும், போராட்டங்களும் மனிதனின் வெற்றிக்குப் படிக்கட்டுகள் என்பதை உணர்த்தவே சிறுகதைகள் படைக்கப்படுகின்றன. சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகள் பலவும் இவ்வகையைச் சார்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

இயற்கைப் படைப்பின் மணிமுடியாக விளங்குபவன் மனிதன் தனக்கேயுரிய சிறப்புப் பண்புகளாலேயே மனிதன் பிற விலங்குகளின்றும் வேறுபடுகிறான். அவனுடைய அகமே அவ்வேறுபாட்டை உருவாக்குகின்றது. சமுதாய விலங்காகிய மனிதன் சகமனிதர்களோடு கலந்து வாழும்போது தன்னலத்தை ஓரளவு புறக்கணித்துப் பொதுநலத்தைப் பேணவேண்டியவனாகிறான். உள்ளத்தின் கட்டளைப்படி நடக்கும் மனிதன் தன் இனம், தன் நாடு, தன் மொழி, தன் உறவு என வாழாமல் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற உயர்ந்த எண்ணத்தோடு வாழ வேண்டும். இவ்வாறு வாழ அவன் மனதில் அன்பு என்ற உணர்வு வேண்டும். அந்த அன்புணர்வு மாறுபடும்போதுதான் அவனது வாழ்க்கை பல்வேறு போராட்டங்களுக்கு வழியாகிறது.

**மனிதச் சிக்கல்கள் அமையும் முறை**

பொதுவாக மனிதனை உலுக்கும் சிக்கல்களை இராசராசன் பத்து வகையாகப் பிரித்துக் கூறுகிறார்.

“ 1. காதல் சிக்கல்

2. திருமணச் சிக்கல்

3. மகப்பேறின்மை சிக்கல்

4. உணவுக்கான சிக்கல்

5. இருப்பிடச் சிக்கல்

6. பணச் சிக்கல்

7. பகைமைச் சிக்கல்

8. நட்புச் சிக்கல்

9. மருத்துவச் சிக்கல்

10. வேலைவாய்ப்புச் சிக்கல்”[22]

என்பனவாம்.

மானுட வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களை வாழ்க்கைப் போராட்டம் எனக் கூறினால் அதனை அகப்போராட்டம், புறப்போராட்டம் என இருவகைப்படுத்தலாம். பிறப்பு முதல் இறப்பு வரை போராட்டங்களை வெற்றி கொள்வதே மனிதனுக்கு பெரும் சவாலாக அமைகிறது. இதனைச் சுப்ரபாரதிமணியன் பல சிறுகதைகளில் உணர்வுப் போராட்டங்களை நன்கு சித்தரித்துள்ளார்.

இப்போராட்டங்களை இவ்வாய்வில் அகப்போராட்டம், புறப்போராட்டம் என இருவகைப்படுத்தி ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**போராட்டம் விளக்கம்**

சமூகத்தில் தனிமனிதருக்கோ, குழுவினருக்கோ அடிப்படை உரிமைகள் மறுக்கப்படும் பொழுது அழுத்தம் அதிகரித்து நாளடைவில் போராட்டமாக உறுமாற்றம் பெறுகின்றது. தனிமனிதருக்கு நிறைவேறாத ஆசைகள், எதிர்பார்ப்புகள், ஏக்கங்கள், எதிர்காலம் குறித்த

கனவுகள் போன்றவை மனத்தளவில் அகப் போராட்டமாக வெடிக்கின்றன. காதல், திருமணம், கணவன் மனைவி உறவு, குடும்ப வாழ்க்கை, வறுமை, வேலைவாய்ப்பின்மை, மகப்பேறின்மை, விதவை, முதிர்கன்னி போன்ற சிக்கல்களே அகப்போராட்டத்திற்கு வித்தாக அமைகின்றன. தனிமனிதர் சார்ந்த சமூக அமைப்பே புறப்போராட்டத்திற்கு காரணமாக அமைகின்றன. தொழில், சாதி, மதம், பண்பாட்டுச் சிதைவு, சுற்றுச் சூழல், வறுமை போன்ற காரணங்கள் புறப்போராட்டத்திற்கு ஆதாரமாக விளங்குகின்றன.

சிறுகதைகளில் போராட்டம் குறித்து இவ்வாய்வு நுட்பமாக விளக்கிச் செல்வதால், போராட்டம் குறித்து சமூகவியல் அறிஞர்களின் கருத்தை கீழே காணலாம்.

“போராட்ட உணர்வுகள் மனித உறவுகளில் எப்போதும் எல்லா இடங்களிலும் காணப்பெறும் நடைமுறைச் செயற்பாடுகளே. பொதுவாகக் கருத்து முரண்களில் தொடங்கி, மன உணர்வு மன உணர்ச்சியாகக் கிளர்ந்தெழுந்து அது ஒன்றன் எதிர்பார்ப்பாகவோ தடுப்பாகவோ அமைவது ஆகும்.”[6]

“மற்றவற்றின் அல்லது மற்றவர்களின் விருப்பங்களுக்கு மறுப்பாக, எதிர்ப்பாக, வன்மையாக அமையும் திட்டமிட்ட முயற்சியே போராட்டம் ஆகும்”[7] என ஏ.டபுள்யூ கிளின் கூறுகிறார்.

“தனியொரு நபரோ, குழுவினரோ, எதிர்ப்புகளோடு நேரடியாகத் தேடி ஆராய்கின்ற முடிவுகளுக்காக வன்முறையாலோ எச்சரிக்கையாலோ விடுக்கிற சமூகச் செயல்பாடுகள்”[8] எனக் கிளின் மேகளின் குறிப்பிடுவர். இதனை, தனிநபர் போராட்டம், இனப்போராட்டம், வர்க்கப்

போராட்டம், அரசியல் போராட்டம், உலகியல் போராட்டம் எனப் போராட்டத்தை ஐவகையாகக் கூறுவார் கிளின்.

**அகப்போராட்டம்**

களவிலும் கற்பிலும் ஒவ்வொருவருக்கும் சிற்சில போராட்டங்கள் அமைவது இயல்பே. அக வாழ்க்கையில் எழும் போராட்டங்கள் பெரும்பான்மை உணர்வின்பால் அமைவனவாகும். காதல் உணர்வு மேலோங்கி நிற்கும்போது ஆணோ பெண்ணோ இருவரின் யாராயினும் அந்த உணர்வை எல்லோரிடத்திலும் வெளிப்படுத்துதல் இயலாத செயலாகும். ஆனால் காதலால் வருந்துவோர் தங்கள் துன்பத்தைக் குறைத்துக் கொள்ள வழி தேடுவது தவிர்க்க இயலாத ஒன்றாகும். ஏனெனில் இன்ப உணர்வைச் சொற்களில் வெளிப்படுத்தும்போது அது சொல்பவருக்கு மேலும் இன்பத்தைக் கொடுக்கும். துன்ப உணர்வைப் பிறரிடத்துக் கூறும்போது அத்துன்பம் குறையும். எனவே தான் அடைந்த துன்பத்தைக் குறைப்பதற்குக் காதல் வயப்பட்ட ஆணும் பெண்ணும் பிறரிடத்தில் தமது உணர்வுகளை வெளிப்படுத்துகிறார்கள்.

அவற்றைக் கேட்பதற்கு உரியவர்கள் அமையாத போது அவர்கள் தங்கள் நெஞ்சத்தை நோக்கித் தாமுறும் துன்பத்தை எடுத்துக்கூறி அதிலிருந்து விடுபட முயல்கின்றனர். இதுவே போராட்டத்தின் தொடக்கம் எனலாம்.

மேலும் உழைப்புச் சுரண்டல், ஒடுக்குதல், ஒதுக்குதல் என்பன தன் உறவுகளிலோ அல்லது சமூகத்திலோ எழும் போது அவை ஒரு போராட்ட உணர்வாக மாறுகிறது.

இவ்வகையில் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் கதைமாந்தர்கள் எதிர்கொள்ளும் அகப்போராட்டங்களையும், புறப்போராட்டங்களையும் பின்வருமாறு இங்கு வரிசைப்படுத்தலாம்.

குடும்பச் சூழல்களாலும், தன் உறவுகளினாலும் மக்கள் பல போராட்டங்களுக்கு ஆளாகின்றனர். இவற்றை இவ்வாய்வில் அகப்போராட்டமாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. அவையாவன,

1. காதல்
2. திருமணம்
3. முதிர்கன்னி
4. மகப்பேறின்மை
5. பாலியல்

போன்றவை அகப்போராட்டத்திற்கு கருவாக அமைகின்றன. இக்கூறுகளை ஆய்வுக்குரிய சிறுகதைகளின் வாயிலாக திறனாய்வு செய்யப்படுகிறது.

**காதல் போராட்டம்**

ஆண் - பெண் ஈர்ப்பானது இயற்கையானது. பாலின்ப நாட்டம் மனித இனத்திற்கு மட்டும் உரியதன்று. அது உலகில் வாழும் அனைத்து உயிர்களுக்கும் பொருந்தும். இதனைத் தொல்காப்பியர்,

"எல்லாவுயிர்க்கும் இன்பமென்பது
தானமார்ந்து வரூஉம் பற்றாகும்"[25]

என்று சுட்டுவார். 'காதலடைதல் உயிர் இயற்கை' என்பார் பாரதிதாசன். காதலை உளவியல் நோக்கில் காணும்போது, காதல் பான்ப வேட்கைப் போன்றது எனலாம். எல்லா காலங்களிலும் எல்லா நாடுகளிலும் கவிஞர்களைக் கவர்ந்து வந்துள்ள கருது பொருள் காதலென்பதில்

கருத்து வேறுபாடில்ல. உலக இலக்கியங்களில் குறிப்பிடத்தக்க பகுதி காதல் உறவு பற்றியதாக அமைந்துள்ளது.

இங்கு காதல் போராட்டம் என்னும் தலைப்பில் ஒருதலைக் காதல், கணவன், மனைவி உறவு குறித்த விளக்கங்கள், இலக்கியங்களில் கணவன் மனைவி உறவின் மேன்மை, கணவன் மனைவிக்கிடையே காணப்படும் அன்புகலந்த காதல் உறவு ஆகியவை விளக்கப் பெறுகின்றன.

பழந்தமிழின் வாழ்வியல் நெறியே காதல் நெறியாகும். கால ஓட்டத்தில் இந்த அன்பு வாழ்வில் மிகுதியாகப் போராட்டங்கள் தோன்றிய வண்ணம் அமைந்து வருகிறது. காதலரும் பெற்றோரும் போராட்டங்களுக்கு ஆளாகின்றனர். வரைமுறையற்ற உறவுகளாலும் போராட்டங்கள் ஏற்படுகின்றன.

ஒத்த வயதுடைய ஆணோ, பெண்ணோ யாராவது ஒருவர் மற்றவரை நேசிப்பதே ஒருதலைக் காதல் எனக் கூறுவர். சங்க இலக்கியங்களில் இதனைக் ‘கைக்கிளை’ உறவென்பர்.

மனித மனதில் ஏற்படும் மன மகிழ்ச்சிக்குக் காரணம் இதுதான் என வரையரை செய்ய இயலாது என்பதை ‘அப்பா’ என்ற சிறுகதையில் பதிவு செய்துள்ளார். சீதா, இராமகிருஷ்ணனை நேசிக்கிறாள். ஆனால் அவனிடம் அதைச் சொல்லவில்லை. அவனைப் பார்க்கும் போதெல்லாம் அவன் மீது அளவுகடந்த அன்பு ஏற்படும் சீதாவுக்கு. ஆனால் அவன் திருமணம் ஆனவன் என்று பின்புதான் தெரியவந்தது.

“என்ன இப்படி இளைச்சுப் போயிட்டீங்க?
உடம்புக் கென்ன?”

என்னன்னு சொல்ல. மெண்டல் டிப்ரசன்னு டாக்டர் சொல்றார். கல்யாணமாயிட்ட எல்லாமும் சரியாப் போகுமுன்னு டாக்டர் சொல்றார். என்றபடி கீழே தாழ்ந்திருந்த கண்களை என்மேல் பரவ விட்டாள். நான் எனக்கு கல்யாணமான விஷயத்தை அவளிடம் சொல்லவில்லை ஞாபகம் வந்தது."[26] காதலன் கணவனாக அமையவில்லை என்கின்ற சூழலில், அக்காதலனை மீண்டும் சந்திக்கும் போது ஒரு பெண்ணுக்கு ஏற்படும் மனப்போராட்டம் இங்கு சித்தரிக்கப்படுகிறது.

'பின்னல்' என்ற சிறுகதையில் வரும் தனபால் என்பவரை ரோகினி காதலிக்கிறாள். ஆனால் தனபால் கமலம் என்ற பெண்ணைத் திருமணம் செய்துகொள்கிறான். ரோகினி அவனையே நினைத்து வாழ்கிறாள். கமலத்திற்கு தெரியவந்ததும் ரோகினிக்கு ஆறுதல் கூறுகிறாள்.

"அவர் உனக்குப் பண்ணுன துரோகம் அல்லது நான் உனக்குப் பண்ணுன துரோகந்தா இப்படியெல்லாம் சீரழிக்குதுன்னு நெனைக்கிறேன்."[27]

காதலித்த ஒருத்தியை விட்டு தன்னைத் திருமணம் செய்து கொண்டானே எனத் தன் மனத்துக்குள் கமலத்திற்கு பெரும் போராட்டமாக அமைகிறது. இவ்வகையில் ஒரு பெண்ணின் எதிர்காலம் இங்கு போராட்டமாகிறது. இவ்வாறு ஒருதலைக் காதல் இன்றய சூழலில் சமூகத்தில் மிகப்பெரிய போராட்டக் களமாக மாறிவருவதை இவரது கதைகள் சுட்டிக்காட்டியுள்ளன.

**கணவன்**

ஆய்வுக்குரிய சிறுகதைகளில் கணவன் பாத்திரம் சிறப்பூட்டப் பெறுகின்றது. கணவன், மனைவி, குடும்பம் போன்ற உறவில்

அகப்போராட்டம் தொடங்குகிறது. குடும்ப உறவு மேம்பட கணவன் மனைவிக்கிடையே நிலவும் உறவுமுறையானது சுமூகமாகச் செல்ல வேண்டும். ஒரு பெண்ணை மணந்துகொண்ட ஆடவன், கணவன் எனப்படுகிறான். குடும்ப உறவில் கணவன் என்பவனே முதன்மையாகின்றான். கணவன் என்ற சொல்லுக்கு "அகத்தான், அகத்தோன், அகமுடையோன், அடிகள், அத்தான், ஆத்துக்காரர், ஆள், ஊராளன், ஐந்தான், கணவன், கணவாளன், கழுத்தகமுடையான், கிழவன், கொழுநன், தலைவன், நாயகன், புரசன், மகிழ்நன், மச்சான், மணமகன், மணவாளன், மணாளன், மாப்பிள்ளை, மாமன், மாமா, வரன், வீட்டுக்காரர், வேட்டான், நாயகன், தலைவன், துணைவன்"[28] ஆகிய சொற்கள் வழங்கப்படுகின்றன. கணவன் என்ற சொல்லுக்கு பிங்கல நிகண்டு,

"கணவன் கொழுநன் காந்தன் கேள்வன்
மணமகன் தைலன் வல்லவன், உரியோன்
பதி, தவன், கொண்கன், பத்தா, துணைவன்
தலைமகன், தலைவன், மணவாளன், தன்பெயர்"[29]

எனப் பொருள் வரிசைப்படுத்துகிறது. கணவன் என்பதற்கு "கண் போன்றவன் என்பது பொருளாகக் கொள்ளப்படுகிறது. கணவன் என்ற சொல்லைப் பிரித்தால் 'கண்+அவன்' எனப் பொருள் தருவதாக தாயம்மாள் அறவாணன் தம் நூலில் குறிப்பிடுகிறார். மேலும் கணவனை "கண்ணாளன்" என்றும் "மணவாளன்" என்ற சொல்லிலும் அழைக்கின்றனர்.

**இலக்கியங்களில் கணவன்**

கணவன் குறித்த சொல்லும் விளக்கமும் இலக்கியங்களில் காணப்படுகின்றன. "தொல்காப்பியத்தில் "நீத்த கணவன் நீர்த்த

வேலின்"[30] என்னும் புறநானூற்றில் "மனைக்கு விளக்காகிய வாணுதல் கணவன்"[31] என்னும் "ஒலியிருங் கதுப்பி ஆயிழை கணவன்"[32] என்றும் நாலடியாரில் "என் கணவன் என் தோள் மேல் சேர்ந்து எழினும்" என்னும் சிறுபஞ்சமூலத்தில் "கணவனுக்கு... கற்புடைய பெண்ணமிர்து"[33] என்றும் சிலப்பதிகாரத்தில் "கணவனை இழந்தோர்க்கு"[34] என்றும் பயின்று வருகிறது. இத்தகு சிறப்பிடம் பெற்ற 'கணவன்' என்ற உறவு சிறுகதைகளில் மிகப் பெரிய ஆளுமையைப் பெற்றுள்ளது. இங்கு அகப் போராட்டக் களங்கள் கணவனைச் சுற்றியே அமைந்துள்ளன.

**மனைவி**

மனைவி என்ற சொல் ஆண் பெண் உறவுநிலையில் முக்கியப் பங்கு வகிக்கிறது. மனைக்கு 'விளக்காக' விளங்குபவளே 'மனைவி' என்றும் கூறுவர். மனைவி என்ற சொல்லுக்கு "தேவி, நல்லாள், பெண்டாட்டி, பெண்டு, பெண்சாதி, போகமகள், மணவாட்டி, மனையாள், மனையோள், மனைவி, வது, வாழ்க்கைத் துணைவி, வீட்டுக்காரி, வேட்டாள், ஸ்திரி, சம்சாரம், இல்லாள், துணைவி, கிழத்தி, தலைவி, இல்லக்கிழத்தி, ஆத்துக்காரி, இல்லோள், தாரம், மகடுஉ, மகள், இல்லவள்"[35] ஆகிய பொருள்கள் வழங்கிவருகின்றன என்று பிங்கல நிகண்டும் சுட்டுகிறது.

"மணமகள், உரிமை, வல்லவி, தாரந்
துனைவி, வாழ்க்கைத்துணை, மணவாட்டி
பாரி, இல்லாள், விருந்தனை
இல்லாள், குடும்பின், களமே காந்தை
இன், மனை, காதலி, நாயகி, பெண்பெயர்"[36]

என்று மனைவியின் பெயர்களை தாயம்மாள் அறவாணன் குறிப்பிடுகிறார்.

**இலக்கியங்களில் மனைவி**

தலைவி என்பதற்குக் "கிழத்தி, இற்கிழத்தி, மனைக்கிழத்தி, மனையாள், மனையோள், வாழ்க்கைத்துணை"[37] போன்ற சொற்கள் சங்க இலக்கியங்களுள் பயின்று வருகின்றன.

"பெரும்பொருள் வதுவை

தொல்முறை மனைவி"[38]

என்று தொல்காப்பியம் மனைவியைச் சுட்டுகிறது. அகநானூற்றில் "மனை முதல் வினையொடும் உவப்ப" என்றும் குமரேசசதகத்தில் "மனையாட்டி சற்றும் எண்ணாள்" என்றும் "மனையாளையஞ்ச மறுமையிலாள்" என்றும் வழங்கப்பட்டு வருகின்றன. மனைவியைத் துணை என்றும் வாழ்க்கைத்துணை என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

வாழ்க்கைத்துணையை "உயிர்த்துணைவி" எனவும் "பாவையன்ன நின் துணைப் பிரிந்து" எனவும் "குறநெடுந் துணையொடு"[39] எனவும் இலக்கியத்தில் பல எடுத்துக்காட்டுகள் காணப்படுகின்றன.

**திருமணம்**

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் குடும்பத்தின் அடித்தளமாக மனைவி உள்ளமையை அறிய முடிகிறது. உறவுகள் சிதையாவண்ணம் கட்டிக் காப்பவர்களாகப் பெண்கள் உள்ளனர் என்பதை அறியமுடிகிறது. ஒவ்வொரு சமூகமும் தன் பண்பாட்டு வளர்ச்சிக்கும் தேவைக்கும் ஏற்பக் கணவன் மனைவியுறவு பற்றிய கொள்கைகளை வகுத்துப் போற்றி வருகின்றது. இக்கொள்கைகளை அளவுகோலாகக் கொண்டு ஒரு சமூகத்தின் பண்பாட்டுச் சிறப்பை அளந்தறியலாம். பண்பட்ட தமிழினம் பன்னெடுங்காலத்திற்கு முன்பே பல

நிறுவனங்களை உருவாக்கி, ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு கொள்கைகளை உருவாக்கிப் போற்றியுள்ளது. கணவன் மனைவி உறவு பற்றித் தமிழர்கள் உருவாக்கியிருந்த கொள்கைகள் சங்ககாலத்திலேயே தொன்மையானவையாகக் கருதப்பட்டன.

திருமணச் சடங்குகள் இயற்றப்படுவதற்கு முன்னர் ஆண் பெண்ணுறவில் நெகிழ்ச்சியான போக்கு சங்ககாலங்களில் நிலவியது என்பதனை,

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[40]

எனத் தொல்காப்பியர் சுட்டுவதன் மூலம் உணரலாம். திருமணச் சடங்கு வரையறுக்கப்பட்ட காலம் இன்னதெனக் கூற இயலாதெனினும், அது தொன்மையான காலமெனலாம். பண்டைத் தமிழகத்தில் வழக்கிலிருந்த திருமணமுறைகள், கணவன் மனைவியிடையே அமையும் உறவின் தன்மைகள் பற்றிய குறிக்கோள்கள், நடைமுறைக் கூறுகள் ஆகியவை பற்றிச் சங்க இலக்கியம் பல செய்திகளைத் தன்பால் கொண்டுள்ளது.

திருமணத்தை ஒரு நிறுவன அமைப்பாகப் பார்க்கும்போது அது சமூகப் பண்பாட்டு மாற்றங்களுக்கு உட்பட்ட ஒன்றாகவே காட்சியளிக்கிறது. தன் ஒப்புதலின்றி வயதுக்கு வந்த ஆணும், பெண்ணும் நெருங்கி உறவாடுதலைத் தமிழ்ச் சமூகம் சங்ககாலத்தில் ஏற்றுக் கொள்ளவில்லை. சங்ககாலத்தில் பல வகையான மணமுறைகள் வழக்கிலிருந்தன. அவை அனைத்திலும் குடும்பப் பெரியோரின் விருப்பத்திற்குச் சிறப்பிடமிருந்தது.

**திருமணமுறைகள்**

1. களவுத் திருமணம்

2. விலை கொடுத்துப் பெண்ணை மணத்தல்

3. போரில் வெற்றிப் பெற்று பெண்ணை மணத்தல்

4. ஏறுகோள் மணம்

5. விலை கொடுத்து இரண்டாவது திருமணம் என்று சங்ககாலத் தமிழர்களின் திருமணமுறை இருந்துள்ளமையை அறிகிறோம். இவ்வாறு பல்வேறு திருமணமுறைகள் சங்ககாலங்களில் வலியுறுத்தப்பட்டு வந்துள்ளது. கணவன், மனைவி குறித்த இப்பின்புலத்தில் இவர்களுக்கிடையே நிலவும் உறவுகளை ஆதித்யரின் சிறுகதைகள் நன்கு உணர்த்துகின்றன.

**காதல் உறவு**

கணவன் மனைவி உறவில் ஏற்படும் காதல் உறவை ஆய்வுக்குரிய சிறுகதைகளின் அடிப்படையில் பின்வருமாறு ஐந்து வகைகளாகப் பாகுபாடு செய்யப்பட்டு விளக்கப் படுகிறது. அவையாவன:

1. கணவனுக்காக எதையும் விட்டுக்கொடுக்கும் மனைவி

2. மனைவி மீது தீராக் காதல்

3. கணவன் மீது தீராக் காதல்

4. மனைவியே தன் பலமாகக் கருதும் கணவன்

5. முதுமைக் காதல்

போன்ற கூறுகள் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**விட்டுக்கொடுக்கும் மனைவி**

அகப் போராட்டத்தின் ஒரு கூறாக விட்டுக்கொடுக்கும் மனைவி திகழ்கிறாள். கணவன் மனைவி உறவில் கணவனுக்காக எதையும்

விட்டுக்கொடுத்துச் செல்லும் மனைவியை ‘கை குலுக்க நிறையச் சந்தர்ப்பங்கள்’ என்ற சிறுகதையில் சுப்ரபாரதிமணியன் சித்தரிக்கிறார். இதில் சுகந்தி திருமணமான நாள் முதல் ஒவ்வொன்றையும் கணவனுக்காக பார்த்துப் பார்த்து செய்கிறாள். முதல் நாள் நடந்த திருமணச் சடங்கில் தொடங்கி “கல்யாணமாகி இத்தனை வருஷங்களில் அவரின் விருப்பத்திற்கு மாறாக நான் நடந்ததில்லை. அவரின் விருப்பப்படி நடப்பதில் தான் நான் திருப்தி அடைகிறேன் என்கிறாள்.”[41]

ஒருமுறை திருமண வீட்டுச் சடங்கு விழாவில் இருவரும் குடத்தில் கல்போட்டு யார் எடுப்பது என்ற விளையாடியபோது அவள் விட்டுக்கொடுத்தது தான் நான் வென்றேன் என்று எனக்கு தெரியவந்தது என்கிறான்.

“நானே வெற்றி பெற்றுவிட வேண்டும் என்ற என் வெறியும், ஆக்ரமிப்பும் எவ்வளவு முட்டாள்தனமானது, ஒரு வகையில் கேவலமானது என்று உணர்ந்தேன்”[42] என்று கணவன் தனக்குள் நினைத்துக் கொள்கிறான். இவ்வாறு கணவன் மனைவி உறவை அழகுறச் சித்தரிக்கிறார்.

**கணவனின் காதல்**

‘ஒரு சின்ன பிரயாணத்திலும்கூட’ என்ற சிறுகதையில் மனைவி தலையில் வைக்கும் பூவை ரசிப்பவனாக கணவன் பத்மன் உள்ளான். தன் தாய் வீடு சென்று வரும் மனைவி சசியை எதிர்பார்த்துக் காத்திருப்பவனாக கணவன் காட்டப்படுகிறான்.

“ஒருமுறை தனியே ஊர்போய் வந்தாள். காலை ஒன்பது மணிக்குப் பஸ்ஸிலிருந்து இறங்கிய அவளைப் பார்த்தபோது திக்கென்றது பத்மனுக்கு தலையில் பூ இல்லை. தலையைத் தொட்டு ‘ஏன்டா’ என்றான் பத்மன்.”[43]

இவ்வகையில் கணவன் மனைவி உறவில் கணவன் மனைவி மீது கொண்டுள்ள காதல் வெளிப்படுகிறது. ‘கிணற்றலை’ என்ற சிறுகதையில் கணவன் மனைவி மீது வைத்திருந்த காதல் சித்தரிக்கப்படுகிறது. திருமணமாகி வந்த வீட்டில் கிணறு இருக்கிறது. அதைப் பார்த்து அப்பெண் பயம் கொள்கிறாள். ஏனெனில் கிணற்றை பார்த்தாலே சிறுவயதிலிருந்தே அவளுக்குப் பயம். அதனால் கணவன் வீட்டில் தன் தாய், தந்தையின் பேச்சையும் கேட்காமல் அக்கிணற்றை மூட நினைக்கிறாள். இதனால் வீட்டில் உள்ள அனைவரும் அவனைக் கேலி பேசுகின்றனர். எதனையும் பெரிதாக அவன் எடுத்துக் கொள்ளவில்லை. தன் மனைவியின் மகிழ்ச்சி ஒன்றை மட்டுமே நினைக்கிறான்.

“புதுப் பொண்ணுக்கு இவ்வளவு காவல் தேவையா? எத்தனை நாட்களுக்கு என்ற கிண்டல் சிரிப்பையும் வரவழைத்தது அவனுக்கு”[44] இதன் மூலம் கணவன் மனைவியின் அன்புக் காதல் வெளிப்படுகிறது.

**மனைவியின் காதல்**

‘சில வேறு தினங்கள்’ என்ற சிறுகதையில் சேவற் சண்டையில் பெரும் விருப்பமுள்ளவர் அப்பா. அதில் கிடைக்கும் கொச்சைக்கறியின் மீது கொள்ளைப் பிரியம் அப்பாவிற்கு. இவரின் விருப்பமே அம்மாவிற்கு வேதம். கஷ்டத்திலும் அப்பாவைக் குறை சொல்லமாட்டாள் அம்மா. “உடம்பு வர அகப்பை, அகப்பையா நெல்சாதமும் கறியும் வேண்டியதில்லை. சந்தோஷம் போதும் என்பாள்

அம்மா. அவரின் எந்தப் பேச்சையும் மறுதலிக்காத குணமும் கொண்டவள்"[45] அப்பா சுகம் இல்லாமல் இருக்கும்போது "நா போயிருவேன், சாவு எனக்குப் பின்னால் தான் வரும் என்று அழுகையுடன் சொன்னாள். நீ தேருக்குப் போன நாங்க தரிசனத்திற்கு வருவோம் என்றாள்"[46] இதன் மூலம் கணவனைப் பிரிந்து வாழமுடியாத மனைவியின் காதல் வெளிப்படுகிறது. இவ்வாறு அன்புள்ளம் கொண்ட கணவன் மனைவி உறவை சுப்ரபாரதிமணியன் தனது கதைகளில் வெளிப்படுத்துவதை அறியமுடிகிறது.

**முதுமைக் காதல்**

ஒவ்வொருவரின் வாழ்வில் முதுமைப் பருவத்தில் கணவன் மனைவி உறவில் மிகப் பெரிய அகப்போராட்டத்தைச் சந்திக்கின்றனர். தன் பிள்ளைகளுக்குத் திருமணம் முடித்து வைத்த பிறகு கணவன் மனைவி உறவில் உண்டாகும் நிம்மதியே உண்மையான மகிழ்ச்சியாக உணர்கின்றனர். அப்போதும் ஒருவரை ஒருவர் அன்போடு வாழ்வதே நிறைவான வாழ்க்கையாக அமைகிறது. சிவராமரெட்டியும், சிவகாமியும் கணவன் மனைவி வயதானவர்கள். இவர்கள் தனக்குள் நடக்கும் சண்டைகளை நினைவுபடுத்திப் பார்க்கின்றனர்.

"நீ அழுது முகம் சிவந்திருக்கும் என்னைப் பார்த்தும் விறுவிறுன்னு உள்ளே போயி காபி போட்டுட்டு வந்துவே, அப்புறம் சிடுசிடுப்போ, மொகச்சுளிப்போ இருக்காது. சண்டை போடற நாளைக்கு நல்ல சமையல் இருக்கும். நல்ல ருசியான சமையல் சாப்பிடறதுக்குன்னே உன்னோட சண்டை போடணும் போல இருக்கும்"[47] என்று சொல்லி சிவராமரெட்டி சிரித்தார். அதேபோல்

*ஒருமுறை சிவகாமி சண்டை போட்ட அன்று காணவில்லை. எங்கும் தேடிப்பார்த்த சிவராமரெட்டி பதறிப்போகிறார்.*

*"சிவகாமி... சிவகாமி என்றார். முணுமுணுப்பாகவே நின்று விட்டதோ என்ற சந்தேகம் வந்தது உரக்கச் சொன்னார். நடந்து போய்க் கொண்டிருந்தவர்களில் சிலர் திரும்பிப் பார்த்தார்கள். ஏழு நாட்களாகப் பக்கத்து சீட்டிலேயே காத்திருந்தார். அவரிடம் சொல்லாமல் கீழேகூட இறங்க மாட்டாள். உரக்கக் கத்தினார். குரல் நெகிழ்வடைந்து தடுமாறுவது தெரிந்தது. நிச்சயம் சகபயணிகளுடன் போயிருக்க மாட்டர். இன்னும் உரத்து அவள் பெயரைச் சொல்லி கத்த வேண்டும் போலிருந்தது. முடியவில்லை."*[48]

*சிவகாமியை காணவில்லை என்றதும் சிவராமரெட்டி படும் பாடு அவர் மனைவி மீது வைத்திருந்த காதலைக் காட்டுகிறது. இவ்வகையில் கணவன் மனைவியின் முதுமைக் காதல் ஆழமானது என்பதை ஆசிரியர் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியிருக்கிறார். இதில் இவரின் அகப்போராட்டம் வெளிப்படுகிறது.*

**கணவன் மனைவியுறவில் ஊடல்**

*அகப்போராட்டத்தில் 'ஊடல்' கணவன் மனைவி உறவில் முக்கியப் பங்கு வகிக்கிறது. உறவில் பிணைப்பு ஏற்படுவதற்கு ஊடல் பெரும்பங்கு வகிக்கிறது. ஆய்வுக்குரிய சிறுகதையில் ஊடல் பல்வேறு காரணங்களால் ஏற்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.*

*குடும்பங்களில் நாள்தோறும் நடக்கும் பிரச்சனைகளின் மூலம் கணவன் மனைவி இடையே பல்வேறு வகையான ஊடல்கள் ஏற்படுகின்றன. திருவள்ளுவர் ஊடலின் வகைகளைச் சுட்டும்போது*

*நிலத்தோடு நீர் எப்படி பொருந்துமோ அதுபோல ஒன்றுபட்ட நெஞ்சம் உடையவரிடத்தில் ஊடலில் காணப்படுவது போன்ற இன்பம் தேவருலகிலும் உண்டோ? என்று தலைவி கேட்பதை,*

*"புலத்தலிற் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு*

*நீரியைத் தன்னார் அகத்து"[49] (குறள்.1323)*

*என்னும் குறள் வழியே விளக்கியுள்ளார். ஊடல் என்பதை தலைவியே விரும்பி ஏற்றுக் கொண்டதை இதில் அறியலாம். ஊடலே காமத்திற்கு இன்பம். அதைவிட இன்பம் இருவரும் கூடி இன்பம் பெறுதலே ஆகும். இதனை,*

*"ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்*

*கூடி முயங்கப் பெறின்"[50] (குறள்.1330)*

*என்று வள்ளுவர் ஊடலின் தன்மையைப் போற்றியுள்ளார். சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளிலும் கணவன் மனைவியிடையே ஏற்படும் ஊடல்களை ஆசிரியர் அழகாகச் சித்தரிக்கிறார்.*

**வறுமையால் ஏற்படும் ஊடல்**

*சுப்ரபாரதிமணியனின் 'சமாதானம்' என்னும் சிறுகதையில் கணவன் மனைவியுறவில் வறுமையால் ஏற்படும் ஊடலைச் சித்தரிக்கிறார்.*

*வீட்டில் சமைப்பதற்குச் சிலிண்டர் வாங்க முடியாமல் மண்ணெண்ணை ஸ்டவ் வைத்து சமைக்கின்றனர். இந்த பழைய ஸ்டவ்வும் அடிக்கடி ரிப்பேர் ஆகிவிடுகிறது. இதைப் பழுதுபார்க்க நேரிடும் போதெல்லாம் இருவருக்கும், சுதாகருக்கும், மனைவி ராஜேஸ்வரிக்கும் இடையே ஊடல் ஏற்படுகிறது.*

"ராஜேஸ்வரியை கோபப்படுத்த ஏதாவது காரணம் தேடினால் உடனே ஸ்டவ் ஞாபகம் வந்துவிடும். ஸ்டவ் ரிப்பேர் என்றால் முகம் சுளிப்பாள் நாலைந்து வசவு வார்த்தைகள் வந்துவிடும் அவளுக்கு எப்போது இருட்டும் என்று மார்க்கெட்டுக்கு எடுத்துச் செல்வான். ஒன்றுக்கு இரண்டாக கேஸ்சிலிண்டர்கள் வந்துவிட்ட காலத்தில் இன்னும் ஸ்டவ்வை ரிப்பேருக்கு எடுத்துச் செல்ல சங்கடமாகத்தான் இருக்கும் அவனுக்கு"[51] என்று சுதாகர் மனைவியுடன் ஊடல் ஏற்படுவதற்கு வறுமை காரணமாக உள்ளதே என நினைத்துக் கொள்கிறான். இருப்பினும் சமாதானம் செய்துவிடலாம் என நினைக்கிறான்.

இந்நிலை ஒளிபொருந்திய இழையணிந்த தலைவி இன்றும் என்னோடு ஊடி நிற்பாளாக யாம் இவளை வேண்டி ஊடல் தீர்த்தாள் பொருட்டு இரவும் தொடர்ந்து வளர்ந்து போகட்டும் என்று நினைப்பதாக அமையும் திருவள்ளுவரின் கருத்தோடு ஒத்து வருகிறது.

"ஊடுக மன்னோ ஒளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ இரா"[52] (குறள்.1329)

என்னும் இக்குறளில் உள்ள செய்தியை இக்கதை நினைவு கொள்ளச் செய்கிறது.

**வேறுபட்ட ரசனையால் வரும் ஊடல்**

'கரு' என்ற சிறுகதையில் பிரேமாவுக்கும் அவள் கணவனுக்கும் எப்போதும் சண்டை வந்துகொண்டேதான் இருக்கும். அதிலும் பிரேமாவிற்கு மாடுகளைப் பார்த்தால் கொள்ளைப் பிரியம். ஆனால் அவள் கணவனுக்கு எதிர்மறை, மாடுகள் என்றாலே பிடிக்காது.

பிரேமா மாடுகளைப் பற்றி பேசினாலே அவனுக்குப் பிடிக்காது. அருவருப்பாக உணருவான். இதனைப் பற்றி பேசினாலே இருவருக்கும் சண்டைதான். ஒருமுறை அவன் கோபத்தில் பிரேமாவைத் திட்டியதோடு, "மாட்டிறைச்சிக்காக ஆசைப்படுபவளுடன் இனி படுக்கையைப் பகிர்ந்து கொள்ள முடியுமா என்ற சந்தேகம் அவனுக்கு வந்துவிட்டது."[53]

இவ்வாறு கணவன் மனைவி இருவரின் சின்னச் சின்ன ஊடல்களை சுப்ரபாரதிமணியன் வெளிப்படுத்தியுள்ளார். குடும்பத்தில் இதுபோன்ற சண்டைகள் வரும் போகும் என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.

ஊடலினால் தோன்றும் சிறிய துன்பம் அன்பு வாடிவிடக் காரணமாக இருந்தாலும் மீண்டும் அன்பு வளர்ந்து பெருமைபடத் துணை செய்யும் என்னும் கருத்தை குறிப்பிடுகிறது.

'உறுத்தல்' என்ற சிறுகதையில் கணவனோடு சண்டையிட்டு மனைவி தன் தாய்வீடு சென்று விடுகிறாள். சங்கரும் காத்திருக்கிறான். மனைவி வசந்திக்கு இது ஒன்றும் புதியதல்ல. திரும்பி வந்துவிடுவாள் என சங்கர் காத்திருக்கிறான். வசந்தியைக் கண்டதும் வீட்டில் அவள் பெற்றோர் புரிந்துகொள்கின்றனர். அவள் அப்பா பேசும்போது, "உள்ளூர் மாப்பிள்ளை எடுத்தது எவ்வளவு பெரிய மடத்தனம், ஏதோ கல்யாண அவசரத்திலெ மாப்பிள்ளை உள்ளூர்னா போய்வர செலவு மிச்சம் அப்பப்போ நெனப்பு வந்தப்போ பொண்ணெ கண்ணுலெப் பாத்துக்கலாமுன்னு நெனச்சேன்"[54] இவள் தொட்டதுகெல்லாம் சண்டையிட்டுக் கொண்டு வந்துவிடுகிறாளே என வசந்தியின் பெற்றோர் பேசிக்கொள்கின்றனர். மீண்டும் வசந்தி கணவன் வீடு திரும்பத் தயாராகிறாள். இவ்வகையில் ஆசிரியர் கணவன் மனைவி

ஊடல் ஏற்படுவதும் பின் தனிவதும் இயற்கையான ஒன்று எனத் தன் சிறுகதைகளில் சுட்டிச் செல்கிறார்.

**முதிர்கன்னி**

அகப்போராட்டத்தில் இக்கூறு ஒரு சமூக அவலமாகக் குறிப்பிடலாம். திருமண உறவைக் குறிப்பிட்ட வயதில் சந்திக்காத பெண் மிகப்பெரிய போராட்டத்தைச் சந்திக்கிறாள். இதனைப் பல கதைகளில் நன்கு சித்தரித்துள்ளார்.

திருமணம் ஆகாமல் இருக்கும் பெண்ணை முதிர்கன்னி என்கிறோம். வறுமையின் காரணமாகப் பருவம் வந்தும் திருமணம் ஆகாமல் இருக்கும் பெண்ணைச் சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதையில் சுட்டுகிறார்.

இதனால் திருமணம் என்பது சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுபவை அல்ல. ரொக்கத்தில் தான் நிச்சயம் ஆகின்றன எனலாம். சுப்ரபாரதிமணியன் சிறுகதையில் வரும் திருமணம் ஆகாத பெண்களை மூன்று வகையாகச் சுட்டலாம்.

- வறுமையில் உள்ள பெண்
- ஊனம் உற்ற பெண்
- அழகின்மை

போன்ற வகையில் பிரித்துக் குறிப்பிடலாம்.

**வறுமையால் திருமணம் ஆகாத பெண்**

‘அப்பா’ என்ற சிறுகதையில் ராமகிருஷ்ணனின் தங்கை சீதா, அவனின் மனைவி பத்மா. ராமகிருஷ்ணனும், பத்மாவும் இருக்கும் வீட்டில்தான் சீதாவும் இருக்கிறாள். பனியன் கம்பெனியில் வேலை

செய்கிறான் ராமகிருஷ்ணன். போதிய வருமானம் இல்லை, சீதாவை திருமணம் செய்து வைக்க, இவர்கள் இருக்கும் வீட்டில் சீதா தூங்க தனி அறைகூட இல்லை. அனைவரும் ஒரே அறையில் தான் தூங்க வேண்டும். "சீதா ஒருபுறம் குப்புறப் படுத்துக் கொண்டிருக்க, இன்னொரு பாயின் ஓரத்தில் சேர்ந்தமாதிரி கணவன் மனைவி இருவரும் படுத்திருந்தனர். அந்த விஷயங்கள் சீதாவைக் குலைத்திருக்கும்."[55]

இங்குத் திருமணம் ஆகாத பெண்ணின் மனப்போராட்டத்தை சுப்ரபாரதிமணியன் தன் கதைகளில் காட்டுகிறார். 'எஞ்சியது' என்ற சிறுகதையில் ரவீந்திரன் பழைய மரச்சாமான்கள் வாங்கச் செல்லும் வீட்டில் சுஷ்மா என்ற பெண்ணைச் சந்திக்கிறான். வறுமையால் பருவம் வந்தும் திருமணம் ஆகாமல் இருக்கிறாள். அவள் தந்தை, "சாரீ, டீ கூட குடுக்க முடியலே... எங்க பொருளாதார நிலைமை அப்படி ஒவ்வொரு சாமான வித்துகிட்டிருக்கிறோம். வர்றவங்களுக்கு உபசாரம்கூட பண்ண முடியாத பலவீனம்"[56] என்ற தந்தையின் வார்த்தைகளில் அவர்களின் குடும்பநிலையை ஆசிரியர் சுட்டுகிறார்.

ஒரு தந்தையின் மனப்போராட்டத்தை இக்கதையில் சுப்ரபாரதிமணியன் சுட்டுகிறார்.

**ஊனமுற்ற பெண்**

திருமணததிற்கு பொருளாதாரம் மட்டும் காரணம் இல்லை. உடல் ஊனமும் ஒரு காரணமாக துளசிக்கு அமைகின்றது என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

"பெண் பார்த்துச் சென்றவர்கள் வேண்டாம் ஏதோ பரம்பரை வியாதியாக இருக்கலாம், பெண் கால் சூம்பி உள்ளது எனக் கூறிச்

செல்கின்றனர். அப்பா கோபத்தில் வசைபாட ஆரம்பித்து மகாலெட்சுமி மாதிரியான எம் பொண்ணை இப்படிச் சொல்லுராங்களே எனக் கத்துகிறார்."[57]

துளசியின் தம்பி சுந்தரேசன் அக்காவிற்கு ஆறுதல் கூறுகிறான். எனக்கு ஒன்றும் இது புதிதில்லையே பழகிப் போச்சுடா தம்பி என்று கூறிச் செல்கிறாள். "அக்கா எந்தக் கவலையும் இல்லாமெ தூங்குக்கா என்றான். துளசி லேசாகப் புன்னகைத்தாள். அக்கா கண்ணில் நீர் தளும்பச் சிரித்து எத்தனை நாளிக்கும் என்று நினைத்துப் பார்க்கிறான்."[58]

இக்கதையில் துளசியின் மனப்போராட்டத்தை ஆசிரியர் சுட்டுகிறார். திருமணம் ஆகாமல் இருக்கும் இவளை ஊனத்தால் மறுப்பவர்களை நினைத்து ஒரு பெண் மனம் எவ்வளவு துன்பப்படும் என்று சுட்டுகிறார்.

**அழகற்ற தோற்றம் உடைய பெண்**

'கூடவரும் அவர்கள்' என்ற சிறுகதையில் ஜெயராமின் தங்கைகள் மூவர் உள்ளனர். அவர்கள் ஒவ்வொருவரும் தோற்றத்தால் விகாரமாக உள்ளனர். முகமே பெண் என்ற கலையின்றி ஆண் போன்று தோன்றுகின்றனர். இதில் கடைசிப் பொண்ணு பரவாயில்லை முகத்தில் பருக்களும், தளும்புகளும் தான் உள்ளன என ஜெயராமின் நண்பன் நினைக்கிறான்.

"மூணுலே இது தேறுமா... இதுவாவது சுமாரா இருந்தா கல்யாணமுன்னு ஒண்ணு சீக்கிரம் இதுகாச்சும் வழி உண்டே... மொகம் பூராவும் அம்மைத் தழும்பு, பெரிய அம்மை பாவம், அந்த ரெண்டு பொண்ணுக மாதிரிதான் இதுவும். வெளியே வர சங்கடப்பட்டோ

என்னமோ உள்ளேயே இருக்குதுங்க. மூணு பொண்ணுகளையும் நெனச்சா பாவமாத்தான் இருக்கு”[59] ஜெயராம் நண்பன் இவர்களை பார்த்தவுடன் இவர்களின் மனநிலையை எண்ணி வருத்தப்படுகிறார். சுப்ரபாரதிமணியன் முதிர்கன்னியான இவர்களின் மனநிலையை வேற்றவர் பார்க்கும் இவர்களின் நிலையினையும் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

**மகப்பேறின்மை**

அகப்போராட்டத்தில் முதிர்கன்னி வறுமை உடல் ஊனம் போன்ற கூறுகளைப் போல், மகப்பேறு ஒரு பெண்ணின் வாழ்வில் மிகப் பெரிய சோகத்தை ஏற்படுத்துகிறது. குழந்தைப் பேறு இல்லாத பெண் ‘மலடி’ என்று சமூகத்தால் புறக்கணிக்கப்படுகிறாள். இது ஒரு சமூகச் சிக்கலாக மக்களிடையே நிலவுகிறது. ஆசிரியரின் கதைக்கருவும் மகப்பேறு குடும்பத்தில் பெரும் போராட்டம் நடைபெறுவதை பல கதைகளில் சுட்டிக் காட்டியுள்ளார்.

திருமணம் ஆன பெண் குறிப்பிட்ட காலத்தில் தாய்மை அடையவில்லை என்றால் இச்சமூகம் அவளை பார்க்கும் நோக்கமே வேறு. குழந்தை இல்லையென்றால் அப்பெண்ணைவிட்டு வேறு ஒரு பெண் அந்த ஆணுக்கு மணம் முடிப்பதும் உண்டு. இல்லையெனில் அதிஷ்டம் இல்லாதவள் என்று கருதி மங்கல விழாக்களுக்கு எல்லாம் ஒதுக்கி வைப்பதும் இச்சமூகத்தில் நடக்கும் செயலாகும். மகப்பேறின்மையால் பெண் எதிர்கொள்ளும் போராட்டங்களை சுப்ரபாரதிமணியம் தம் சிறுகதைகளில் அகப்போராட்டங்களாகச் சித்தரித்துள்ளார்.

குழந்தைச் செல்வத்தின் முக்கியத்துவத்தை வள்ளுவரும் சுட்டுகிறார்.

"குழல்இனிது யாழ்இனிது என்பர்தம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"[60] (குறள்.66)

தம் மக்களின் மழலைச் சொல்லைக் கேட்டு அதன் இனிமையை நுகராதவரே குழலின் இசை இனியது யாழின் இசை இனியது என்று கூறுவர். வள்ளுவரின் கூற்றும் இங்கு குறிப்பிடத் தக்கது.

'புது வேலை' என்ற சிறுகதையில் வரும் ரோகிணி என்ற பெண் தனக்கு குழந்தையின்மையால் வேறு யாராவது ஒருவருடைய குழந்தையைச் சந்திக்கும்போது அக்குழந்தையை தூக்கி கொஞ்சவேண்டும், அதுபோல் தனக்கும் ஒரு குழந்தை இருந்தால் நன்றாக இருக்குமே எனத் தன் மனதுக்குள்ளே நினைத்துக் கொள்வாள். இதனை, "கொழுகொழு குழந்தைகளைத் தொடும்போது இவ்வகை பயம் அவள் உடம்பில் உள்ளிறங்கும். குழந்தை இல்லாத தனிமையை நினைக்கையில் பயம் பன்மடங்கு ஆகிவிடும்"[61] என்பதன் மூலம் ரோகிணியின் துயரத்தை அவள் மனப் போராட்டத்தை சுப்ரபாரதிமணியன் இங்கு வெளிப்படுத்துகிறார்.

'யோகம்' என்ற சிறுகதையில் சரஸ்வதி என்ற பெண்ணுக்கு குழந்தையின்மையால் அவளை அவ்வூரே அதிஷ்டமற்றவள் என்றே பேசும். இதனையே கேட்டுக் கேட்டு தான் உண்மையிலேயே துரதிஷ்டசாலிதானே என்ற எண்ணம் சரஸ்வதிக்கும் தோன்றும். அவளது நிலத்தில் கிணறு வெட்டும்போது தண்ணீர் வந்ததால் ஊரே ஆச்சரியப்படுகிறது. இவ்வூருக்கே இனி தண்ணீர் பஞ்சம் அவளால் தீரும்

என சந்தோசம் கொள்கிறாள் சரஸ்வதி. "மலடிக்கு யோகம் இருக்குமா என்று பரிசீலித்தார்கள். நமுட்டுச் சிரிப்பாய் குழந்தை இல்லாதத்தனம் பேசப்பட்டது. அவள் உடம்பின் குதிரைத் திமிர் பேச்சானது." இதனை அறிந்த சரஸ்வதி எனக்கும் யோகம் உண்டு எனக்கூறி, "நான் மலடியில்லே... நான் மலடியில்லை என்ற சரஸ்வதியின் குரல் மெஷினின் இரைச்சலை மீறி உடம்புகளை மோதினபடி திரிந்தது."[62]

இவ்வாறு சுப்ரபாரதிமணியன் தம் சிறுதைகளில் குழந்தை இன்மையால் அவர்களுக்கு ஏற்படும் மனப்போராட்டங்களை வெளிப்படுத்துகிறார்.

**காலந்தோறும் சமூக அமைப்பில் பெண்ணின் நிலை**

பரத்தமை, சங்க இலக்கியம் தொல்காப்பியம், திருக்குறள் முதலிய நூற்கள் எல்லாம் பரத்தமை பற்றி விரிவாகப் பேசுகிறது. திருக்குறள் பரத்தமையுறவை வன்மையாகக் கண்டிக்கிறது. தமிழின் முதுபெரும் காப்பியமான சிலப்பதிகாரத்தில்,

1. கணிகையர்
2. காவற்கணிகையர்
3. ஆடற் கூத்தியர்
4. பூவிலை மடந்தையர்
5. கடை கழி மகளிர்
6. வம்பப் பரத்தையர்
7. எண்ணெண் கலையோர்
8. பண்ணியன் மடந்தையர்
9. தாசியர்
10. நாடக மகளிர்

எனப் பல்வேறு வகையான பொதுமகளிர் வாழ்ந்ததாகக் கூறுகிறது. இதில் சிலருக்கு விளக்கமும் அளிக்கிறது. ஆயக்கலைகள் அறுபத்தி நான்கிலும் வல்லவர்களாக விளங்குபவர்களை எண்ணெண் கலையோர் எனவும் இசையில் வல்லவர்களாக விளங்குபவர்களை பண்ணியன் மடந்தையர் என கூறுகிறது. பரத்தையர்,

1. காதற் பரத்தையர்
2. சேரிப் பரத்தையர்

என இருவகையினராக அழைக்கப்பட்டனர். சங்க இலக்கியங்களில்,

1. விலைநலப்பெண்டிர்
2. பொருட் பெண்டிர்
3. பொது மகளிர்
4. விலைமகளிர்

ஆகிய பெயர்களில் அழைக்கப்பட்டனர்.

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் வரும் பரத்தையர் எவ்வகையில் இதில் தள்ளப்பட்டனர் என்பதைக் கொண்டு நான்கு வகைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள்
2. மனநிலை சரியில்லாத பெண்
3. வறுமையின் காரணமாக தள்ளப்பட்ட பெண்
4. வேலைக்குச் செல்லும் பெண்

என்று பரத்தையர் தொழிலில் ஈடுபவோரையும், சூழ்நிலை காரணமாக இக்குழியில் தள்ளப்பட்டவர்களையும் ஆசிரியர் தம் சிறுகதைகளில் சித்தரிக்கிறார்.

*“ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்*

*உயிரினும் ஓம்பப் படும்”*[63]

*என்ற குறள்நெறிக்கேற்ப வாழவேண்டும். ஒழுக்கம் தவறி வாழும் மக்களையும் அவர்களின் செயல்பாடுகளையும் இங்கு பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.*

**காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள்**

*காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள் பாலியல் தொழிலுக்குத் தள்ளப்படுகின்றனர். தன் ஊருக்கு சுற்றுலா வந்த ஒரு வெள்ளைக்காரனைக் காதலித்து அவனை நம்பி வெளிநாட்டுக்கு வந்தேன். இங்கு வந்த பின்புதான் தெரிந்தது.*

*“பணத்துக்காக... அந்த ஜெர்மன்காரனுக்கு பெரும்பணம் தேவைப்பட்டது விற்றுவிட்டான். இந்தியாவில் சுற்றுலாப் பயணியாக இந்தியப் பணத்தில் பணக்காரனாக எனக்குத் தெரிந்தவன். இங்கு வந்த பின் தான் தெரிந்தது சாதாரண தோட்டத் தொழிலாளி என்று”*[64] *அழுது தேம்பினாள் தன்னுடன் பஸ்ஸில் பயணித்த ஒருவரிடம் இதனைப் பகிர்ந்து கொண்டாள். அவர் கூறிய வார்த்தைகள் ஆறுதல் அளித்தது.*

*“புது ஆண்களிடம் தப்பித்தவறி நான் அழுதுவிடுகிறபோது, என்னைக் கொட்டித் தீர்க்கிறபோதோ இந்த வெள்ளைத்தோல் ஆண்கள் கட்டி அணைத்துக் கொள்வார்கள். முத்தமிடுவார்கள். நிறைய ஆறுதல் சொல்வார்கள். அது ஏதோ ஒன்றின் ஆரம்பமாக இருக்கக்கூடும். அது பாதுகாப்பு எனத் தோன்றும். அது தற்காலிக பாதுகாப்புதான்”*[65] *என்று அப்பெண் தன் மனதில் நினைத்துக் கொள்கிறாள். இவ்வகை நிலைக்கு ஆளாகும் பெண்களை ஆசிரியர் தம் சிறுகதையில் நன்கு சித்தரிக்கிறார்.*

‘அர்த்தநாரீஸ்வரம்’ என்ற சிறுகதையில் வரும் ‘கோகிலா’ ராமகிருஷ்ணனை காதலிக்கிறாள். ஆனால் அவன் திருமணம் ஆகி மூன்று குழந்தைகளுக்குத் தந்தை. ஆனால் அது தெரியாமல் அவனைக் காதலித்து ஏமாறுகிறாள். பின்பு தெரிந்ததும் அவனை நிராகரிக்கிறாள். ஆனாலும் முடியாமல் தவிக்கிறாள்.

“வேண்டா.... பொம்பளே வேணுமுன்னு எங்கிட்ட வர்றது
என்னைக் கேவலப்படுத்துது
உனக்கு பாதுகாப்பு வேண்டாமா?

பாதுகாப்புக்கென்று ஒரு வளையம் தேவைப்பட்டது அவளுக்கு. ஒரு வளையமாய் அவன் இருப்பது தெரிந்தாலும் அதை மீறிக் கொண்டு நுழையும் கால்களைத் தடுப்பது பெரிய கஷ்டமாகவே இருந்தது.”[66]

இனி அவள் திருமணம் செய்து வாழமுடியாது எனத் தெரிந்து அவனுக்கு அடங்கிப் போய்க்கொண்டு வாழ்கிறாள். இவ்வாறு கோகிலாவின் மனப்போராட்டத்தை ஆசிரியர் சுட்டுகிறார்.

‘நீலப்படமும் சுசித்ராவும்’ என்ற சிறுகதையில் சுசித்ரா என்ற பெண்ணை ஒருவன் காதலிக்கிறான். அவளைத் திருமணம் செய்து மகிழ்ச்சியாக வாழவேண்டும் என்று கனவு காண்கிறான். ஆனால் ஒருநாள் நீலப்படம் பார்க்க வேண்டும் என்று சபலப்பட்டு குறுந்தகடு வாங்கிவந்து அதைப் பார்க்கிறான். அதில் அவன் காதலித்த பெண் சுசித்ரா வருகிறாள். அதிர்ந்து போகிறான். “முகத்திலிருந்து உடம்பு முழுவதுமாக ஒரு பெண்ணின் உருவம் திரையில் வந்தபோது உடம்பு பயத்தால் கவ்விக் கொள்வது போலிருந்தது. உடம்பு ஒருவகைப் பதற்றத்துடன் நடுங்க ஆரம்பித்தது. உடம்பின் காமக்கிளர்ச்சியின் தருணத்தில்தான் அகப்பட்டிருக்கிறேனோ என்பதை மறுதலித்துப்

பார்த்தேன். ஆனால் உடம்பு பயத்தால் நடுங்கிக் கொண்டிருப்பது தெளிவாயிற்று"[67] அப்பெண் சுசித்ரா என்பது தெளிவானது.

அவன் அதனைப் பார்த்து அழுது புலம்புகிறான். தன்னை இப்படி ஏமாற்றிவிட்டாளே இவளையா காதலித்தேன் என்று யாரிடமும் சொல்லவும் முடியாமல் ஒருவகை மனப்போராட்டத்திற்கு ஆளாகிறான். இச்சிறுகதையில் பெண்களால் ஏமாற்றம் அடையும் ஆண்களைச் சுட்டுகிறார் ஆசிரியர். அதனால் அவர்கள் எதிர்கொள்ளும் மனப்போராட்டத்தையும் சித்தரிக்கிறார்.

**மனநிலை சரியில்லாத பெண்கள்**

அகப்போராட்டத்தில் இன்றைய சமுதாயத்தில் செல்வந்தர்களாக வாழும் பலருக்குத் தங்கள் குடும்பத்தில் மனநிலை பாதிக்கப்பட்ட குழந்தைகள் பிறந்தால் அவர்களை அவமானமாகக் கருதுகிறார்கள். அதனால் அவர்களை எங்காவது கொண்டு போய் விட்டுவிடுகின்றனர். அவர்கள் பல சீரழிவிற்கு ஆளாகின்றனர். இவர்களை வைத்துப் பராமரிக்கும் சில காப்பகங்களும் இவர்களைத் தவறாகப் பயன்படுத்துகிறது. இதனை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் பதிவுசெய்கிறார்.

'தொடுகை' என்ற சிறுகதையில் மனநிலை காப்பகத்தில் தியாகு வேலைசெய்கிறான். அவனைக் காண அவன் காதலி தனலெட்சுமி வருகிறாள். அப்போது அவள் பார்க்க நேர்ந்த சில சம்பங்கள் அவளை உரையவைக்கிறது. அந்த நீண்ட காம்பவுண்ட் அருகில், சிலர் மனநிலை சரியில்லாத பெண்களிடம் தவறாக நடந்துகொள்கின்றனர். இதனை, "எதற்காக இவர்கள் இப்படி நிற்கிறார்கள் என்று நினைத்தபடி கூர்ந்து

கவனிக்கிறாள். உடம்பு நடுங்குகிறது. பச்சை கவுன் சீருடை அணிந்த பெண்ணின் கழுத்துக்கு கீழே ஒருவனின் இரு கைகளும் இருந்தன. அந்த நோயாளிப் பெண்ணின் முகத்தில் விகாரமாய் சிரிப்பெழுந்தது. அவ்விடத்திலிருந்து வந்த நாற்பது வயதுக்காரன் பேண்ட்டை மேலிழுத்து சரி செய்து கொண்டான். தலை மயிரை ஒதுக்கினபடி இருட்டிலிருந்து வந்த பெண்ணின் பச்சைநிறக் கவுன் மாறுமாறாய் இருந்தது."[68]

இதனைக் கண்ட தனலெட்சுமி நிலைகுலைந்து போகிறாள். இப்பெண்களைப் பாதுகாக்க வேண்டிய இவர்களே இவ்வாறு இருக்கின்றனரே என அழுகிறாள். தியாகுவிடம் சொல்லி ஆண்களை நம்பவே கூடாது குழந்தையாகப் பார்க்க வேண்டிய இவர்களை இவ்வாறு செய்கின்றனரே என மனம் வேதனைப்படுகிறாள்.

இக்கதையில் தனலெட்சுமியின் வாயிலாக மனப்போராட்டத்தை, ஆசிரியரின் உள்ள வெளிப்பாட்டை வெளிக்காட்டுகிறார்.

**வறுமைக் காரணமாக பாலியல் தொழிலுக்கு தள்ளப்பட்டவர்கள்**

இச்சமூகத்தில் பாதி தவறுகள் நடப்பதற்கு காரணம் வறுமை. வறுமையின் காரணமாக பாலியல் தொழிலுக்குத் தள்ளப்பட்டவர்கள் பலரை இச்சிறுகதையில் ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

'நெருப்புக் கோளம்' என்ற சிறுகதையில் ரோகிணி என்ற பெண் தன் வறுமைக்கு முற்றுப்புள்ளி வைக்கவும், ஆறுதல் அற்ற நிலையிலும் மூர்த்தி என்ற ஒருவனுடன் பழகுகிறாள். பின்பு அவன் திருமணம் ஆனவன் என்று தெரிந்தும் அப்பழக்கத்தை விடாமல் தொடர்கின்றனர். பின்பு அதுவே அவளுக்குத் தொழிலாகிறது.

"ரோகிணியின் குரல் நெகிழ்வடைந்தது. கண்கள் பனித்தன. கன்னங்களில் உருண்டோடிய நீரை அவன் சாவகாசமாய் பார்த்துக் கொண்டிருந்தான்."[69] தன் வாழ்க்கை இப்படி ஆகிவிட்டதே என மூர்த்தியிடம் எப்போதுமே அவள் அழுவதுண்டு. இவ்வாறு சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதையில் வறுமையே தான் இத்தொழிலுக்குப் போனதற்குக் காரணம் என்று சித்தரிக்கிறார்.

'ரூபங்கள்' என்ற சிறுகதையில் வரும் பெண் அவளைச் சந்திக்க வரும் ஆண்களை நினைத்துப் பார்க்கிறாள். ஒவ்வொருவரும் அவளை எவ்வாறு கொடுமைப்படுத்துகின்றனர் என்று அவள் மனதில் எண்ண அலைகள் ஓடுகிறது. தன் நிலை இப்படி உள்ளதே கடைசிகாலத்தில் தனக்கு யார் துணை என நினைத்து வேதனை கொள்கிறாள். அவளை இச்சமூகம் எப்படி பார்க்கிறது என்பதை, "மளிகைக் கடையில் காய்கறிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். காய்கறிகளைத் தேர்வு செய்து போடுவதற்காக அவள் சிவப்பு பிளாஸ்டிக் கூடையைத் தேர்வு செய்தாள். மின் ஒளியில் முகத்திற்கு வெகு அருகில் இருந்த சிவப்பு பிளாஸ்டிக்கின் எதிரொளித்த வெளிச்சம் அவள் முகத்திற்குக் கடுமையைக் கொண்டுவந்திருந்தது."[70]

இதனைக் கடைக்கு அருகில் சில ஆண்கள் அவளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவளுக்கே அவளை நினைத்து வெருப்பாக இருந்தது. இனி தன் அடையாளம் இப்படித்தான் இருக்கும் என்று நினைத்துக் கொள்கிறாள். இவள் மனப்போராட்டத்தையே சுப்ரபாரதிமணியன் தம் கதையில் வெளிப்படுத்துகிறார்.

‘உடல் முடிச்சுகள்’ என்ற சிறுகதையில் வரும் சித்ராவின் கணவன் பரத்தையைத் தேடிச் செல்பவன். இதனை அறியும் போதெல்லாம் தடுத்தும் பார்த்தால் இரண்டு பிள்ளைகள் இருந்தும் இது தவறு எனச் சுட்டிக்காட்டியும் அவன் கேட்கவில்லை.

அவன் இத்தவறைத் தொடர்ந்து செய்துகொண்டே இருந்தான். இக்கதையில் வரும் பரத்தையின் உடல் வலிகளை ஆசிரியர் சுட்டுகிறார். “கனத்த பெருமூச்சொன்று அவள் முகத்தில் பரவியது. ரசாயன நெடி கலந்த மண் வாசனை. சுவற்றில் சாய்ந்த வாக்கிலேயே அவளைக் களைப்புறச் செய்துவிட்டான். அவள் உடம்பு அசதியால் மீண்டும் கண்களை மூடிக்கொண்டாள். ஐந்து நிமிடத்திற்கு ஒருமுறை விழிப்பு என்கிறமாதிரி இருந்தது.”[71]

சுப்ரபாரதிமணியன் இச்சிறுகதையின் மூலம் சித்ரா தன் கணவன் அடுத்தவளைத் தேடிச் செல்கிறானே என்ற அவளின் அக உணர்வும், பாலியலில் ஈடுபடும் பெண்களின் வலிகளையும் உளப் போராட்டமாக தன் சிறுகதையில் வெளிப்படுத்துகிறார்.

‘பாதுகாப்பு’ என்ற சிறுகதையில் வரும் கீதா என்ற கதைமாந்தர் பாலியல் தொழிலில் ஈடுபடுவதற்கு அவள் உறவினரே காரணமாகின்றனர். பெற்றோர் இல்லாத கீதா உறவினர் அரவணைப்பில் வளர்கிறாள். அங்கு இருக்கும் உறவுக்காரன் பழனிவேல் அவளை பலாத்காரம் செய்கிறான். தப்பித்துச் செல்கிறாள். ஆயினும் அத்தொழிலிலேயே தள்ளப் படுகிறாள். இதனை சக பெண் ஒருத்தியிடம் சொல்கிறாள்.

“பாத்திரம் கழுவி பொழப்பு நடத்தலாமுன்னு பாத்தா கூட என் வயது இடஞ்சலா இருக்கு. அழுகை கிளம்பியது. அவளது சிவந்த

முகத்து உப்பிலனை பட்டு மின்னியது கன்னம்"[72] என்று அவள் தோற்றத்தையும் அவள் இத்தொழிலுக்கு வரக் காரணம் அவள் உறவினரே என்று அவள் புலம்புவதன் மூலம் அவளின் மனப் போராட்டம் உணர்த்தப்படுகிறது.

**வேலைக்குச் செல்லும் இடத்தில்**

அகப்போராட்டத்தில் வேலைக்குச் செல்லும் பெண்கள் படும் பாலியல் சிக்கல்களும் ஒன்றாகக் கூறலாம். அதிகார வர்க்கம் சிறுசிறு வேலைக்குச் செல்லும் இடத்தில் காமுகர்களில் எத்தனை துன்பத்திற்கு ஆளாகின்றனர் என்பதை தம் சிறுகதைகளில் வெளிக்காட்டுகிறார்.

'சிதைவு' என்ற சிறுகதையில் வரும் ருத்ரம்மா வீட்டு வேலைக்குச் செல்லும் பெண் அங்கு பாலியல் தொல்லைக்கு ஆளாக நேரிடுகிறது. அவ்வீட்டின் முதலாளியும், அவன் மகனும் இதனையே தொடர்ந்து செய்கின்றனர். ருத்ரம்மா அவ்வீட்டிலிருந்து வெளியேர முடியாமல் தவிக்கிறாள். அங்கு தோட்டத்திற்கு வரும் ஆட்டைக் கல் எறிந்து விரட்டுகிறாள். அப்போது அவள் மனதில் "தனக்கு பிடிக்காதவர்களை இப்படிக் கல்லெறிந்து துரத்தினால் எப்படியிருக்கும் என ஒரு கணம் ஆசுவாசப்படுத்திக் கொண்டு குரூரத்திருப்திபடலாம் என்று பட்டது. தான் கல்லெறிய வேண்டிய முதல் ஆள் முதலாளியாகத்தான் இருக்கும். கூடவே சின்னவரின் சில்மிஷங்கள் அவளுக்கு அருவருப்பூட்டின. அரும்புகிற மீசையினூடே அவனின் அத்துமீறல்கள் இருந்துகொண்டே இருந்தன"[73] என்ற ருத்ரம்மாவின் எண்ணம் அவளின் மன வேதனைகளை வெளிப்படுத்துகிறது. வேலைக்குச் செல்லும் இடங்களின் பெண்கள் எத்தகைய பாதிப்புக்கு ஆளாகின்றனர் என்பதைச் சித்தரிக்கிறார்.

இவ்வாய்வில் மனித வாழ்வில் மனிதன் சந்திக்கும் அகப்போராட்டக் கூறுகள் மிகுதியான களங்களில் காணப்படுவதை தெளிவுபடுத்தியுள்ளார். காதல் முதல், பாலியல் வரை பெண்கள் இன்பத்திலும் துன்பத்திலும் பல போராட்டங்களை எதிர்கொள்வதை நன்கு சித்தரித்துள்ளார். பெண்ணுக்குரிய போராட்டமும் ஆணுக்குரிய போராட்டமும் வேறுவேறாக அமைந்துள்ளன. திருமணத்திற்கு முன்பும், பின்பும், பணிக்குச் செல்லும் இடத்திலும் ஆணைவிட பெண்ணே மனதளவிலும், உடலளவிலும் பாதிக்கப்படுகிறாள் என்பதை நன்கு அறியமுடிகிறது.

**புறப்போராட்டம்**

அகப்போராட்டம், தன்னிலிருந்தும், குடும்பத்திலிருந்தும் பெரும்பாலும் உருவாகிறது. ஆனால் புறப்போராட்டம் சமூக அமைப்பு, பின்னணி போன்றவற்றால் ஏற்படுகிறது.

தன்னைச் சுற்றியுள்ள உறவுகளாலும் அகப்போராட்டத்திற்கு உட்பட்டதைப் போன்று தான் சார்ந்துள்ள சமூகத்திலிருந்து பலவகைப் போராட்டங்களுக்கு ஆட்படுகிறான். இதனைப் பல சிறுகதைகளில் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். அவையாவன,

1. நட்புறவு
2. உழைப்பின் சிறப்பு
3. கலவரம்
4. சுற்றுச்சூழல்
5. வேலையின்மை
6. வறுமை
7. அதிகார வர்க்கம்

8. சாதி - மதம்

9. கலாச்சாரச் சீரழிவு

போன்றவை புறப்போராட்டங்களுக்குக் காரணமாக அமைகின்றது. ஆசிரியர் தம் உள்ளத்து உணர்வுகளைக் கதைகளில் வரும் பாத்திரங்களில் அழுத்தமாகக் கூறிச் செல்கிறார். இவை சமுதாய அக்கறை உள்ள ஒரு மனிதனை அடையாளம் காட்டுகிறது. அச்சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் இப்புறப் போராட்டங்களை இவர் தம் சிறுகதைகளில் சுட்டுகிறார்.

**சமுதாய உறவு**

குடும்ப உறவுகளோடு மனிதன் வாழ்வு முற்றுப்பெறுவதில்லை. ஒவ்வொரு தனி மனிதனும் அவன் வாழும் சமுதாயத்தின் உறுப்பினராக விளங்குகிறான். அவனுக்கும் அவன் வாழும் சமுதாயத்திற்கும் இடையிலான உறவும், அத்தனி மனித வாழ்க்கையில் மகிழ்ச்சியையும், வருத்தத்தையும், நிறைவையும் தீர்மானிக்கும் ஒரு கூறாக அமைகிறது. எனவே ஒருவன் தன் குடும்பத்தோடும் தன் வாழ்வை பேணிக் காப்பதோடு அவன் வாழ்வு நிறைவடைவதில்லை. இச்சமூகமே அவனை வடிவமைக்க துணைநிற்கின்றது எனலாம்.

இச்சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் தங்கள் நிலையில் ஆற்றவேண்டிய கடமை உண்டு என்பதைச் சங்ககாலப் புலவர் அக்கால நிலைக்கேற்ப எடுத்துரைக்கிறார்.

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே

ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்

களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[74]

என்று சங்கப்புலவர் உரைக்கும் சமுதாயக் கடமைகள் குறிப்பிடத்தக்கன. இப்பாடல் ஒருவன் சமுதாயத்திற்கு ஆற்றவேண்டிய கடமைகளையும் அச்சமுதாயத்தினின்று பெற்றுக்கொள்ளும் பயன்களையும் இணைத்துக் கூறுகிறது.

தாய் மகனை ஈன்றெடுப்பதும், தந்தை அவனை வீரம் பொருந்தியவனாக்குவதும் ஆகிய அவர்தம் கடமைகள் கூறப்பட்டுள்ளன. அவ்வீரனுக்குத் தேவையான வேலினை வடித்துக் கொடுப்பது அவ்வீரன் வாழும் சமுதாயத்தின் மற்றோர் உறுப்பினரான கொல்லனின் கடமையாகிறது. இவ்வாய்ப்புக்களையெல்லாம் பெற்ற அவ்வீரன் தன் நாட்டிற்காகப் போரிடும் போது பகைவனின் யானைப்படையை அழித்துப் பகைவர்களைத் தோற்று ஓடச் செய்து போரிலே வென்று நாட்டிற்குப் புகழைத் தேடித்தருவது அவ்வீரனின் கடமையாகிறது.

வீரன் ஈட்டும் புகழானது அவனுக்கு மட்டுமே உரியதன்று. அப்புகழ் அவ்வீரனின் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் மன்னனுக்கும் என அனைவருக்கும் உரியதாகும். எனவே சமூகத்தில் ஒவ்வொருவரும் ஆற்றும் கடமை அச்சமூகத்தின் மேம்பாட்டுக்கு அவர்கள் ஆற்றும் பங்காக அமைகிறது.

சமுதாய உறவுநிலையை இருவகையாகப் பிரித்துக் காணலாம். அவை, மக்களுக்கிடையிலான உறவு, மன்னனுக்கும் மக்களுக்கும் இடையேயான உறவு. இன்றைய நாளில் மன்னன் என்பது மக்களாட்சி நிலவுகின்ற சூழலில் அரசினைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

சமுதாய உறவினைப் பற்றிச் சித்தரிக்கும் ஆசிரியர் 'நதிக்கரையும், கான்கிரீட் வனங்களும்' என்ற சிறுகதையில் சுரேந்திரன் தன் சொந்த ஊருக்குப் பல வருடங்கள் கழித்து வருகிறான். வேலை காரணமாக சென்றவன் பட்டணத்திலேயே தங்க வேண்டிய நிலை அவனுக்கு. சந்தோஷத்தோடு ஊருக்கு வருகிறான்.

தனக்கு அறிமுகம் இல்லாதவர்களும் அவனோடு பேசும் விதத்தில் மகிழ்ச்சி அடைகிறான். சமுதாயத்தைப் பற்றி நினைக்கும்போது, சமுதாயத்தின் ஒரு பங்கான ஊரினையும் பதிவு செய்கிறார். தான் சந்தித்த தோணிக்காரர் அவனிடம் பாசமாக நடந்துகொள்கிறார். நகர மக்களுக்கும் இங்குள்ளவர்களுக்கும் எத்தனை வித்தியாசம் என்று வியக்கிறார்.

"என்ன தோணிக்காரரே ரொம்ப ஜாலியா இருக்காப்பலே இருக்கு. அவர் அவனைப் பார்த்துச் சிரித்தார். என்ன பட்டணத்து தம்பி... இங்கதா இருக்கீங்களா... ஊருக்கு போயிட்டிங்களோன்னு நினைச்சேன். பட்டணத்துக்காரங்க இந்த ஊரிலே ரெண்டு நாளைக்கு மேல் தங்க மாட்டாங்களே... காலெல்லா பரபரன்னு இருக்குமே."[75]

நகரத்தில் தன் வீட்டிற்கு பக்கத்து வீட்டுக்காரர்கள் யார்? என்று தெரியாமல் வாழும் நகரமக்களை நினைக்கையில், இந்த கிராம மக்கள் எத்தனை நல்லவர்கள் என நினைத்துக் கொள்கிறான் சுரேந்திரன். சமுதாயத்தில் உறவு என்பது எந்தவித பிரதிபலனும் பார்க்காமல் அதுவாக அமைந்து ஒரு புதிய உறவை உருவாக்கி மலர்வதை இச்சிறுகதையின் மூலம் சித்தரிக்கிறார்.

நல்ல விஷயங்கள் சொந்தபந்தங்களில் இருந்து கற்றுக்கொள்வதை விட சமுதாயத்தில் உள்ள உறவுகளின் மூலமும் கற்றுக்கொள்ள முடியும் என்பதை இச்சிறுகதையில் சித்தரிக்கிறார்.

**நட்புறவு**

ஒவ்வொரு மனிதனுக்கும் உறவின் முதல்நிலையாக அமைவது அவனுடைய குடும்ப உறவாகும். அம்மனிதன் குடும்ப உறவைத் தாண்டி வெளியுலகோடு தொடர்பு கொள்ளும்போது அவன் அடையும் அடுத்த உறவாக நட்புறவு அமைகிறது. எனவே, குடும்ப உறவின் மேம்பாட்டில் கருத்தைச் செலுத்த வேண்டிய அதே அளவிற்கு நட்பு மேம்பாட்டிற்கும் உரிய இடம் வழங்க வேண்டும். இதனால் நட்புறவின் மேம்பாடு தனிமனித வாழ்க்கையில் இன்றியமையா இடம் வகுப்பதை அறியலாம். மனித உறவுகளில் நட்பு தனியிடம் வகிக்கின்றது. குடும்பம் மற்றும் சமூக உறவுகளிலிருந்து நட்பு வேறுபட்டு நிற்கிறது.

குடும்ப உறவுகள் இரத்த உறவின் அடிப்படையில் நமது விருப்பத்திற்கு இடமில்லாத வகையிலும் அமைகின்றன. பெற்றோரும் பிள்ளைகளும் நமது உணவிற்கும் விருப்பு வெறுப்புகளுக்கும் ஏற்ப அமையும் உவுகள் என்று கூறிவிட முடியாது. ஆனால் நட்புறவில் ஒருவர் தமக்குரிய நண்பனை தேர்ந்தெடுத்துக்கொள்ள வாய்ப்புள்ளது. இரு உள்ளங்களுக்கிடையே மலர்வதற்கு அடிப்படையாக அன்பு இருத்தல் வேண்டும். அந்த அன்பு அவ்விருவரையும் நெருங்கச் செய்யும் ஆர்வம் கொடுக்கும். அந்நெருக்கம் நட்பை உருவாக்கிவிடும்.

**நட்பின் மேன்மை**

பண்டைத்தமிழர் சமுதாயத்தில் நட்புக்கு உயர்ந்த இடம் வழங்கியுள்ளனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று கூறுகின்றன. நண்பராகக் கலந்துவிட்ட இருவரில் ஒருவரது உள்ளம் புண்படக்கூடாது என்பதில் மற்றொருவர் பெரிதும் கருத்துடையவராக இருப்பர். நண்பர் மனம் விரும்பி நஞ்சினைக் குடிக்கக் கொடுத்தாலும் அதனை ஏற்றுக் குடித்துவிடும் மனத்தைப் பெறுவதே நட்பிற்கு அடையாளம் என்றும் மறுத்தால் அவரது மனம் வருந்தும் என்றெண்ணி அதற்காகவே நஞ்சைக் குடிப்பதும் நட்பிற்கு உரிய சான்றும் என்றும் நற்றிணை கூறுகிறது.

"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்"[76]

என வரும் நற்றிணை அடிகள் தமிழர் நாகரிகம் நண்பர்கள் வாயிலாக வெளிப்படும் உயர்ந்த பாங்கினை வெளிப்படுத்துவதோடு நட்பின் சிறப்பினை எடுத்துக் காட்டுவதாகவும் அமைகிறது. திருவள்ளுவரும் நட்பின் பெருமையை விளக்குவதற்கு இதே கருத்தினை எடுத்துக்கூறியுள்ளார்.

"பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"[77]

என்னும் குறள் இங்குச் சுட்டிக் காட்டத்தக்கதாகும். தனிமனித வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் நட்பு பெறும் உயர்ந்த இடத்தை வள்ளுவர் தெளிவாக எடுத்துரைக்கிறார். திருக்குறளில் நட்பு குறித்து ஐந்து அதிகாரங்களை அமைத்திருப்பது வள்ளுவர் நட்பிற்கு வழங்கியிருக்கும் இன்றியமையாமையை உணரலாம். பழைமை என்னும் ஐந்து அதிகாரங்கள் நட்பெனும் உறவு ஒவ்வொரு மனிதனின்

வாழ்விலும் ஏற்படுத்தும் விளைவுகளை நன்கு விளக்குகின்றன. தனிமனித வாழ்வில் உயர்வதற்கு நண்பர்களில் தகுந்த அறிவுரைகள் காரணமாக அமைகின்றன. தன்னிலையில் இருந்து ஒருவன் தாழ்வதற்கும் சில நேரங்களில் பேரழிவைச் சந்திப்பதற்கும்கூட நட்பே காரணமாக இருக்கிறது என்பதை வள்ளுவர் வலியுறுத்திக் கூறவே ஐந்து அதிகாரங்களை அமைத்துள்ளார் எனலாம்.

**இலக்கியங்களில் நட்பு**

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான புறநானூறு பண்டைத் தமிழரின் நட்புச் சிறப்பைப் பதிவுசெய்துள்ளது. பறம்பு மலையின் மன்னனான பாரிக்கும் பைந்தமிழ்ப் புலவரான கபிலருக்கும் இடையே தோன்றிய நட்பைப் புறநானூறு புலப்படுத்துகிறது. பாரி இறந்தபின் அவனது புதல்வியருக்கு மணம் முடிக்கும் பொறுப்பைக் கபிலர் ஏற்றுக்கொள்கிறார். அவர்கள் இருவரையும் இருங்கோவேளிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்துகிறார்.

"நெடுமாப் பாரிமகளிர் யானே
தந்தை தோழன் இவர்கள் மகளிர்"[78]

என்று அவர் குறிப்பிடுமிடத்து மன்னனோடு புலவர் நண்பராயிருத்தல் கூடும் என்பது புலப்படுகிறது. நட்பின் ஆழத்தை உணர்த்தும் சொல்லான தோழன் என்னும் தொடர் பாரி - கபிலர் நட்பு மேம்பாட்டை உலகிற்கு வெளிப்படுத்தும் என்பதில் ஐயமில்லை. சங்க இலக்கியமான புறநானூறு காட்டும் நட்புறவில் கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் நட்பு சிறப்புடையதாகும்.

இருவரும் ஒருவரை ஒருவர் காணாது நட்புக் கொண்டவர்கள் என்பதை இலக்கியம் சுட்டுகிறது. புற வாழ்க்கையில் உறவுகளைக்

காட்டிலும் நட்பு பெரிதாக மதிக்கப்படுவதை அறியமுடிகிறது. தமிழ் இலக்கியங்களில் நட்பு பற்றிய பதிவுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. சுப்ரபாரதிமணியன் நட்பால் ஏற்படும் போராட்டங்களை அடையாளம் என்ற சிறுகதையில் சிறப்பாக விளக்கியுள்ளார்.

'அடையாளம்' என்ற சிறுகதையில் சுரேஷ், சீனிவாசன் நல்ல நண்பர்களாக உள்ளனர். சுரேஷ் திருமணத்திற்கு சீனிவாசன் தன் மனைவி திலகவதியுடன் வருகிறான். சுரேஷிற்கு மாப்பிள்ளைத் தோழனாக இருக்கிறான். சில சம்பிரதாயங்களில் மாமனுக்கு பதில் சுரேஷ் சீனிவாசனை அமரவைத்து கௌரவிக்க நினைக்கிறான்.

"மாப்பிள்ளையின் தோழன் மச்சானாக இருக்க வேண்டும் என்கின்றனர். சீனுவே இருக்கட்டுமே, சீனு நீயே குடை பிடிடா... சுரேஷின் வார்த்தைகளை மறுக்கிறதில் அவனின் முதல் விருப்பமே அடிபட்டுப் போகும் என்ற வருத்தத்தைத் தவிர்க்கிற பொருட்டு ஒரு நிமிஷம் சீனிவாசன் யோசித்தான்."[79]

சுரேஷ் தன் நண்பன் தோழனாக வரட்டும் என சொல்லி அவனை தன் குடும்பத்தில் ஒருவனாக நினைக்கிறான். ஆனால் சிறிது நேரத்தில் இது சம்பிரதாயக் கல்யாணம் எனச் சொல்லி அவனை மேடையைவிட்டு கீழ் இறங்கச் சொல்கின்றனர். இதனைக் கண்ட திலகவதி தன் கணவனுக்கு அவமானம் ஏற்பட்டுவிட்டதே என வருந்துகிறாள். அங்கிருந்து சென்றுவிட நினைக்கிறாள்.

"சீனிவாசன் திலகவதியைப் பெண் கும்பலில் தேடினான். தன் வெளியேற்றம் குறித்த நிராகரிப்பு அவளைத் தாக்கியிருக்கக்கூடும். இது

மாதிரிச் சமயங்களில் பெண்களைத் தேற்றுவதற்கான உபாயங்கள் எளிதானவையல்ல என்பது நன்கு தெரிந்தது."[80]

திலகவதி உங்கள் நண்பரால் நீங்கள் அவமானப்பட நேரிட்டதே எனக் கூறி அழுகிறாள். அவன் என்னை பெருமைப்படவைக்க நினைத்தான். ஆனால் அவனுக்கு இந்த அவமானத்திற்கும் சம்பந்தம் இல்லை எனக் கூறி நண்பனை விட்டுக் கொடுக்காமல் பேசுகிறாள். பெண்கள் தனக்குத் தலைகுனிவு என்றாலும் தாங்கிக்கொள்வார்கள். தன் கணவனுக்கு என்றால் பொருக்க மாட்டார்கள் என்பதை திலகவதி உணர்த்துகிறாள். இங்கு இவளின் மனப்போராட்டத்தை அறியமுடிகிறது. ஆசிரியர் நட்பின் மேன்மையை உணர்த்தி இச்சிறுகதையில் திலகவதியின் உள்ளப் போராட்டத்தையும் சுட்டிக்காட்டுகிறார்.

சமூகத்திலிருந்து மனிதன் சந்திக்கும் பிரச்சனைகளில் நண்பர்களாலும் ஒருவருக்கு பல போராட்டங்களுக்கு ஆளாக நேரிடுகிறது என்பதை தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

**உழைப்பின் சிறப்பு**

ஒரு சமுதாயத்தில் தனி மனிதனுக்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவம் அவரது பொருளாதார நிலையைக் கொண்டுதான் நிர்ணயம் செய்யப்படுகிறது. இத்தகைய பொருளாதார முன்னேற்றத்திற்கு உழைப்பு அச்சாணியாக அமைகிறது. நம் முன்னோர்கள் உழைப்பின் மேன்மையை உணர்ந்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் வேளாண் முறைகளைக் கடைப்பிடித்து வந்தனரே தவிர அன்று தொழில் நுட்பங்களின் வளர்ச்சி இல்லை. கற்கால மனிதர்கள் வேட்டையாடும் தொழிலை அடுத்து அறிவுப்பூர்வமாக மேற்கொண்ட தொழில் வேளாண்மையாகும். அவர்கள் தங்கள் சமுதாயத் தேவையை

உணர்ந்து கடுமையாக உழைத்தனர். ஆகவே, ஒவ்வொரு மனிதனும் நாட்டின் வளர்ச்சிக்குத் தங்களின் பங்கு என்ன என்பதை உணர வேண்டும். இங்கு உழைப்பாளரின் பங்களிப்பைப் போன்று நகர்ப்புறங்களில் நவீனத் தொழில் பெருக்கத்தால் தொழிலாளர்களின் பெருக்கமும் அதிகரித்து வருகிறது. தொழில் வளர்ச்சியைப் பொருத்தவரையில் உழைப்பாளரும் தொழிலாளரும் ஒரேமாதிரியான சமுதாய மதிப்பீட்டைப் பெறுகின்றன.

**தொழிலின் போராட்டம்**

சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் நெசவுத்தொழில் நலிவு, அம்மக்களின் பொருளாதாரப் பற்றாக்குறைக்கு காரணமாகிறது என்பதைச் சுட்டுகிறார்.

நெசவுத் தொழில் நலிவடைந்து வருவதை ஆசிரியர் பின்வரும் சிறுகதைகளில் சுட்டிக்காட்டுகிறார்.

1. நசுக்கம்
2. நவீனம்
3. சிதறல்
4. தகனம்
5. கூரிய நாடா

நெசவு நூற்கும் ஆண், பெண் இருபாலரும் எத்தகைய துன்பத்திற்கு ஆளாகின்றனர் என்பதையும் அவர்களின் வாழ்க்கைத் தரத்தையும் தம் சிறுகதைகளில் குறிப்பிடுகிறார்.

'நசுக்கம்' என்ற சிறுகதையில் நெசவுத்தொழில் செய்பவன் வாழ்க்கைத்தரம் உயரவேயில்லை. பலவகையான வண்ணங்களில்

அவன் ஆடை செய்கிறான். அவன் வாழ்க்கை வண்ணமற்று இருண்டு உள்ளது என்பதை தம் சிறுகதையில் சுட்டுகிறார்.

"பஞ்சுத் துகள்களின் மூச்சில் திணறிப் போவான். வாயைத் திறந்துகொண்டுதான் சுவாசிக்க வேண்டி வந்துவிட்டது. நுரையீரல்களைச் சுற்றிப் பஞ்சுத்துகள்கள் மேகங்களாய்ப் படர்ந்தன. நீருக்காக ஏங்கும் பறவையின் அலகு போலப் படுக்கையின் அவன் வாய் திறந்திருக்கும். புரண்டு அலுத்துப்போய்ப் படுக்கையை விட்டுத் தரையிறங்கிக் கிடப்பதைத் தரை ஈரத்தால் அவனால் உணரமுடிந்தது."[81]

இவ்வாறு நெசவுத்தொழில் செய்பவன் உடலும் உள்ளமும் நைந்துபோய் இருப்பதை உணரமுடிகிறது. தொழில் நலிவு அதனைச் சார்ந்திருக்கும் மக்களை வறுமைக்கு தள்ளுகிறது என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் சித்தரித்துள்ளார்.

'நவீனம்' என்ற சிறுகதையில் பொன்னுச்சாமி நெசவுத் தொழில் செய்பவர். அதில் வரும் வருமானத்தைக் கொண்டு தன் தம்பியை படிக்கவைத்து, தன்னைப்போல் இந்த தறிக்குழிக்குள் கஷ்டப்பட வேண்டாம் என நினைத்துப் படிக்கவைத்தார். அவன் படித்து வேறு வேலை செய்யும்போது இவர்களை வந்து பார்க்கிறான்.

"கொடுத்து வெச்சவன் படிச்சதுனாலே இந்த தறிக்குழியிலெ உக்காரதிலிருந்து தப்பிச்சே. உங்கண்ணன் பண்ணின பெரிய காரியம் உன்னெப் படிக்க வெச்சது. நல்ல புண்ணியத்தை கட்டிட்டான் உங்கண்ணன்."[82]

இந்த நெசவுத் தொழிலைச் செய்தால் வாழ்வில் முன்னேற முடியாது. காலம் முழுவதும் கஷ்டப்படவேண்டும் என அம்மக்கள்

நினைக்கும் நிலையில் உள்ளது அத் தொழில் என்பதை சுட்டுகிறார் ஆசிரியர்.

'சிதறல்' என்ற சிறுகதையில் சின்னமினி என்பவர் நெசவு நூற்கும் குடும்பம். மனைவியும் அவரும் அதில் கஷ்டப்பட்டு வேலைசெய்து தன் பிள்ளைகளைப் படிக்க வைக்கின்றனர். அப்போது சின்னமினியின் மனைவி அதில் படும் கஷ்டத்தால் புலம்பிக்கொண்டே இருப்பாள். இதனை, "அந்தக்காலத்தில் 'வேன்' வைத்திருந்த பெரிய குடும்பம். ஒட்டல் வைத்து உபகாரமாய் இருந்த தாத்தா... போக்கற்று நெசவு குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டது. நெசவுக் குழிக்குள்ளே அமிழ்ந்துபோன வாழ்வு, இனி மீளாது மீளாது என்பாள்."[83]

இவளின் கஷ்டத்தை புலம்பித் தீர்க்கட்டும் என்று அவனும் கண்டுகொள்ள மாட்டான். தன் பிள்ளைகளாவது மீளட்டும் என நினைத்துக் கொள்வான் சின்னமினி.

"இந்த தறிக்குழியிலிருந்து அவங்களாச்சும் மீளனும்... தப்பிக்கணும். தலைமுறை தலைமுறையா தறிக்குழி நமக்கெல்லா சவக்குழியா இருந்தது போதும்"[84] என்று சின்னமினியின் எண்ணம் இத்தொழில் இருக்கும் நிலையை நமக்கு காட்டுகிறது. அத்தொழில் வளர்ச்சியின்மையால் மக்களுக்கு இந்நிலை ஏற்படுகிறது என்பதை ஆசிரியர் இப்பாத்திரங்கள் வழி வெளிப்படுத்துகிறார்.

நெசவுத் தொழிலில் ஈடுபடும் மக்கள் தொடர்ந்து போராட்டங்களைச் சந்திக்கின்றனர். பசியும், பட்டினியும் இவர்கள் அவ்வப்போது சந்திப்பதால், இத் தொழிலை 'சவக்குழி' என்றே ஆசிரியர் குறிப்பிடுகிறார். கல்வி, வேலைவாய்ப்பு, தொழில் முன்னேற்றம போன்றவற்றுக்காக

போராட்டங்களைச் சந்தித்து வருவதை இவரது கதைகள் தெளிவாக உணர்த்துகின்றன.

**கலவரம்**

புறத்திலிருந்து மனிதன் சந்திக்கும் முக்கியப் போராட்டங்களில் கலவரமும் ஒன்று. யாரோ ஒருவருக்காக நடக்கும் கலவரத்தில் தனிமனிதன் பாதிப்படைகிறான். இதனால் அவனது வாழ்வாதாரம் பாதிக்கப்படுகிறது. எனவே சமூகத்திலிருந்து சந்திக்கும் முக்கிய போராட்டங்களில் கலவரமும் ஒன்றாகும்.

மனிதனின் உரிமைகள் மறுக்கப்படும்போதும், அவனது ஆசைகள் நிராகரிக்கப்படும்போதும் அங்கு எழும் உரிமைப் போராட்டமே கலவரமாக மாறுகிறது. இக்கலவரங்கள் மக்களுக்கு இடையூறாக அமைந்து அவர்களின் அன்றாட வாழ்க்கையை பாதிக்கிறது என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்துகிறார்.

கலவரங்களைச் சுட்டிக்காட்டும் சிறுகதைகள் பின்வருமாறு:

| **சிறுகதை** | **கதைமாந்தர்கள்** |
|---|---|
| 1. வெடி | சுப்பையா |
| 2. தீயாப் பறவைகள் | சண்முகம், பிரபு |
| 3. நரகத்திலிருந்து நகரத்திற்கு | அருள், சாந்தி |
| 4. முற்றுகை | சின்னசாமி |
| 5. ஒரு துப்பாக்கியும் சில பறவைகளும் | மகுடேஷ்வரன், சின்னசாமி |
| 6. குவியல் பலிகள் | கதையாசிரியர் |

போன்ற சிறுகதைகள் மக்கள் எதிர்கொள்ளும் புறப்போராட்டங்களைச் சிறப்பாக வெளிப்படுத்துகின்றன.

‘வெடி’ என்ற சிறுகதையில் சுப்பையா என்ற கதைமாந்தர் தன் ஊரில் குடிக்க நீரின்றி மக்கள் அவதிப்படுவதால் கிணறு வெட்டுகிறான். பாதி வெட்டிய நிலையில் இன்னும் சிறிது வெட்டினால் நீர் வந்துவிடும் நிலை. ஆனால், ஒரு பாறை உள்ளது. அதை வெடிவைத்து தகர்த்தால் நீர் வரும். அப்போது அவ்வூரில் மொழிப்பிரச்சனை ஏற்பட்டு கலவரமாக மாறுகிறது. யாரும் வெடி வெடிக்கக்கூடாது எனக் காவல்துறை ஆணை பிறப்பிக்கின்றது. இதனைக் கேட்டதும் சுப்பையன் வருந்துகிறான்.

“கிணறு வெட்டுகிறவன் உபயோகப்படுத்தும் வெடிமருந்து கூட விற்கப்படக் கூடாது என்று வெடிமருந்துக் கடைகள் சீலிடப்பட்டன. வெடி மருந்துகள் இல்லாமல் எத்தனை நாளைக்குத் தான் பாறைகளை கடப்பாரையால் தகர்த்துக் கொண்டிருக்க முடியும்”[85] என்று கூறி வருத்தப்படுகிறான். ஒருசிலரின் தவறான நோக்கத்தால் சாதாரண பாமர மக்களும் பாதிக்கப்படுகின்றனர் என்பதை ஆசிரியர் இக்கதையில் சுட்டிக்காட்டுகிறார்.

‘தீயாப் பறவைகள்’ என்ற சிறுகதையில் சண்முகம், பிரபு இருவரும் பள்ளியில் பயிலும் மாணவர்கள். இருவரும் அவ்வூரில் பறவைகளையும், ஹெலிகாப்டர்களையும் பார்த்து தானும் அதுபோல் பறக்கவேண்டும் என ஆசைப்படுவார்கள். ஹெலிகாப்டர் போகும்போதெல்லாம் அதனை நானும் ஓட்ட வேண்டும் எனச் சொல்லிக் கொள்வார்கள். ஒருமுறை ஹெலிகாப்டரில் இருந்து குண்டுகள் விழுந்து வெடித்ததை இருவரும் பார்த்து அதிர்ந்து போகின்றனர். அதிலிருந்து அவ்வாசையே இருவருக்கும் விட்டுப் போகிறது. மற்றொரு முறை நடந்த குண்டு வெடிப்பில் பிரபுவின் வீடு

கருகியிருக்கிறது. சண்முகம் தேடிவந்து பார்த்ததும் பயத்துடன் நிற்கிறான்.

"குண்டு விழுந்து குழியான முற்றம் பிறந்து விரிந்தும் இருந்த கதவுகள். இப்போது யாருமில்லை என்பதன் அடையாளமாகத் திறந்து கிடந்தன. தீவைத்துக் கொழுத்தினதின் மிச்சம்போல இருந்தன."[86]

இதுபோன்ற கலவரங்களைப் பார்க்கும் பெரியவர்களோடு, மாணவர்களும் பாதிப்புக்கு உள்ளாகின்றனர். இவர்களின் வருங்காலக் கனவுகளும் குழைந்துபோகிறது என்பதை சுப்ரபாரதிமணியன் சுட்டுகிறார்.

**சுற்றுச்சூழல்**

மனித வாழ்க்கையில் ஐம்பெரும் பூதங்களாகக் கூறப்படும் நீர், நிலம், நெருப்பு, காற்று, வான் ஆகியவை தற்காலத்தில் மிகப்பெரிய போராட்டங்களுக்கு வித்திடுகின்றன. இயற்கையோடு இயைந்த வாழ்வே போராட்டம் இல்லாத வாழ்க்கையாகும்.

இயற்கை, வாழ்க்கை, இலக்கியம் என்ற இம் மூன்றும் ஒன்றுக்கொன்று நெருக்கமான தொடர்புடையவை. ஒன்றிலிருந்து மற்றொன்று தோன்றுவதற்கும் இடமானவை. நிலம், நீர், காற்று போன்றவை தூய்மையாக இருப்பது மனித சமுதாயத்திற்கு மட்டுமின்றி அனைத்து உயிர்களின் வாழ்விற்கும் அடிப்படை ஆதாரமானவை. இப்பொருள்களின் தூய்மை குன்றும்போது அது உயிர்களின் உடல் நலத்திற்குக் கேடு விளைவிக்கும். மனிதனைப் பொறுத்தவரை உடல்நலம் குன்றும்போது அவன் உள்ளத்தாலும் பாதிக்கப்படுகிறான்.

**சுற்றுப்புறச் சூழ்நிலை**

*"ஈக்கோலஜி' என்ற சொல்லானது வீடு அல்லது நிலையம் என்ற பொருள் கொண்ட 'ஆய்க்கோஸ்' (oikos) என்ற கிரேக்க மொழிச் சொல்லிலிருந்து உருவானதாகும். ஆகவே இயற்கையின் குடும்ப அமைப்பு எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது என்று ஆராய்வது சுற்றுப்புறவியல் (Ecology) ஆகும். பொதுவாகச் சொல்லின், உயிர்களுக்கும் அவை வாழும் சுற்றுப்புறத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பை ஆராயும் அறிவியல் சுற்றுப்புறவியல் எனப்படும். எனவே இயற்கையான நிலைகளில் வாழும் உயிரிகளுக்கும் அவைகளின் சூழ்நிலைகளுக்கும் இடையேயுள்ள உறவுகள் எவ்வாறு அமைந்துள்ளன என்று அறிவதே சூழ்நிலையியலின் நோக்கமாகும்."*[87]

மக்களின் சுயதேவை கருதி உலகளவில் காடுகள் வெகுவாக அழிக்கப்பட்டு வருகின்றன. அறிவியல், தகவல் தொழில்நுட்பம் முதலிய அதிவிரைவான வளர்ச்சிப் போக்குகள், இயற்கையிலிருந்து மனிதனைப் பிரித்துக் கொண்டுள்ளன.

ஒரு நாட்டின் பரப்பளவில் குறைந்தளவு 33 விழுக்காடு காடு இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அந்நாடானது எல்லாவகையான வளங்களும் நிறையப் பெற்று, மக்கள் ஆரோக்கியத்துடன் வாழ்வதற்கு ஏற்ற நிலையைப் பெறும் என்று பி.எல்.மணி அவர்கள் சுட்டுகிறார்.

இன்று உலகம் தழுவிய பொதுவான தட்பவெட்பக் காலநிலையாக மாற்றமடைந்து வருவதைப் பலரும் இப்பொழுது உணர்கிறோம். உலக நாடுகள் யாவும் நிலச் சீர்கேடு நீர்ச் சீர்கேடு, காற்று மாசுபாடு, ஒலி மாசுபாடு என்ற நிலையில் பாதிக்கப்பட்டுள்ளன.

இயற்கை என்று சொல்லும்போது பெரிய மலைத் தொடர்கள், அங்கு வீழ்கின்ற அருவி, குளிர்ந்த நீரோடைகள், பருவத்திற்கு ஏற்ப பூத்த மலர்கள், வண்டுகளின் ரீங்காரம், பறவைகளின் சப்தம் போன்றவைகள் இன்று கற்பனையில் மட்டுமே பார்க்கும் காட்சிகளாகிவிட்டன. எனவே சுற்றுப்புறச் சூழல் பற்றிய விழிப்புணர்வு கட்டாயம் தேவைப்படும் ஒன்றாகும்.

பண்டைய மக்கள் இயற்கை சார்ந்த வாழ்க்கையை வாழ்ந்தனர். எனினும் இயற்கை வளங்களின் பயன்பாடு வேண்டப்படும்போது அதற்கான விழிப்புணர்வுடன் செயல்பட்டனர். வனங்களின் பெருக்கம் பயனுடையது என்பதை அறிந்திருந்தனர். எனவே இயற்கைச் சூழலுக்கேற்பத் தமது வாழ்க்கை முறைகளை அமைத்துக்கொண்டு வாழ்ந்தனர்.

இவர்தம் படைப்புகளில் சுற்றுச்சூழல் பாதிப்பை விரிவாகவும், விளக்கமாகவும், உயிரோட்டமாகவும் காட்டுகிறார். இவர் சுற்றுச்சூழலில் ஆர்வம் கொண்டவர் என்பதை இவர்தம் படைப்புகள் வெளிப்படுத்துகின்றன.

'சார்ந்து நிற்க ஒரு மரம்' என்ற சிறுகதையில் அருண் இயற்கையை மிகவும் நேசிப்பவன். தன் வாழ்க்கை இயற்கையோடு இயைந்ததாகவே இருக்க வேண்டும் என ஆசைப்படும் ஒரு மாந்தர். இதனை, "கண்களுக்குள் ஆகாசப் பரப்பை இவ்வளவு தூரம் அடக்க முடியுமா? பொது சுமக்கும் இத்தனை மேகங்களை ஆகாயம் தாங்கிக் கொள்ள முடியுமா? தொடு வானம் என்பதை இன்றுதான் காண முடிந்தது. இயற்கையோடு ஒன்றிப்போகிற சுகத்தை அனுபவிப்பது ஒரு பெண்ணை

நுகர்கிற மாதிரியானது என்ற உணர்வு உடம்பு பூராவும் பரவி நின்றது."[88]

இயற்கையை மனிதன் நேசிக்க ஆரம்பித்தாலே சுற்றுச்சூழல் சிறப்பாக இருக்கும் என்பதை அருண் என்ற கதைமாந்தர் வாயிலாக சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

'மணல்' என்ற சிறுகதையில் செந்தில் என்ற கதைமாந்தர் தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் கழிவுகள் எத்தகைய பாதிப்புகளை ஏற்படுத்துகின்றன, இதே நிலை நீடித்தால் தலைமுறைகள் என்னவாகும், ஆறு, குளம் எல்லாம் கழிவுநீர் என வருந்துகிறார். இச்சிறுகதையில் நொய்யல் என்ற ஆறு எத்தகைய பாதிப்புக்கு ஆளாகியுள்ளது என்பதை வெளிக்காட்டுகிறது.

"மாட்டுவண்டிகளில் சிலர் கழிவுகளைக் கொண்டுவந்து பாதைகளின் ஓரத்தில் கொட்டிவிட்டுப் போவது சமீபகாலமாய் அதிகரித்திருந்தது. ஆற்றின் கரை என்பது சௌகரியமானது என்பது போல் மழைக் காலத்தில் அவை உருகி ஆற்றில் கலந்துவிடும்."[89]

நொய்யல் சலசலத்து மெல்லச் சாயக் கழிவுகளாய் ஓடிக் கொண்டிருந்தது. இருபுறமும் வறண்ட சாயத்துணுக்குகளாய் மணல் நிறம் மாறி விரிந்திருந்தது" என்று கூறுவதிலிருந்து நொய்யல் என்ற ஆறு சாயக்கழிவால் எத்தகைய நிலைக்கு ஆளாகியுள்ளது என்பதையும், இயற்கையின் பொக்கிஷமான ஆறு, குளங்களை நாம் பாதுகாக்காததால் நாம் எத்தகைய இடர்ப்பாடுகளைச் சந்திக்கின்றோம் என்பதையும் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

'ஈரம்' என்ற சிறுகதையில் மக்கள் வசிக்கும் ஊருக்கு அருகே தொழிற்சாலைகள் இருப்பதால் அதிலிருந்து வெளிவரும் இரசாயனக் கழிவுகள் அங்குள்ளவர்களுக்கு எத்தகைய பாதிப்பை ஏற்படுத்துகிறது என்பதையும் அங்கள்ள ஆறு, குளம் ஆகியவற்றில் ரசாயனக் கழிவு கலப்பதால் அதில் உள்ள உயிர்களும் அழிந்து போகின்றன என்பதையும் அங்குள்ள மனிதர்களுக்கு ஏற்படும் நோய்களையும் தம் சிறுகதையில் சுட்டுகிறார்.

"சாயக் கழிவு மழைத் தண்ணீரோடு கலந்து பதினைந்து இருபது மைல்களுக்குப் பரவ எல்லா சாயமாகிவிடுகின்றன என்று தூரத்து ஊர்க்காரர்களெல்லாம் அலறிக்கொண்டிருந்தனர். வீட்டிற்கு வரும் பூச்சிகளை முதலில் கொசு என்றுதான் நினைத்தோம். அவை கொசுக்களல்ல என்று தெரிவதற்கே பல மாதமாகிவிட்டது. அவை ஏதோ ஒரு வகை பூச்சிகள். ரசாயனப் பூச்சிகள்."[90]

'நொய்யல்' என்ற சிறுகதையில் ராமன் தன் சிறுவயதில் இந்த நொய்யல் ஆறு எப்படி இருந்தது. இன்று தொழிற்சாலைக் கழிவுகளால் ரசயானச் சாக்கடையாகிவிட்டதே என்று வருந்துகிறான். இந்த ஆற்றை கடந்து செல்லும் யாருக்கும் மனம் உறுத்தவில்லையா என்று தன்னையே கேட்டுக்கொள்கிறான். இதே நிலை நீடித்தால் மனிதர்கள் அனைவரும் ஒருநாள் இறக்க வேண்டிவரும் என நினைத்துக் கொள்கிறான். அவை, "இரண்டாம் குடிநீர்த்திட்டம், மூன்றாம் திட்டம் என்றெல்லாம் வந்துவிட்ட பின்பும் ஒரு குடம் நீர் ஒரு ரூபாய்க்கு வாங்கும் கேவலம் குறித்து யாராவது முணுமுணுக்க மாட்டீர்களா? பட்டறைகளின் கழிவுகளின் கிடங்காகிவிட்டது. ஆறு வெவ்வேறு வகையான சாயக் கலவைகள் ஒன்றுசேர்ந்து கறுத்த சாக்கடை போல்

எங்குமாய் வியாபித்து ஓடிக்கொண்டிருந்தது. உடம்பு முழுக்க சொறிபிடித்து அலையும் விநோதப் பிராணி போலாகிவிட்டது நொய்யல்"[91] என்று கூறுவதிலிருந்து ஆற்றுநீர் எவ்வகையில் பாதிப்படைந்து கொண்டிருக்கிறது, நாம் நீர்நிலைகளை பாதுகாக்காது பாழாக்கிக் கொண்டு இருக்கிறோம் என்பதை தம் சிறுகதைகளில் ஆதங்கத்துடன் சுப்ரபாரதிமணியன் சித்தரித்துள்ளமையை அறியமுடிகிறது.

நிலம், நீர், காற்று ஆகியவை மனித வாழ்க்கை இயங்குவதற்கு அடிப்படையானவை. ஆனால் இன்றைய சுற்றுச் சூழல் மாசடைவதால் மக்கள் பல சிக்கல்களை, போராட்டங்களை அனுபவித்து வருகின்றனர். இவை உலகந் தழுவிய சமூகவியல் போராட்டமாக மாறும் என்பதை இவரது சிறுகதைகள் உணர்த்துகின்றன.

**வேலையின்மை**

பொருளாதாரப் பற்றாக்குறை காரணமாக இருப்பது வேலையின்மையே. படித்துவிட்டு எத்தனையோ இளைஞர்கள் வேலையில்லாது கஷ்டப்படுகின்றனர். படிக்கும்போதே இச்சந்தேகம் தொடங்கிவிடுகிறது. சமூகத்தில் நடக்கும் பல பிரச்சனைகளுக்கு வேலையின்மையும் ஒரு காரணமாகிறது. படித்தவனுக்கு வேலையின்மை ஒரு விரக்தியை ஏற்படுத்துகிறது. இதனைச் சுப்ரபாரதிமணியன் பல சிறுகதைகளில் சுட்டிக்காட்டுகிறார்.

'சூழல்' என்ற சிறுகதையில் தங்கவேல் படித்துவிட்டு நல்ல வேலைக்கு காத்திருக்கிறான். ஆனால் கிடைக்கவில்லை. அப்போது வீட்டிலும் அவனுக்கு ஆண்பிள்ளை வேலைக்குச் செல்லாமல் இருக்கிறானே என நச்சரிப்பு தொடங்குகிறது. பணம் கொடுத்தால் தான் வேலை கிடைக்கும் என்ற சூழலை வீட்டில் சொல்கிறான். ஆனால்

பணம் தயார் செய்ய முடியவில்லை. அவன் குடும்பத்தாரால் இதனையே "இனி எம்ளாய்மென்ட் எக்சேஞ்சுக்கு நடக்க வேண்டியதுதா. அந்த ஆபிசர் அப்பாதுரை ஏதாச்சும் பண்ணுவாரா? காசு குடுக்கணும், இல்லாட்டி ஒண்ணும் நடக்காது. டெம்ப்ரவரி போஸ்ட்டுக்கே ஆயிரம் ஆயிரமா கேக்கறாங்க"[92] என்று கூறுவதன் மூலம் சமூக அவலம் வெளிப்படுகிறது. வேலைவாங்க திறமை தேவையில்லை. அரசியல் பலமும், பணபலமும் இருந்தால் போதும் என்ற நிலையை சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதையில் சமூகநிலையை வெளிப்படுத்துகிறார்.

'எல்லோருக்குமான துயரம்' என்ற சிறுகதையில் வேலையில்லாத ஒருவன் தன் குடும்பத்தையும் நடத்தமுடியாமல் அவர்களாலும் வெறுக்கப்பட்டு நண்பர்களின் முன்பும் தலைகுனிந்து நிற்கிறான். வாழ்க்கையையே வெறுக்கும் ஒரு இளைஞனாக மாறிவிடுகிறான். இதனை, "மனநோயாளி மாதிரி ஏண்டா இப்படித் திரியறே... நீ பிரண்ட்ஸ்களோடு தங்கறது சரி... ஆனா வேலையில்லாதவன்னா இப்படித்தா இருக்கணுமா. வாழ்க்கையை நல்லா பார்க்க முடியாதா, கூச்சத்தையோ தாழ்வு மனப்பான்மையையோ விட்டுத் தள்ளு"[93] என்று நண்பன் ஆறுதல் சொல்லுகிறான். இவ்வகையில் வேலையின்மை இளைய தலைமுறையினரை எவ்வளவு மனவிரக்திக்கு ஆளாக்குகின்றது என்றும் எதிர்காலத்தில் மிகப் பெரிய போராட்டம் வெடிக்கும் என்பதையும் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் குறிப்பிடுகிறார்.

**வறுமை**

புறப்போராட்டத்தில் மனிதன் தன் அடிப்படைத் தேவைகளைக் கூட நிறைவு செய்யமுடியாத நிலையில் இருப்பவனை வறுமை

நிலையில் உள்ளவன் என வரையறைச் செய்வர். வறுமையே ஒருவனைத் தவறுசெய்யத் தூண்டுகிறது எனலாம். இவ்வறுமையை வள்ளுவரும்,

“இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு”[94] (குறள்.752)

பொருள் இல்லாதவரை வேறு நன்மை உடையவராக இருந்தாலும் எல்லாரும் இகழ்வார். செல்வரை வேறு நன்மை இல்லை என்றாலும் சிறப்புச் செய்வர் என்கிறார். ஔவையும் ‘கொடிது கொடிது வறுமை கொடிது’ என்கிறார்.

சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வறுமையில் உள்ள கதை மாந்தர்களை, அவர்களின் வாழ்க்கைத்தரத்தினை படம்பிடித்துக் காட்டுகிறார். பெரும்பான்மையான கதைகளில் வறுமை நிலையினை விளக்குகிறார். அவையாவன:

| **சிறுகதை** | **கதைமாந்தர்கள்** |
|---|---|
| 1. வசந்தவிஹார் | சிவராம் |
| 2. ஒரு தற்காலிக உறவு | நடராஜன் |
| 3. மாறுதடம் | சிவக்குமார் |
| 4. அரேபியக் கிராமம் | சொக்கநாதன் |
| 5. கடைசிப் பார்வை | வயதானப் பெரியவர் |
| 6. எல்லையா | எல்லையா |
| 7. நிலை | துரைராஜ் |
| 8. வதை | பொன்னுசாமி |
| 9. வருகை | சுதாகர் |
| 10. வருகை | செல்லம்மா |

போன்ற சிறுகதைகளில் வறுமையால் இப்பாத்திரங்களின் நிலையினைக் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்துகிறார்.

‘வசந்த விஹார்’ என்ற சிறுகதையில் சிவராம் என்ற கதைமாந்தர் தன் வீட்டின் ஒரு பகுதியை வாடகைக்கு விட்டு அதில் வரும் பணத்தில் தன் குடும்பத்தை நடத்துகிறார். அந்த வருமானமே அனைவருக்கும் போதுமானதாக இல்லை. இந்த நிலையில் சிவராமின் மகன் போதைக்கு அடிமையாகி இன்னும் சிவராமிற்கு கஷ்டத்தைக் கொடுக்கிறான். ஒருமுறை ராமகிருஷ்ணன் போதையில் எழாமல் இருக்கிறான். இதனை, “இவனுக்குத் தூக்கமே தெளியலீங்க. ஆஸ்பத்திரிக்குப் போறோம். பயமாயிருக்குங்க. சிவராமிற்கு ஆறுதலாய் வார்த்தைகள் எதுவும் சொல்லத் தோன்றவில்லை. வைத்தியச் செலவிற்கான பணம் பற்றித்தான் யோசனை வந்தது. ஐம்பது ரூபாய் அட்வான்ஸ் வாங்கிப் பாக்கெட்டில் வைத்திருப்பதும் ஞாபகம் வந்தது.”[95]

சிவராம் தான் வைத்திருக்கும் ஐம்பது ரூபாயில் வைத்தியம் செய்யமுடியாது என்று வருந்துவதாக கதை வருகிறது. மருத்துவச் செலவைக்கூட சமாளிக்கமுடியாத குடும்பங்களை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் காட்டுகிறார். இவ்வகையில் வறுமையில் வாடும் மக்களை ஆசிரியர் அடையாளம் காட்டுகிறார்.

‘ஒரு தற்காலிக உறவு’ என்னும் சிறுகதையில் நடராஜன் என்பவர் வயதான பெரியவர். இவர் பிள்ளைகள் இல்லாத நிலையில் தன் மனைவி சிவகாமியுடன் வசித்து வருகிறார். இவர்கள் தனக்குச் சொந்தமான வீட்டை வாடகைக்கு விட்டுவிட்டு தான் ஒரு சிறிய அறையில் வசித்துவருகின்றனர். அந்த வாடகைப் பணத்தில்தான் இவர்களின் மருத்துவச் செலவுக்கு ஆதாரம். இவர் வீட்டில் குடியிருப்பவர் சம்பத் வீட்டின் வசதிபோதவில்லை என்று வேறு வீடு பார்க்கிறார். இதை

அறிந்த நடராஜன் வருத்தப்படுகிறார். இந்த வாடகைப் பணம் கிடைக்காவிட்டால் எப்படி குடும்பம் நடத்துவது என்று கலங்குகிறார்.

"என்னங்க... நான்கூட வேற எடத்துக்கப் போகலாமுன்னு பார்க்கிறேன். நடராஜிற்கு சட்டென முகம் இருண்டுவிட்டது. கலவரச் சூழலை உணர்ந்தவர் மாதிரி ஆகிப்போனார். சொல்லியிருக்க வேண்டாமோ எனப்பட்டது சம்பத்திற்கு."[96]

இவ்வாராக நடராஜனின் குடும்பச் சூழல் அமைந்துள்ளதை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். வயதான முதியவர்கள் சம்பாதிக்கமுடியாத நிலையில் அவர்கள் வாழ்க்கை எவ்வாறு ஓடும் என்பதைச் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் உணர்த்தியுள்ளார். இவரின் பல சிறுகதைகள் வறுமையைச் சுட்டும் விதத்திலேயே அமைந்துள்ளன.

'மாறுதடம்' என்ற சிறுகதையில் சிவக்குமார் என்பவர் தனியார் நிறுவனத்தில் வேலை செய்பவர். முதலாளியிடம் ஏற்பட்ட மனக்கசப்பின் காரணமாக வேலையில் இருந்து நீக்கப்பட்டார். பின்பு எங்கும் வேலையில் சேரமுடியவில்லை. குடும்பமே அவர் ஒருவரின் வருமானத்தைத்தான் நம்பி இருந்தது. பின்பு போதைப்பொருள் கடத்தல் தொழிலில் இறங்கிவிடுகிறார்கள். இதனை,

"எத்தனை பொட்டலம் வேணும்...?"

உட்கார்நதிருந்தவன் காலில் செய்த சிகரெட்டில் உள்ளங் கையிலிருந்த துகள்களை நிரப்பினான். புகை விட்டான்,

"எட்டு..."

"செரி எதுக்கும் ஜாக்ரதை"

பொட்டலமொன்றைப் பிரித்துப் பார்த்து நசுக்கிப் பார்த்தான்."[97]

இவ்வாறு நடராஜன் வேலையில்லாத நிலையில் தவறான பாதையை நோக்கிப் பயணிப்பதை பார்க்க முடிகிறது. வறுமை மனிதனை தவறான பாதைக்கு அழைத்துச் செல்கிறது என்பதையே சுப்ரபாரதிமணியனின் இச்சிறுகதை சுட்டுகிறது.

வறுமை மனிதனை எந்த நிலைக்குத் தள்ளும் என்பதை ஆசிரியர் இக்கதை மூலம் உணர்த்துகிறார். எனவே புறப்போராட்டங்களுள் முக்கியக் காரணமாக இருப்பது இவ்வறுமையே என்பதை உணரமுடிகிறது.

**அதிகார வர்க்கம்**

பணம் படைத்தவர்கள் அவர்களிடம் வேலைசெய்யும் ஏழை மக்களை வாட்டி வதைப்பதும் பதவியில் உள்ளவர்கள் சாதாரண மக்களை துன்புறுத்துவதும் சகஜமாகிவிட்டது. இவ்வகையினரை அதிகார வர்க்கம் என்கிறோம். இவ்வர்க்கத்தினர் தன் பணம், பதவி, பலத்தினை அவர்களின் சுயநலத்திற்கு எவ்வாறு பயன்படுத்துகின்றனர் என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்துகிறார். அவை, ‘எல்லோருக்குமான நேசம்’ என்ற சிறுகதையில் சிவக்கண்ணு பேப்பர் புரக்குபவன். அவன் ரோட்டில் படுத்திருக்கையில் போலீஸ்காரன் ஒருவன் தடியால் அடித்து எழுப்புகிறான். பயந்துபோய் எழுகிறான் சிவக்கண்ணு. ஒரு அலுக்குப் பை வைத்திருக்கிறான். அதில் கொஞ்சம் சில்லரை உள்ளது. அது என்ன கொலுசா எனக் கேட்டு மிரட்டுகிறான் போலீஸ்காரன். இதனைக் கொடு என அப் பையைக் காவல்நிலையத்திற்குக் கொண்டு செல்கிறான். சிவக்கண்ணு நான் என்ன செய்யவேண்டும்? எனக் கேட்க அதற்கு போலீஸ்காரன் இப்பகுதியில் ஒரு காளைமாடு திரிகிறது அதனைப் பிடித்துக்கொண்டுவா எனக் கூறிச்

செல்கிறான். அவை "போலீஸ்காரர் சிவக்கண்ணனின் தலைமுடியைப் பிடித்தார். விர்ரென்று மேலே இழுத்தார். மயிர்க்கால்கள் குத்திட்டு வலி தந்தது அவனுக்கு. அய்யோ என்றான். எந்திரிடா கால்ல வுழுந்ததுனாலே தப்புச்சே... என்னடா போலீஸ்காரன் வந்ததும் என்ன பண்ணணும்னு கேட்டுக்கிட்டு முழங்கால்ல மண்டி போட வேணாமா? சொல்லுங்கசார் செய்யறேன். தெருவுல ஒரு காளைமாடு திரியுது புடுச்சுட்டுவா... பையை ஸ்டேஷனில் வந்து வாங்கிக்கோ"[98] என்றான்.

இவ்வாறு பதவியில் இருப்பதால் அவர்களின் பதவியின் பலத்தை சாதாரண ஏழைமக்களிடம் காட்டுகின்றனர். அவர்களின் வேலைக்கு சிவக்கண்ணு போன்ற மக்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஏழைகளிடம் இருக்கும் பணத்தையும் தட்டிப்பறித்துக் கொள்கின்றனர். எதிர்த்து பேசினால் செய்யாத தவறுக்குத் தண்டனை கொடுக்கின்றனர். இவரைப் போன்ற அதிகாரிகள் இருக்கும்வரை ஏழை மக்கள் நிம்மதியாக வாழ முடியாது என்பதையே சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் சுட்டிக்காட்டுகிறார்.

'புகை' என்ற சிறுகதையில் தர்மராஜ் என்ற முதலாளி தன் நிறுவனத்தில் வேலைசெய்யும் கௌசி என்ற பெண்ணை அடைய நினைக்கிறான். அவர்களின் வறுமையைப் பயன்படுத்திக் கொள்ள நினைக்கும் முதலாளியாக தர்மராஜ் உள்ளான். அவன் நிறுவனத்தில் எந்தப் பெண்ணாக இருப்பினும் அவன் ஆசைக்கு இணங்க வேண்டும். இல்லையேல் அங்கு பணிபுரியமுடியாது. இதனை, "சில்மிஷங்கள் அவளுக்குப் பழகிவிட்டதைப் போல அவள் வேலை செய்த கம்பனிகளில் பல நடந்துவிட்டன. எல்லாவற்றுக்குமாக சகிப்புத்

தன்மையும், செரணையற்றதனமும் வந்துவிட்டது குறித்து அவளுக்கே எரிச்சலாக இருக்கும்."[99]

இவ்வாறு முதலாளி வர்க்கத்தினர் அங்கு பணிபுரியும் பெண்களை எத்தகைய துன்பத்திற்கு ஆளாக்குகின்றனர் என்பதை இவரின் இச்சிறுகதையின் வாயிலாக உணர்த்துகிறார்.

'வருகை' என்ற சிறுகதையில் செல்லத்தாயி என்ற வயதான பெண் அவள் ஊரில் திருவிழா போன்று இருந்தது எதற்கு எனக் கேட்க அங்கு அணுஉலை வரப்போவதால் பிரதமர் வருகைக்காக அந்த திருவிழா. அவர் வரும்போது என்ன பேச வேண்டும், எப்படி பேசவேண்டும் என பாடம் நடத்தப்படுகிறது. ஊர் மக்களுக்கு அங்கு அணுஉலை வருவதில் விருப்பம் இல்லை. இருந்தும் அவர்களால் நிராகரிக்க முடியவில்லை. பிரதமர் வந்து செல்லத்தாயிடம் ஆங்கிலத்தில் நலமா? எனக் கேட்க மொழிபெயர்ப்பு செய்யப்பட்டு அவள் நாங்க என்னைக்கு நல்லாயிருந்தோம் என்று கூற, நல்லாயிருக்கோம் என மொழிபெயர்ப்பானது. என்ன சாப்பாடு? எனக் கேட்க வழக்கம்போல் கேல்வரகு எனக் கூறுகிறாள். கறிச்சோறு என மொழிப்பெயர்ப்பாகிறது. அணுஉலையால் ஒன்றும் கஷ்டமில்லையே? என்று கேட்க கஷ்டம் எனக் கூற இல்லை என மொழிப்பெயர்ப்பானது. அவர் சென்றதும் செல்லத்தாயி வீட்டில் இருந்த குடத்தை ஒருகால் உதைத்துவிட்டுச் சென்றது. மண்குடம் உடைந்து நீர் ஓடியது. இதனை, "பிரதமரிடம் யாரோ போகலாம் என்றனர். சரி என்று கிளம்பினார் செல்லத்தாயிக்கு முன்னால் வலிமையான மனிதர்கள் பலர் நின்று கொண்டிருந்தார்கள். கும்பல் பிரதமருக்குப் பின்னால் போனது. புழுதி அவள் மூச்சைச் சிரமப்படுத்தியது. சட்டென ஒரு பூட்ஸ் கால் தண்ணீர் இருந்த

குடத்தை மிதித்தது. பளாரென்று குடம் உடைந்து நீர் தரையில் இறங்கியது."[100]

அதிகார வர்க்கத்தினர் சுதந்திரமாக நம்மைப் பேசக் கூட விடுவதில்லை என்பதையும், அரசியல் தலைவர்களுக்கு மக்களுக்குமான உரைகள் இச்சிறுகதை போன்றுதான் மொழிப்பெயர்க்கப்படுகிறது என்பதை ஆசிரியர் இச்சிறுகதையின் வழி வெளிப்படுத்துகிறார். மனிதனின் புறப்போராட்டங்களுக்கு அதிகார வர்க்கமும் ஒருவகை காரணமாகின்றன எனலாம்.

**சமூக அவலம்**

புறப்போராட்டத்தில் கல்வியறிவு வளர்ந்துவிட்ட காலங்களிலும் சாதி, மத பேதங்களை ஒழிக்க இயலவில்லை. 'சாதிகள் இல்லையடி பாப்பா' என்று பாரதி முதல் இக்கால கவிஞர்கள் வரை போதித்தாலும் அவை வெறும் ஏட்டுச் சுரக்காயாகவே அமைந்துள்ளது. மனிதனின் போராட்டங்களுக்கு சாதி மத பேதங்களும் காரணமாக அமைகின்றன. இப்பிரிவினைகளால் மனிதன் பல சிக்கலுக்கு ஆளாகிறான் என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

பல கலவரங்களுக்கு இப்பிரச்சனைகளே காரணமாக அமைகின்றன என்பதையும் ஆசிரியர் தம் சிறுகதையின் வழி சுட்டுகிறார். உயர்வு தாழ்வு பிறப்பில் இல்லை மனிதன் செயலில்தான் உள்ளது என்பதை கதைகளின் வழி உணரவைத்துள்ளார் ஆசிரியர்.

'தீட்டு' என்ற சிறுகதையில் சில பிரிவினர் மட்டும் கொண்டாடும் சம்பிரதாயங்கள், திருவிழாக்களில் மேல்சாதியினர் என்று அவர்களுக்கு முன்னுரிமை கொடுப்பது போன்ற காரணங்களால், மாணவர்களிடம்

சாதி என்ற ஒன்றை நாம் விதைக்கிறோம் என்பதையே கதை சொல்லி வாயிலாக ஆசிரியர் குறிப்பிடுகிறார். பள்ளியில் பயிலும் இரண்டு மாணவர்கள் பேசிக்கொள்வது போன்று கதை அமைந்துள்ளது. இருவரும் ஊர் திருவிழாவில் கரகம் ஆடுவதை பார்க்கின்றனர். அவர்கள் வீட்டிலும், கரகம் கீழ்சாதியினர்தான் எடுப்பார்கள் எனப் பேசியதைக் கேட்டு இருவரும் பேசிக்கொள்கின்றனர்.

"கரகாட்டமெல்லா கீழ் ஜாதிக் காரங்க ஆட்டமாமா அப்புறம் நாங்க உங்களவுட தாழ்ந்தவங்களாமா... சும்மா இல்லடா... சொல்லுறாங்க... உன்னெத் தொடக் கூடாதாம்மா... தொட்டாத் தீட்டாமா... ஏதாவது தீட்டு கொணம் நமக்கு வரப்போகுதுன்னு அழுதுட்டாங்கடா"[101] என்று சொல்லி முடித்தான் ஒரு மாணவன்.

வீட்டில் பெரியவர்கள் தான் குழந்தைகள் மனதில் இவைபோன்ற நஞ்சைப் பாய்ச்சுகிறோம். நம்மைப் பார்த்தே பிள்ளைகள் வளர்வார்கள் என்று எண்ணலாம். சாதி என்ற ஒன்றை அந்த குழந்தைகள் மனதிலும் பாய்ச்சுகின்றனர் என்பதைச் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் சுட்டிக் காட்டியுள்ளார்.

'எதிர்' என்ற சிறுகதையில் தன் மதத்தையே பெரிதாக நினைக்கும் ஒருவரை ஆசிரியர் சுட்டுகிறார். சுகந்தி பிரசவத்திற்காக கிறித்துவ மருத்துவமனை ஒன்றில் சேர்க்கிறார் அவள் கணவர். பிரசவித்து வரும் போது அங்கு சில வரையறைக்ள வைத்துள்ளனர். பைபிள் கொடுத்து, பூமாலையை மேரி மாதாவின் மீது போட்டு, மெழுகுவர்த்தி ஏற்றிய பின் செல்லவேண்டும். அவ்வாறு கொடுக்க சுகந்தியின் கணவன் மறுக்கிறார். சுகந்தி அதனை வாங்கி செய்துவிட்டு வருகின்றனர்.

இதனை, "வாங்கின மாலையை வைத்தபடி நின்றேன். சுகந்தி பக்கம் வந்து குழந்தையைக் கொடுத்துட்டு என்னிடம் இருந்த பொருளை வாங்கிக்கொண்டாள். சுகந்தி விறுவிறுவென்று போய் கன்னிமேரிக்கு மாலை போட்டாள் மெழுகுவர்த்தி ஏற்றினாள் வந்து இதில் என்ன இருக்க என்றாள்."[102]

இறைவன் ஒருவன் தான் வணங்கும் முறையும், உருவங்களும் தான் வேறு என்பதை சுகந்தியின் வழியாக ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். அவள் கணவனுக்கு இல்லாத மத நல்லிணக்கம் சுகந்திக்கு இருப்பதை அறியமுடிகிறது.

சுப்ரபாரதிமணியன் சுகந்தியின் வழி மத ஒருமைப்பாட்டைச் சுட்டுகிறார். சாதி பேதம் இல்லாத நாட்டை ஆசிரியர் தம் சிறுகதைகளின் மூலம் தம் தேச ஒற்றுமையை வலியுறுத்தியுள்ளார்.

தமிழ்நாடு மற்றும் இந்தியாவெங்கும் சாதிக் கலவரம், மதம் சார்ந்த கலவரங்கள் குறிப்பிட்ட சிலரால் உருவாக்கப் படுகின்றன. இப் போராட்டங்கள் மக்களைக் கூறுபோட்டு தேசவிரோதச் செயல்களுக்கு வித்திடும் என்பதை ஆசிரியர் எச்சரித்துள்ளார்.

**கலாச்சார சீரழிவு**

இன்றைய சமூக அமைப்பில் பண்பாட்டுக் கலாச்சார சீரழிவு பல புறப் போராட்டங்களுக்கு ஆணி வேராகும். பண்பாடு என்பதற்குப் பண்படுதல், சீர்படுதல், திருந்துதல் என்று பல பொருள் உண்டு. கலாச்சாரம் என்பது ஓர் இனத்தின் வாழ்வோடும், வளர்ச்சியோடும் இணைந்தது. சிறப்பு பண்பு நெறிகளே மனிதர்களை நல்லவர்களாகவும், சமூகப் பொறுப்பானவர்களாகவும் அடையாளப் படுத்துகின்றது.

"பண்புடையார் பட்டுண்டு உலகம் அஃதின்றேல்

மாண்புக்கு மாய்வது மன்"[103] (குறள்.996)

என்கிறார் வள்ளுவர். மக்களின் பண்டைய கால வரலாற்றில் அவர்கள் பயன்படுத்திய கருவிகள் சமூகப் பழக்கம், வழக்கம், நம்பிக்கை, சமயம் முதலியவற்றைப் பண்பாடு என்ற சொல்லால் குறிக்கின்றனர். இத்தகைய பண்பாடு காலத்தால் மாறுபட்டு பின்பு அழித்தே விடுகின்றது.

இத்தகைய கலாச்சார சீரழிவைத் தம் சிறுகதைகளில் சுப்ரபாரதிமணியன் உணர்த்துகிறார்.

'சில வேறு தினங்கள்' என்ற சிறுகதை திருப்பூரைச் சுற்றியுள்ள கிராமங்களில் சேவல் சண்டைக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கின்றனர் என்பதை தம் சிறுகதையில் சுட்டிக்காட்டுகிறார். சேவல் சண்டை ஒரு குடும்பத்தின் கௌரவமாகக் கருதப்படுகிறது. இதனை, "சேவல்கட்டு, கோழிச் சண்டை எனக் கூறுவர். வாரம் இருமுறை என்ற விகிதத்தில் நடக்கும். ஞாயிறும், புதனும் அப்பா தவறாமல் சேவல்சண்டைக்குப் போவார். இதை ஒரு தொழில்முறை மாதிரியே செய்துவந்தார். நாங்கள் வாழ்க்கையை நகரத்தில் தொடங்கியபின் அது ஒரு அனுபவமாகவே போனது என்று அப்பா வருத்தப்படுவார். கால மாற்றத்தால் நம் பழக்கவழக்கங்கள் கூட மாறிப்போகிறது."[104]

இச்சிறுகதையின் மூலம் நம் பழக்கங்கள் மாறி வருகின்றது. அதையே நாம் நாகரிகம் எனக் கூறிக்கொண்டு இருக்கின்றோம். நம் சின்னசின்ன அலச்சியங்களே நம்மை பெரிய இழப்பிற்கு அழைத்துச் செல்கிறது என்பதை இக்கதையின் வழி அறிவுறுத்துகிறார்.

‘கண்ணாமூச்சுகளும் முகமூடிகளும்’ என்ற சிறுகதையில் துளசி தன் சின்னவயதில் தாய் வீட்டில் சோலை போன்று இருந்த விளை நிலங்கள் கொஞ்ச காலத்தில் அவள் திருமணம் ஆகிப் போனபின் மீண்டும் தாய் வீடு வருகிறாள். சோலையாய் இருந்த நிலங்கள் இன்று கட்டிடங்களாக காட்சியளிப்பதைக் கண்டு மனம் வேதனைப்படுகிறாள். இப்படி விளைநிலங்களை எல்லாம் அழித்துக் கொண்டு இருந்தால் மனிதன் எப்படி உண்பான். விவசாயம் என்னவாகும் என்று இக்கதையின் வழி சுப்ரபாரதிமணியன் தன் மன வேதனையை வெளிப்படுத்தியுள்ளார்.

“சமீபத்தில் அப்பாவின் சஷ்டியப்த பூர்த்திக்குச் சென்றிருந்தோம். வீட்டு எதிரில் இருந்த தோட்டம் முழுசாய் அழிந்துவிட்டது. எல்லாம் மனை இடங்களா கான்கிரீட் வனம், நாங்கள் ஓடி ஒளிந்த இடங்கள் பூதங்களாய் விசுவரூபித்து நின்றன.”[105]

இவ்வகையில் விளைநிலங்கள் எல்லாம் மனையிடமாக மாறிவருவதைச் சுட்டுகிறார் ஆசிரியர். இந்த நிலை நீடித்தால் என்னவாகும் என நம்மை எண்ணிப்பார்க்க வைத்திருக்கிறார் ஆசிரியர்.

‘இன்னும் மீதமிருக்கிற பொழுதுகளில்’ என்ற சிறுகதையில் மல்லிகார்ஜுன் செட்டியார் அவ்வூரில் யாருக்கு திருமணம் என்றாலும் மாப்பிள்ளைக்கு டர்பன் வாடகைக்குக் கொடுத்து அதைக் கட்டிவிடுபவர் அவர்தான். அவருக்கு ஒருகாலத்தில் ஏகப்பட்ட கிராக்கி, இன்றோ நாகரிகத்தின் காரணமாக மாப்பிள்ளைகள் யாரும் டர்பன் கட்டுவதில்லை. அவருக்கும் வருமானம் இல்லை. நாகரிகத்தால் அவரின் தொழில் முடங்கிப்போனது என்பதை ஆசிரியர் சுட்டுகிறார்.

"மல்லிகார்ஜுனுக்கு ஏக மரியாதை அட்வான்ஸ் புக்கிங்கில்தான் 'டர்பன்' கிடைக்கும். பத்து முழ டர்பன் துணியை மடித்து, மாப்பிள்ளையின் தலையில் மடிப்பு மடிப்பாய் வெளித்தெரியும் மாதிரிக் கட்டி, ஒரு முனையைத் தொங்கவிட்டு பின் 'சீப்பு' என்ற விரிகோணத்தில், நிற்கும் ஆபரணத்தைக் கட்டி மாப்பிள்ளையை ஒரு பார்வை பார்த்தால்தான் "நம்ம வேலை முடிஞ்சது" என்ற ஆறுதல் மல்லிகார்ஜுனுக்கு இப்போது டர்பன் இல்லாமலேயே பையன்கள் கல்யாணம் செய்துகொள்கிறார்களே என வருத்தமாய் இருந்தது."[106]

சுப்ரபாரதிமணியன் நம் கலாச்சாரம் ஒவ்வொன்றாக அழிந்து வருவதையும் அவை நம் பண்பாட்டை இளைய தலைமுறை அறியாமலே செய்துவிடும் என்பதை தம் சிறுகதைகளில் எடுத்துக் காட்டியுள்ளார்.

தமிழரின் பழக்கவழங்கங்கள், மரபுவழியான சடங்குகள் போன்றவை நமது அடையாளமாகும். மரபுக்குத் தீமை வரும்போது அது பண்பாட்டுச் சீரழிவாக போராட்டமாக மாறுகிறது. எனவே நமது பண்பாட்டைப் போற்றிப் பாதுகாக்கவேண்டும் என சிறுகதைகளின் வழியாகக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

**முடிவுரை**

♦ தனி மனிதருக்கு நிறைவேறாத ஆசைகள், எதிர்பார்ப்புகள், ஏக்கங்கள், எதிர்காலம் குறித்த கனவுகள் அகப் போராட்டத்திற்கு அடித்தளமாய் அமைகின்றன. காதல் திருமணம், குடும்பம், வறுமை, பெண்கள் பிரச்சனைகள் போன்றவை அகப்போராட்டத்திற்கு வித்தாக அமைகின்றன.

♦ தொழில், சாதி, மதம், பண்பாட்டுச் சிதைவு, சுற்றுச்சூழல் போன்றவை புறப்போராட்டத்திற்கு ஆதாரமாய் விளங்குகின்றன.

♦ உழைப்புச் சுரண்டல், ஒடுக்குதல், ஒதுக்குதல் போன்றவை உறவுகளிலோ அல்லது சமூகத்திலோ எழும்போது அவை போராட்டக களமாக மாறும் உண்மையை இவ்வாய்வில் அறியமுடிகிறது.

♦ அகப் போராட்டத்தில் ஒருதலைக் காதல், கணவன், மனைவி உறவில் தருமணம் முதல் முதுமைவரை குடும்ப வாழ்க்கையில் இருவரும் சந்திக்கின்ற போராட்டங்களைப் பல சிறுகதைகள் வலியுறுத்தியுள்ளன.

♦ பெண்களில் குழந்தைப் பேறு இல்லாமை, விதவை, முதிர்கன்னி, பாலியல் தொழில் போன்றவை இச்சமூகத்தில் பெண்கள் சந்திக்கின்ற மிகப்பெரிய சமூக அவலமாக இவ்வாய்வு உறுதிப்படுத்துகிறது. பல சிறுகதைகள் இப் போராட்டக் களத்தைச் சுற்றி அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

♦ இங்கு பெண்ணுக்குரிய போராட்டமும் ஆணுக்குரிய போராட்டமும் வேறு வேறாக அமைந்துள்ளன. திருமணத்திற்கு முன்பும் பின்பும் ஆணை விட பெண்ணே மனதளவிலும் உடலளவிலும் பாதிக்கப் படுகிறாள் என்பதை இவ்வாய்வில் நன்கு அறியமுடிகிறது.

♦ அகப்போராட்டம் தன்னிலிருந்தும் குடும்பத்திலிருந்தும் பெரும்பாலும் உருவாகிறது. ஆனால் புறப்போராட்டம் சமூக அமைபபு, பின்னணி போன்றவற்றால் ஏற்படுவதை உணரமுடிகிறது. இச் சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் போராட்டங்களை பல சிறுகதைகள் மெய்ப்பித்துள்ளன.

♦ புறப்போராட்டத்தில் வறுமை, வேலைவாய்ப்பின்மை, சுற்றுச்சூழல் மாசு, இனக் கலவரங்கள், பண்பாட்டுச் சீரழிவை போன்றவை

பெரும் போராட்டங்களுக்கு வழிவகுக்கின்றது என்பதை ஆசிரியர் பல சிறுகதைகளில் வலியுறுத்தியுள்ளார்.

- நமது பாரம்பரிய நெசவுத் தொழில் அழிந்து வருவதையும் அத் தொழிலில் ஈடுபடும் மக்கள் சவக்குழியில் தள்ளப்படுவதையும் அதனால் பல போராட்டங்களை மக்கள் சந்தித்து வருவதையும் ஆய்வு முடிவுகள் மெய்ப்பித்துள்ளன.

- தமிழரின் பண்பாடு, கலாச்சாரம், பழக்க வழக்கங்கள், சடங்குகள் போன்றவை நமது அடையாளங்களாகும். இதனைப் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டும் எனவும் ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார்.

- தனியொரு மனிதன் தன்னுடைய நிலையில் இருந்து செயல்படுவதற்குத் தடையாக இருப்பதைப் 'போராட்டம்' எனப்படுகிறது. ஆண் - பெண் இருபாலருக்கும் ஒருதலைக்காதல் பெரும் போராட்டமாக அமைகின்றமையை அறியமுடிகிறது.

- புறப்போராட்டமாவது சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் அனைத்தும் புறப்போராட்டமாகும். நட்பு, ஆராய்ந்து கொள்ளவேண்டும் என்பதை வெளிப்படுத்துகின்றன.

- செய்யும் தொழில் நலிவடையும்போது அத்தொழிலை நம்பி வாழும் இனம் அழிக்கப்படுகிறது. சுற்றுச்சூழல் அழுத்தமாக ஆசிரியரால் காட்டப்படுகிறது. சிறு விசயத்தில் நம் கவனக்குறைவே பெரிய பாதிப்பை ஏற்படுத்துகிறது என்பதை வலியுறுத்துகிறார்.

- வேலையின்மை, வறுமை, சாதி, கலாச்சார அழிவு போன்றவையே பெரும் போராட்டங்களுக்கு வழிவகுக்கிறது என்பதை அறியமுடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. இரா.கல்பகம், சமூகவியல், ப.28
2. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.168
3. கிங்களிதேவிஸ், சமுதாயம், ப.44
4. வெ.கனகசுந்தரம், சமூக உறவுமுறைகள், ப.86
5. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.182
6. ஆய்வுக்கோவை, பல்கலைக்கழகத் தமிழாசிரியர் கழகம், ப.260
7. மேலது, ப.261
8. மா.சாலமன், பெண்ணியச் சித்தரிப்புகள், ப.5
9. சோ.கிருஷ்ணராசன், சமூகவியல், ப.38
10. அ.மு.பரமசிவானந்தம், சமூகவியல், ப.13
11. சோ.கிருஷ்ணராசன், சமூகவியல், ப.19
12. வெ.கனகசுந்தரம், சமூக உறவுமுறைகள், ப.89
13. முனைவர் அ.அந்தோனி குருஸ், அசோகமித்திரன் புனைகதைகளில் மனிதன், ப.150
14. மேலது, ப.250
15. ஜார்ஜ் தாம்சன், மனத்தின் தோற்றம், ப.5
16. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம், நூற்பா.571
17. முனைவர் சுந்தரசண்முகனார், மனத்தின் தோற்றம், ப.3
18. எஸ்.இராமகிருஷ்ணன், க்ரியா தமிழ் அகராதி, ப.157
19. முனைவர் சுந்தரசண்முகனார், மனத்தின் தோற்றம், ப.5
20. மேலது, ப.6
21. சுவாமி சித்பவானந்தா, திருவாசகம் ஆசைப்பத்து, 676
22. திருத்தக்கத் தேவர், சீவகசிந்தாமணி, ப.255

23. புலியூர் கேசிகன், புறநானூறு, ப.243

24. இராஜராஜன், உரையாடல் திறன், ப.87

25. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம் உணர்த்தும் மனித உறவுகள், ப.43

26. சுப்ரபாரதிமணியன், சிறுகதை, அப்பா, ப.13

27. பின்னல், ப.825

28. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.133

29. டி.கே.சுப்பிரமணியன் செட்டியார், பிங்கல நிகண்டு, ப.916

30. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.133

31. மேலது, ப.135

32. மேலது, ப.135

33. மேலது, ப.135

34. புலியூர் கேசிகன், சிலப்பதிகாரம், ப.140

35. டி.கே.சுப்பிரமணியன் செட்டியார், பிங்கல நிகண்டு, ப.88

36. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.133

37. மேலது, ப.133

38. மு.இராமலிங்கம், தொல்காப்பியம், ப.182

39. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.153

40. மு.இராமலிங்கம், தொல்காப்பியம், ப.111

41. சுப்ரபாரதிமணியன், கைகுலுக்க நிறையச் சந்தர்ப்பங்கள், ப.66

42. மேலது, ப.72

43. ஒரு சின்ன பிரயாணத்திலும்கூட, ப.113

44. கிணற்றலை, ப.622

45. சில வேறு தினங்கள், ப.37

46. மேலது, ப.39

47. தொலைதல், ப.951

48. மேலது, ப.953

49. திருக்குறள், 1323

50. மேலது, 1330

51. சமாதானம், ப.447

52. திருக்குறள், 1329

53. கரு, ப.715

54. உறுத்தல், ப.809

55. அப்பா, ப.5

56. எஞ்சியது, ப.199

57. சமாதனம், ப.447

58. மேலது, ப.449

59. கூடவரும் அவர்கள், ப.212

60. திருக்குறள், 66

61. புதுவேலை, ப.925

62. யோகம், ப.937

63. திருக்குறள், 131

64. பாதுகாப்பு, ப.793

65. மேலது, ப.795

66. அர்த்தநாரீஸ்வரம், ப.970

67. நீலப்படமும் சுசித்ராவும், ப.1013

68. தொடுகை, ப.785

69. நெருப்புக் கோளம், ப.819

70. ரூபங்கள், ப.847

71. உடல்முடிச்சுகள், ப.884

72. பாதுகாப்பு, ப.794

73. சிதைவு, ப.778

74. புலியூர்கேசிகன், புறநானூறு, ப.353

75. நதிக்கரையும் கான்கிரீட் வனங்களும், ப.161

76. சா.வே.சுப்பிரமணியம், நற்றிணை, ப.55

77. திருக்குறள், 580

78. புலியூர்கேசிகன், புறநானூறு, ப.251

79. அடையாளம், ப.56

80. மேலது, ப.56

81. நசுக்கம், ப.379

82. நவீனம், ப.426

83. சிதறல், ப.455

84. மேலது, ப.459

85. வெடி, ப.103

86. தீயாப் பறவைகள், ப.154

87. இரா.பரமேஸ்வரன், சுற்றுச்சூழல் கல்வி, ப.37

88. சாய்ந்து நிற்க ஒரு மரம், ப.833

89. மணல், ப.870

90. ஈரம், ப.976

91. நொய்யல், ப.1068

92. சூழல், ப.567

93. எல்லோருக்குமான துயரம், ப.1085

94. திருக்குறள், 753

*95. வசந்தவிஹார், ப.243*

*96. ஒரு தற்காலிக உறவு, ப.252*

*97. மாறுதடம், ப.265*

*98. எல்லோருக்குமான நேசம், ப.181*

*99. புகை, ப.377*

*100. வருகை, ப.505*

*101. தீட்டு, ப.343*

*102. எதிர், ப.433*

*103. திருக்குறள், 996*

*104. சில வேறு தினங்கள், ப.39*

*105. கண்ணாமூச்சிகளும் முகமூடிகளும், ப.176*

*106. இன்னும் மீதமிருக்கிற பொழுதுகளில், ப.25.*

# முடிவுரை

கதை கூறுவதும் கதை கேட்பதும் தமிழகத்தின் பாரம்பரியக் கலையாகும். சிறுகதை இலக்கியத்திற்கு இத்தன்மையே தோற்றுவாயாக அமைந்தது. வாய்மொழியாகக்கூறப்பட்ட நிகழ்வுகள் பாத்திரங்களின் துணையுடன் கற்பனையாகக் கதைகளாக உருமாற்றம் அடைந்த செய்தி புலனாகிறது.

சிறுகதைகள் மக்களின் வாழ்வியலோடு தொடர்புடையது. தனிமனிதனின் உணர்வுகளையோ, வாழ்வியல் சமபவங்களோ அறிவுத் தெளிவோடு கலை உணர்ச்சி மிளிர நயமுடன் உரைத்தலே சிறுகதைகளின் பண்புகளாக அறியமுடிகிறது.

சுப்ரபாரதிமணியன் விரிவான தளத்தில் வாழ்க்கையின் மீதும் பிரச்சனைகள் மீதும் கொண்ட உறவுகளை விளக்கியதோடு விளிம்புநிலை மக்கள், பாட்டாளி மக்கள் மற்றும் சுற்றுச்சூழல் குறித்தும் அழகுறச் சித்தரித்துள்ளார்.

சிறுகதைகள், நாவல்கள், நாடகம், பயணக்கட்டுரைகள், குறும்படங்கள், இலக்கிய இதழ், மொழிபெயர்ப்புப்பணிகள், திருப்பூர் முதல் ஹைதராபாத் வரை ஆசிரியர் கண்ட சமுதாய வெளிப்பாடுகள் என பன்முகம் கொண்டவராக சுப்ரபாரதிமணியன் விளங்குவதை இவ்வியலில் காண முடிகிறது.

ஆசிரியரின் தொடக்கக்காலச் சிறுகதைகள் கிராமியச் சூழலை மையமிட்டு அமைந்தன. ஆந்திராவுக்கு இடம் பெயர்ந்தபோது தமிழர் அந்நிய மொழி பேசும் மாநிலத்தில் வசிக்கும்போது சந்திக்கின்ற சிக்கல்கள், மதக் கலவரங்களால் ஏற்படும் விளைவுகள் போன்றவை இவரது கதைகளின் உள்ளடக்கமாக மாறியுள்ளதை உணரமுடிகிறது.

சுப்ரபாரதி மணியனின் கதைகளில் இடம்பெறும் கதைக்கரு, பண்பாட்டுச் சீரழிவு, சாதிமறுப்பு, குடும்ப அமைப்புகள், வறுமை, பெண்களின் மீதான பாலியல் வன்முறை, போன்ற சமூக அவலங்களைப் படைத்துள்ள செய்தி இதன் மூலம் புலனாகிறது.

சிறுகதைகளின் உத்திகளுல் பாத்திரங்களின் உரையாடல் சிறப்பிடம் பெறுகின்றன. இவரது கதைகளில் பெறும்பாலும் கதாசிரியரே கதையைக் கூறி நகர்த்தும் போக்கைப் பின்பற்றியுள்ளமை தெரிய வருகிறது.

இவரது சிறுகதைகளின் தலைப்பு தனித்துவமிக்கதாக அமைந்துள்ளன. சமூகத்திற்கு இவர் கூறவரும் சிக்கல்களுக்கான தீர்வையே தலைப்பிடுவது குறிப்பிடத்தக்கது.

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளின் தொடக்கம், முடிவு ஆகியவை ஆர்வத்தைத் தூண்டுவதாகவும் வாசகர்களைச் சிந்திக்க வைப்பதாகவும் சிறுகதை கூறும் செய்திகளை ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் அமைந்துள்ளன.

கதை சொல்லும் முறையில் ஒரு பாத்திரத்தின் இயல்பான தன்மையை சித்தரிக்கும் போது ஆசிரியர் வருணணை, உரையாடல் போன்றவற்றை மிகுதியாகப் பின்பற்றியுள்ளார். இதன் மூலம் பாத்திரங்களின் பண்பை நன்கறியமுடிகிறது.

சுப்ரபாரதிமணியன் இலக்கிய உலகில் பன்முகம் கொண்டவராக விளங்குகிறார். சிறுகதை எழுத்துப் பணியோடு, நாவல், பயணக் கட்டுரைகள், குறும்படங்கள் தயாரிப்பு, நாடகம், சிறுவர் இலக்கியம்,

மொழிபெயர்ப்புப் பணிகள், இதழியல் பணிகள் என தமிழ் இலக்கிய வரலாற்றில் தனி முத்திரையைப் படைத்துள்ளார்.

சிறுகதைகளுக்கு உளபோராட்டம் அளிப்பதாகப் பாத்திரங்களே திகழ்கின்றன என்பதை சுப்பிரபாரதிமணியன் கதைகளில் படைக்கப்பட்டுள்ள கதைமாந்தர்கள் வழியாக மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். கதை மாந்தர்களின் உணர்வுப் போராட்டங்கள் சமூக அமைப்பை அடையாளம் காண உதவுவதை அறியமுடிகிறது.

கதைமாந்தர்களில் முதன்மைக் கதைமாந்தர்கள் கதை முழுவதும் பங்குபெற்று, பெரும் சவால்களை எதிர்கொள்பவர்களாகவும், குறிக்கோள் மாந்தர்களாகவும், ஆற்றல்வாய்ந்தவர்களாகவும் விளங்குகின்ற உண்மை பெறப்படுகிறது.

முதன்மைப் பாத்திரங்கள் சாதியைத் தகர்த்தெரிபவர்களாகவும், பெண்கள் சமூகத்தில் சாவல்களைத் துணிச்சலுடன் எதிர்கொள்பவர்களாகவும் படைக்கப்பட்டுள்ளனர். மேலும் அடித்தட்டு மக்களை நேசிப்பவர்களாகவும் வறுமையை எதிர்த்து வாழ்க்கையோடு போராடுபவர்களாகவும் இங்கு சித்தரிக்கப் பட்டுள்ளனர்.

நெசவுத் தொழிலை மட்டுமே நம்பி வாழும் மக்கள் ஏழ்மை நிலைக்கு தள்ளப்படுகிற சூழலை காணமுடிகிறது. தமிழகத்தின் பாரம்பரியமிக்க நெசவுத்தொழில் அழிந்துவருவதை இவரது பல சிறுகதைகள் உணர்த்தியுள்ளன.

சமூகக் கட்டுக்கோப்பிற்குக் குடும்பம் என்னும் அலகு மிகவும் செம்மையாக அமைதல் வேண்டும். குடும்ப வாழ்வுச் சிதைவு ஒருவரை

வழிதவறச் செய்துவிடும் என்ற உண்மை சுப்ரபாரதிமணியன் படைப்புகளின் வழி அறியலாகிறது.

பெண்கள் குடும்பச் சூழலில் சிக்கித் தவிப்பவர்களாகவும், பிறந்த வீட்டில் ஆண்களுக்குக் கொடுக்கப்படும் உரிமை பெண்களுக்குக் கொடுப்பதில்லை. ஆதலால் ஒரு குறுகிய வட்டத்திற்கு உட்பட்ட பட்டறிவே பெண்களுக்குக் கிடைக்கின்றது. அதற்கேற்ப அவர்களது மனப்பதிவும் அமைகின்றது என்பதை துரைச்சாமியின் மனைவி மூலம் ஆசிரியர் சிறுகதைகளில் மனம் நெகிழும் வண்ணம் வெளிக்கொணர்கிறார்.

பணம் சம்பாதிப்பது தவறான வழியானாலும் சம்பாதித்தால் போதும் என்ற மனநிலை மனிதர்களிடம் காணப்படுகிறது என்பதை 'நிழல் உறவு' என்னும் சிறுகதை வழி அறியப்படுகிறது.

திருமணத்திற்கு பின் கணவனை இழந்த பெண்களின் நிலை மேலும் தவிப்பிற்குரியதாக அமைந்துவிடுகிறது என்பதை 'செல்லமா' என்ற பாத்திரத்தின் மூலம் அறியமுடிகின்றது.

திருமணங்கள் ரொக்கத்தால் தான் நிச்சயிக்கப்படுகின்றன என்பதை போல வரதட்சனை இன்றிப் பெண்களுக்குத் திருமணம் நடக்காது. வரதட்சனை கொடுக்க இயலாத பெற்றோர்கள் தங்கள் பெண் பிள்ளைகளை வைத்து எவ்வளவு மனவேதனைக்கு உள்ளாகின்றனர் என்பதை 'சுஷ்மா' என்ற கதைமாந்தர் வழி வெளிக்கொணர்கிறார் ஆசிரியர்.

குழந்தைப்பேறு பெண்களுக்கு மிகவும் இன்றியமையாதது. அப்படி குழந்தையின்றி இருந்தால் ஆண்களை விட பெண்கள் அதிகம் பாதிக்கப்படுவர் என்பதையும், இச்சமூகம் அவர்களுக்கு கொடுக்கும்

பட்டங்களையும் ‘யோகம்’ சிறுகதையில் ‘சரஷ்வதி’ யின் நிலையின் வழி அறியமுடிகிறது.

பெண்களைப் போகப் பொருளாகவே பார்க்கும் ஆண்களை ‘இடம்’ என்ற சிறுகதையில், மனைவியாக இருப்பினும் அவளது விருப்பு, வெருப்புகளுக்கு இடம் தருவதில்லை என்பதை ‘ஜோதி’ என்ற கதைமாந்தர் மூலம் சுட்டிக் காட்டுகிறார்.

குடும்பங்கள் சிதையாமல் இருப்பதற்குப் பெண்கள் பெரிதும் காரணமாக இருக்கின்றனர் என்பதை துரைச்சாமியின் மனைவி, கௌசி, செல்லத்தாயி, செல்லம்மா, சித்தாமணி, சந்திரா போன்ற பாத்திரங்களைச் சான்றாகக் குறிப்பிடலாம்.

பெண்களின் பாதிப்புகளை வெகு நேர்த்தியாகச் சித்தரிப்பது சுப்ரபாரதிமணியனின் படைப்பாளுமைக்குச் சான்றாதாரமாகும். மேலும் இப்பாத்திரங்கள்வழி பெண்களின் விழிப்புணர்ச்சிக்கு வழிவகுக்கிறார் அசிரியர்.

இலக்கியப் படைப்பாளரின் வெற்றிக்கு அவர் கையாளும் உத்திகள் மிக முக்கியமான காரணிகளாகும். முகத்திற்குத் திலகம் இடுவதுபோல் படைப்பிற்குப் பெருமை சேர்ப்பது உத்தியாகும். எளிமையான உத்திமுறைக்கு வாசகர்களைக் கவரும் சக்தி உண்டு.

படைப்பாசிரியர் தன் மொழிப் புலமையை விளக்கும் விதத்தில் அடுக்குத் தொடர்கள், இரட்டைக் கிளவி, ஒலிக்குறிப்புச் சொற்களை எடுத்தாண்டுள்ளார்.

பாத்திரங்களின் இயல்பினையும் தன்மையும் குறிக்கப் பழமொழிகளும், சொலவடைகளும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

காலப்போக்கிற்கேற்ப பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். ஒரு பாத்திரம் முன்னால் நடந்த நிகழ்வையோ அல்லது அவ்வவ்போது நடந்த நிகழ்வையோ நினைத்து மனதிற்குள்ளேயே பேசிக்கொள்வதான நனவோடை உத்தியும் இடம்பெற்றுள்ளது.

கதைக்குள்ளேயே மற்றொரு கதையைச் சொல்லும் முறையான கதைக்குள் கதை கூறும் உத்தியும் எடுத்தாளப்பட்டுள்ளது.

நோக்குநிலை ஆசிரியரின் நடை, தன்னோக்கு நிலை, படர்க்கைக் கூற்றுநிலை உத்தியும் இடம்பெற்றுள்ளன.

முருகியல் கூறுகளையும் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறையும் இவரது தனித்த வெளிப்பாட்டு உத்திகளாகும்.

கதைத் தொடக்க உத்தியும், கதை முடிப்பு உத்தியும் கையாளப் பட்டுள்ளன. பிறவற்றை ஒப்பிட்டுக் கூறுவதற்கு உவமைத் தொடர் உத்தி போன்றவையும் காணப்படுகின்றன. உம்மைத் தொடர் உத்தி போன்றவையும் காணப்படுகின்றன. உத்திமுறை பயன்பாட்டை அட்டவணை கொண்டு விளக்கப்பட்டுள்ளது.

தனி மனிதருக்கு நிறைவேறாத ஆசைகள், எதிர்பார்ப்புகள், ஏக்கங்கள், எதிர்காலம் குறித்த கனவுகள் அகப் போராட்டத்திற்கு அடித்தளமாய் அமைகின்றன. காதல் திருமணம், குடும்பம், வறுமை, பெண்கள் பிரச்சனைகள் போன்றவை அகப்போராட்டத்திற்கு வித்தாக அமைகின்றன.

தொழில், சாதி, மதம், பண்பாட்டுச் சிதைவு, சுற்றுச்சூழல் போன்றவை புறப்போராட்டத்திற்கு ஆதாரமாய் விளங்குகின்றன.

உழைப்புச் சுரண்டல், ஒடுக்குதல், ஒதுக்குதல் போன்றவை உறவுகளிலோ அல்லது சமூகத்திலோ எழும்போது அவை போராட்டக களமாக மாறும் உண்மையை இவ்வாய்வில் அறியமுடிகிறது.

அகப் போராட்டத்தில் ஒருதலைக் காதல், கணவன், மனைவி உறவில் தருமணம் முதல் முதுமைவரை குடும்ப வாழ்க்கையில் இருவரும் சந்திக்கின்ற போராட்டங்களைப் பல சிறுகதைகள் வலியுறுத்தியுள்ளன.

பெண்களில் குழந்தைப் பேறு இல்லாமை, விதவை, முதிர்கன்னி, பாலியல் தொழில் போன்றவை இச்சமூகத்தில் பெண்கள் சந்திக்கின்ற மிகப்பெரிய சமூக அவலமாக இவ்வாய்வு உறுதிப்படுத்துகிறது. பல சிறுகதைகள் இப் போராட்டக் களத்தைச் சுற்றி அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

இங்கு பெண்ணுக்குரிய போராட்டமும் ஆணுக்குரிய போராட்டமும் வேறு வேறாக அமைந்துள்ளன. திருமணத்திற்கு முன்பும் பின்பும் ஆணை விட பெண்ணே மனதளவிலும் உடலளவிலும் பாதிக்கப்படுகிறாள் என்பதை இவ்வாய்வில் நன்கு அறியமுடிகிறது.

அகப்போராட்டம் தன்னிலிருந்தும் குடும்பத்திலிருந்தும் பெரும்பாலும் உருவாகிறது. ஆனால் புறப்போராட்டம் சமூக அமைப்பு, பின்னணி போன்றவற்றால் ஏற்படுவதை உணரமுடிகிறது. இச் சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் போராட்டங்களை பல சிறுகதைகள் மெய்ப்பித்துள்ளன.

புறப்போராட்டத்தில் வறுமை, வேலைவாய்ப்பின்மை, சுற்றுச்சூழல் மாசு, இனக் கலவரங்கள், பண்பாட்டுச் சீரழிவை

போன்றவை பெரும் போராட்டங்களுக்கு வழிவகுக்கின்றது என்பதை ஆசிரியர் பல சிறுகதைகளில் வலியுறுத்தியுள்ளார்.

நமது பாரம்பரிய நெசவுத் தொழில் அழிந்து வருவதையும் அத் தொழிலில் ஈடுபடும் மக்கள் சவக்குழியில் தள்ளப்படுவதையும் அதனால் பல போராட்டங்களை மக்கள் சந்தித்து வருவதையும் ஆய்வு முடிவுகள் மெய்ப்பித்துள்ளன.

தமிழரின் பண்பாடு, கலாச்சாரம், பழக்க வழக்கங்கள், சடங்குகள் போன்றவை நமது அடையாளங்களாகும். இதனைப் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டும் எனவும் ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார்.

தனியொரு மனிதன் தன்னுடைய நிலையில் இருந்து செயல்படுவதற்குத் தடையாக இருப்பதைப் ‘போராட்டம்’ எனப்படுகிறது. ஆண் - பெண் இருபாலருக்கும் ஒருதலைக்காதல் பெரும் போராட்டமாக அமைகின்றமையை அறியமுடிகிறது.

புறப்போராட்டமாவது சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் அனைத்தும் புறப்போராட்டமாகும். நட்பு, ஆராய்ந்து கொள்ளவேண்டும் என்பதை வெளிப்படுத்துகின்றன.

செய்யும் தொழில் நலிவடையும்போது அத்தொழிலை நம்பி வாழும் இனம் அழிக்கப்படுகிறது. சுற்றுச்சூழல் அழுத்தமாக ஆசிரியரால் காட்டப்படுகிறது. சிறு விசயததில் நம் கவனக்குறைவே பெரிய பாதிப்பை ஏற்படுத்துகிறது என்பதை வலியுறுத்துகிறார்.

வேலையின்மை, வறுமை, சாதி, கலாச்சார அழிவு போன்றவையே பெரும் போராட்டங்களுக்கு வழிவகுக்கிறது என்பதை அறியமுடிகிறது.

# துணைநூற் பட்டியல்


**முதன்மை சான்றாதாரங்கள் :**

| | |
|---|---|
| *1. சுப்ரபாரதிமணியன்* | *சுப்ரபாரதிமணியன் கதைகள், காவ்யா வெளியீடு, 16, இரண்டாம் குறுக்குத்தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 600 024, முதல் பதிப்பு - 2011.* |

**துணைமைச் சான்றாதாரங்கள் :**

| | |
|---|---|
| *1. செல்வராஜ், கே.பி.கே. (தொ.ஆ.)* | *சுப்ரபாரதிமணியன் படைப்பும் பகிர்வும் கட்டுரைகள், சென்னை - 24, முதல் பதிப்பு - 2005.* |
| *2. சுப்ரபாரதிமணியன்* | *வேட்டை சிறுகதைகள், உயிர்மை பதிப்பகம், அபிராமபுரம், சென்னை - 600 018, முதல் பதிப்பு - 2011.* |
| *3. மேலது* | *பருத்திநகரம், திருப்பூர் படைப்பாளிகள் தொகுப்பு, 8/2635, பாண்டியன் நகர், திருப்பூர் - 641 602.* |

4. அறிவுநம்பி, அ. — இலக்கியங்களும் உத்திகளும், அமுதன் நூலகம், புதுச்சேரி - 605 011, முதல் பதிப்பு, நவம்பர் - 2001.

5. இளம்பூரணர் (உ.ஆ.) — இருபதாம் நூற்றாண்டிற்கான தமிழ் இலக்கணம், சங்கம் பதிப்பகம், சென்னை, பதிப்பு - 1999.

6. கைலாசபதி, க. — சமூகவியலும் இலக்கியமும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, பதிப்பு - 1979.

7. சாமிநாதையர், உ.வே. — புறநானூறு மூலமும் உரையும், தமிழ்ப் பல்கலைக் கழகம், மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர், பதிப்பு - 1985.

8. தாயம்மாள் அறவாணன் — பெண் இன்று, நேற்று, அன்று, பச்சைப்பசேல், 11, இரண்டாம் தெரு, மோகன் நகர், புதுச்சேரி - 5, முதற்பதிப்பு - 2003.

9. பாரதியார் — பாரதியார் கவிதைகள்,
மாணிக்கவாசகர் பதிப்பகம்,
55, லிங்கித் தெரு,
சென்னை,
பதிப்பு - 1991.

10. பிச்சமுத்து, ந. — திறனாய்வும் தமிழ் இலக்கிய
கொள்கைகளும்,
சக்தி வெளியீடு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 5,
மறுபதிப்பு - 1998.

11. பிரேமா, இரா. — பெண்ணியம்,
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
டி.டி.ஐ.
தரமணி,
சென்னை,
முதற்பதிப்பு, அக்டோபர்-1994.

12. மோகன், இரா. — டாக்டர் மு.வ.வின் நாவல்கள்,
சர்வோதயா இலக்கியப் பண்ணை,
மதுரை - 1,
1976.

| | |
|---|---|
| 13. வளவன், சா. | பெண் படைப்பாளர் தம் படைப்புகள், ஏஜி, 189/12A, ஏழாவது முதன்மைச் சாலை, அண்ணாநகர், சென்னை - 600 040, டிசம்பர் - 1995. |
| 14. இராசேந்திரன், ச. | தற்காலச் சொற்களஞ்சியம், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 001, முதற் பதிப்பு, ஜுன் - 2001. |
| 15. கிருஷ்ணமூர்த்தி, ச. | தமிழிலக்கியத்தில் மனிதநேயம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113. |
| 16. சுப்ரபாரதிமணியன், க.நா. | விமரிசனக்கலை, மணிவாசகர் பதிப்பகம், சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 408, |

17. இராமலிங்கம், மு.(தொ.ஆ.) பகிரதன்,
தொல்காப்பியம்,
இராமலிங்கர் பணிமன்றம்,
101, மவுண்ட் ரோடு,
கிண்டி,
சென்னை - 32,
முதற்பதிப்பு - 1994.

18. தமிழ்ப் பேரகராதி
(அ முதல் ன வரை),
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை.

19. முத்தையா, கரு. ஜெயகாந்தன் நாவல்களில்
பாத்திரப் படைப்பு,
முத்துமீனாள் பதிப்பகம்,
தேவகோட்டை,
பதிப்பு - 1980.

20. கீதா, கோ.வெ. தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம்,
அறியகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1979.

21. திருமலை தமிழ் மலையாள நாவல் ஒப்பாய்வு,
ஐந்திணைப் பதிப்பகம்,
279, பாரதி சாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை - 5.

22. ஞானமூர்த்தி, தா.ஏ. — இலக்கியத் திறனாய்வியல், ஐந்திணைப் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை - 5, இரண்டாம் பதிப்பு - 1986.

23. ஞானசம்பந்தன், அ.ச. — இலக்கியக் கலை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிட்., சென்னை - 600 108, ஒன்பதாம் பதிப்பு - 1989.

24. முத்துச்சண்முகம் பெரியகருப்பன், இராம. — அகிலன் கருத்தரங்க ஆய்வுக் கட்டுரை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, பதிப்பு - 1981.

25. ஜெயகாந்தன் — சில நேரங்களில் சில மனிதர்கள், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, முதற்பதிப்பு - 1980.

26. இராமலிங்கம், மா. — நாவல் இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, பதிப்பு - 1972.

27. ஔவையார் — நீதி நூற்கோவை,
இராமசாமி புலவர் சு.அ. — பாரி நிலையம்,
(தெளிவுரை) — 164, பிராட்வே,
சென்னை,
பதிப்பு - 1994.

28. விஜயலெட்சுமி, ஹரி. — இராஜம்கிருஷ்ணன் புதினங்களில்
பெண்மாந்தர் ஓர் ஆய்வு,
என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்,
உடுமலைப்பேட்டை,
முதற்பதிப்பு - 1993.

29. வளவன், சா. — பெண் படைப்பாளர் தம்
படைப்புகள்,
ஏஜி, 189/12A, ஏழாவது
முதன்மைச் சாலை,
அண்ணாநகர்,
சென்னை - 600 040,
டிசம்பர் - 1995.

30. அன்பு கஸ்தூரி — பால்வீதி,
நர்மதா பதிப்பகம்,
தி.நகர், சென்னை,
பதிப்பு - 1986.

31. சண்முகம் — தமிழ் இலக்கியக் கோட்பாடுகள்,
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு - 1977.

32. கிருஷ்ணன் — தமிழ் இனம்,
இளந்தமிழன் பதிப்பகம்,
சென்னை,
1984.

33. சிவஞானம் — எனது போராட்டம்,
இன்ப நிலையம்,
சென்னை,
பதிப்பு - 1974.

34. ஸ்ரீ, பா. — உதட்டோர மின்னல்,
சூரியன் பதிப்பகம்,
பாண்டி பஜார்,
சென்னை,
பதிப்பு - 1989.

35. சுப்ரமணியன், ச.வே. — இளங்கோவின் இலக்கிய உத்திகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 13.

36. இளம்பூரணர் (உ.ஆ.) — தொல்காப்பியம் பொருளதிகாரம்,
கழக வெளியீடு,
திருநெல்வேலி - 5,
முதற்பதிப்பு 1969.

37. இந்திராணி மணியன், — இருபதாம் நூற்றாண்டிற்கான
தமிழ் இலக்கணம்,
சங்கம் பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு - 1999.

38. தமிழண்ணல் (பு.பெ.) சங்க இலக்கிய ஒப்பீடு,
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை,
பதிப்பு - 1974.

39. கல்பகம், இரா. சமூகவியல்,
தமிழ்நாட்டுப் பாடநூல்
நிறுவனம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1973.

40. பக்தவச்லபாரதி, சீ. பண்பாட்டு மானிடவியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
நான்காம் பதிப்பு - 1990.

41. முருகரத்தினம், தீ. புதுமைப்பித்தன் சிறுகதைகள்,
சர்வோதய இலக்கியப் பண்ணை,
மதுரை,
பதிப்பு - 1976.

42. கனகசுந்தரம், வெ. செகசிற்பியன் சமூகப் புதினங்கள்,
வானதி பதிப்பகம்,
சென்னை,
பதிப்பு - 1985.

43. ஆய்வுக் கோவை இந்தியப் பல்கலைக்கழகத்
தமிழாசிரியர் கழகம்,
மதுரை,
பதிப்பு - 2002.

44. அந்தோனி குருசு, அ. அசோகமித்திரன் புனைக் கதைகளில் மனிதன், வள்ளிசுந்தர் பதிப்பகம்,

45. சுந்தரசண்முகனார், முனைவர் மனத்தின் தோற்றம், புதுவைப் பைந்தமிழ் பதிப்பகம், 38, 2, இரண்டாவது தெரு, புதுச்சேரி - 605 011.

46. இராஜராஜன், முனைவர் உரையாடல் திறன், ஹெலன் பதிப்பகம், 2, இராமலிங்க அடிகள் சாலை, சீனிவாசநகர், பெருங்களத்தூர், சென்னை - 600 063.

47. தட்சிணாமூர்த்தி, அ. சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், மங்கையர்கரசி பதிப்பகம், தஞ்சாபூர் - 611 300.

48. உதயகுமார், பா. அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, பதிப்பு - 1989.

*49.* *மறைமலை, சி.இ.* *புதுக்கவிதை முப்பெரும் உத்தி,*
*மணிவாசகர் பதிப்பகம்,*
*பாரிமுனை, சென்னை - 600108,*
*முதற் பதிப்பு - 1985.*

*50. இளங்கோவடிகள்* *சிலப்பதிகாரம்,*
*சோமசுந்தரனார் விளக்கவுரை,*
*கழக வெளியீடு,*
*சென்னை - 1970.*

*51. சுப்ரமணியன், ச.வே.* *சங்க இலக்கியம்*
*(மூலமும் உரையும்),*
*மணிவாசகர் பதிப்பகம்,*
*சிங்கர் தெரு,*
*பாரிமுனை, சென்னை - 600 408,*

***நிகண்டு :***

*1. சுப்ரமணியன் செட்டியார் டி.கே.* *பிங்கலந்தை என்னும் பிங்கல*
*நிகண்டு,*
*இந்து தியாலஜிகல் பிரஸ்,*
*சென்னை.*
*முதற் பதிப்பு - 1890.*

**அகராதிகள் :**

*1. இராமகிருஷ்ணன், எஸ்.* — *க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, 18, பிளாட் எண்.3, தெற்கு அவின்யூ, திருவான்மியூர், சென்னை - 14, இரண்டாம் பதிப்பு - 2008.*

*2. மாதையன், பெ. (ப.ஆ.)* — *பெருஞ்சொல்லகராதி, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 001, முதற்பதிப்பு, மே - 2002.*

**இதழ்கள் :**

*1. சண்முகவேலன்* — *தமிழ்ப் பொழில், கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சாவூர், நவம்பர் - 2006.*

*2. சுப்ரபாரதிமணியன்* — *கனவு, பாண்டியன் நகர், திருப்பூர் - 02, நவம்பர் - 2000.*

*3. குருநாதன், இரா.* — *கரந்தை மலர், மருதம் பதிப்பகம், கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சாவூர், முதற்பதிப்பு - 2002.*

**ஆங்கில நூல் :**

*1.* Baier Kurt & Reschernicholas (Eds) — Value and the Future, The Free Press, Newyork, 1969.

**ஆய்வேடுகள் :**

*1.* இராஜசேகரன், வை. — திலகவதியின் பத்தினிப்பெண் - ஓர் ஆய்வு, ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி - 3, டிசம்பர் - 2007.

*2.* கூ.இராஜலெட்சுமி — சோலை சுந்தரபெருமாளின் படைப்புகளில் மண்ணும் மக்களும், முனைவர்பட்ட ஆய்வேடு, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி - 3, மே - 2009.

*3.* பெருமாள், பே. — சோ.தர்மன் படைப்புகளில் சமூகச் சிந்தனைகள், முனைவர்பட்ட ஆய்வேடு, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், தூத்துக்குடி, அக்டோபர் 2008.

*4. பின்ஸ்டோனி, த.* *வண்ணதாசன் சிறுகதைகளில்*
*மனிதநேயச் சித்தரிப்பு,*
*முனைவர்பட்ட ஆய்வேடு,*
*பாரதிதாசன் பல்கலைக் கழகம்,*
*திருச்சி - 17,*
*ஏப்ரல் 2011.*

# சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் அகப்புறப் போராட்டச் சித்தரிப்பு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேட்டு

ஆய்வாளர்
**ரா.ராமேஸ்வரி**
பதிவு எண்.0543/2012

நெறியாளர்
முனைவர் **கா.பாஸ்கரன்**
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி - 3.




**அழகப்பா பல்கலைக் கழகம்**
(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA:3.64) தகுதி பெற்றது)
காரைக்குடி - 630 003.
தமிழ்நாடு - இந்தியா

**மே - 2018**

இயல் – 5

# அகப்புறப் போராட்டம்

## பொருளடக்கம்

9. முதிர் கன்னி

- ♦ வறுமையால் திருமணம் ஆகாத பெண்
- ♦ ஊனம் உற்ற பெண்
- ♦ அழகற்ற தோற்றம் உடையவர்கள்

10. மகப்பேறின்மை

11. பரத்தையர்

- ♦ காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள்
- ♦ மனநிலை சரியில்லாத பெண்கள்
- ♦ வறுமையால் பாலியலுக்குத் தள்ளப்பட்டவர்கள்
- ♦ வேலைக்குச் செல்லும் பெண்கள்

12. புறப் போராட்டம்

- ♦ சமுதாய உறவு
- ♦ நட்புறவு
- ♦ நட்பின் மேன்மை
- ♦ இலக்கியங்களில் நட்பு
- ♦ உழைப்பின் சிறப்பு
- ♦ தொழில் போராட்டம்
- ♦ கலவரம்
- ♦ சுற்றுச்சூழல்
- ♦ சுற்றுப்புறச் சூழ்நிலை
- ♦ வேலையின்மை
- ♦ வறுமை
- ♦ சாதி – மதம்

13. கலாச்சாரச் சீரழிவு

14. முடிவுரை

15. சான்றெண் விளக்கம்

# அகப்புறப் போராட்டம்

## முன்னுரை

மனிதன் தன் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களால் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகின்றான். தன் அக வாழ்விலும், புற வாழ்விலும் ஏற்படும் சிக்கல்களுக்குத் தொடர்ந்து தீர்வுகாண முற்படுகின்றான். இதனால் மனிதர்களுக்கு வாழ்க்கையே போராட்டக் களமாக மாறிவிடுகிறது. பண்டைத் தமிழர் அகம் என்று வழங்கிய காதல் வாழ்க்கையை இன்று தனி வாழ்க்கை என்ற சொல்லால் குறிக்கின்றனர். 'புறம்' என்று வகுத்ததற்கு இணையான சொல்லாக பொது வாழ்க்கையைக் குறிப்பிடுகின்றனர். ஆதலின் அகம், புறம் என்பன முறையே இன்று தனி வாழ்க்கை, பொது வாழ்க்கை என்ற சொற்களால் வழங்கப்படுவதை அறியமுடிகிறது.

சமூகத்தில் காணப்படும் இக்கட்டமைப்பு பல்வேறு முரண்களால் ஆனது. தனது தேவைகளை நிறைவேற்றுவதற்கு மனிதன் பல்வேறு போராட்டங்களை, சிக்கல்களைத் தொடர்ந்து சந்திக்க நேரிடுகிறது. குடும்ப வாழ்க்கையிலும், குடும்பம் தவிர நிறுவனம் சார்ந்த பொது வாழ்க்கையிலும் போராட்டக் களங்கள் மிகுந்து காணப்படுகின்றன. இதனைச் சிறுகதை இலக்கியங்கள் சிறப்பாகச் சித்தரிக்கின்றன. ஆய்வுக்குரிய சிறுகதைகளில் குடும்பம், கணவன், மனைவி, குழந்தைகள், பெற்றோர்கள் போன்றோர் தொடர்புடைய சிக்கல்களை அகப் போராட்டம் எனவும், குடும்பம் அல்லாத பணிபுரியும் இடங்கள், தொழில், சுற்றுச்சூழல், சாதி, மதம், அரசியல், சமூகச் சடங்குகள், கலவரங்கள் போன்ற மனிதனின் புற வாழ்க்கையோடு தொடர்புடையவை புறப் போராட்டம் எனவும் இவ்வாய்வுப் போக்கு அமைந்துள்ளது. இவ்விரு போராட்டங்களில்

ஆசிரியர் உணர்த்தும் சமுதாயக் கருத்துக்களை இவ்வியலில் விரிவாக ஆராயப்படுகிறது.

இவ்வியலில் சமூகவியல் விளக்கம், தனிமனிதன் சமூகம் தொடர்பு, மனித உறவுகள், மானுடச் சிக்கல்கள், போராட்டம் விளக்கம், வகைகள், அகப்போராட்டம் அதன் சிறுகதை வகைகள், புறப்போராட்டம், இதற்குக் காரணமாக அமையும் சிறுகதைகளின் வகைகள் போன்றவை ஆய்வுக்குரிய சிறுகதைகளோடு ஒப்பிட்டு ஆய்வு செய்து மெய்ம்மைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

தமிழர் தம் வாழ்க்கையை அகம், புறம் என இரண்டாகப் பகுத்துள்ளனர். காதல் வாழ்க்கையை அகமென்றும், காதல் தவிர்த்த பிறவற்றைப் புறமென்றும் அமைத்துக் கொண்டனர். ஒத்த தலைவனும் தலைவியும் தாம் எதிர்ப்பட்டு தம்முள் கூடித் துய்த்த இன்பத்தைப் பிறருக்குக் கூறமுடியாத உணர்வின் நிலையை அகம் என்கிறது. புறம் என்பது வீரம், கொடை போன்றவற்றைக் கூறுவர்.

கதைமாந்தர் படைப்பாலும் சிறுகதையில் கருவிற்கு வலிமை ஏற்படும். சிறுகதைகளில் கதைக் கரு அழுத்தம் பெறும் வகையில் கதைமாந்தரின் படைப்பு அமைந்துள்ளது. படைப்பாசிரியர் தன் மொழிப் புலமையை விளக்கும் விதத்தில் அடுக்குத்தொடர், இரட்டைக்கிளவி, ஒலிக்குறிப்புச் சொற்களை எடுத்தாண்டுள்ளார்.

பாத்திரங்களின் இயல்பினையும் தன்மையையும் குறிக்கப் பழமொழிகள், நனவோடை போன்ற உத்திமுறைகளையும் பயன்படுத்தியிருக்கிறார்.

இவருடைய சிறுகதைகளில் தலைப்பைப் படித்த உடனேயே அவை கதையின் ஒட்டுமொத்தத் தன்மையை விளக்குவதாக அமைந்திருப்பது தனிச்சிறப்பாகும். 'நிழல் உறவு' என்ற சிறுகதையில் தன் நிழல் போன்று கூட வருவது பணமே என மனிதன் நினைக்கின்றான் என்பதை இக்கதையில் சுட்டியிருக்கிறார். 'சிதறல்' என்ற சிறுகதையில் தொழில் சிதைவையும், 'நவீனம்' என்ற சிறுகதையில் நாகரிக மாற்றத்தையும் அழுத்தமாகச் சித்தரித்துள்ளார்.

முற்போக்கு பெண்ணியக் குழுக்கள், அறிவு உழைப்பில் ஈடுபடும் பெண்மணிகளின் உரிமைகளில் காட்டுகின்ற அக்கறையை, வறுமையில் இருக்கும் ஏழைப் பெண்களின் நிலையை இவரின் சிறுகதைகளில் தனித்து ஆய்வு செய்வதற்கு இவ்வாய்வு களம் அமைத்துக் கொடுக்கிறது.

**சமூகவியல்**

சமூகவியலின் தோற்றம் பற்றி இரா.கல்பகம் பின்வருமாறு கூறுகிறார். "சமூகவியல் அகஸ்டே காம்டே (Auguste comte) என்னும் பிரான்ஸ் தத்துவ சமூகப் பேரறிஞரால் 1839 ஆம் ஆண்டில் முதன் முதலாக தோற்றுவிக்கப்பட்டது. சமூகவியல் அண்மையில் தோன்றியதால் உலகிலுள்ள மற்ற இயல்களைக் காட்டிலும் இளமையானது. இச்சொல் சமூகம் + இயல் என்னும் சொற்களின் சேர்க்கை ஆகும். ஆதலால் இலக்கண முறைப்படி அறிவியல், சமூகவியல் என்று கூறப்படுகின்றது"[1] என்கிறார்.

**சமூகம் அமைப்பு**

ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் நீண்ட காலமாக ஒன்று சேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக் கொள்ளும் அமைப்பே சமூகம் எனப்படும். ஒரு குழுவாகக் கூடி வாழும் மக்கள் கூட்டமே

சமூகம் என்பது இதனால் பெறப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கின்ற சிக்கலான சமூக உறவு முறைத் தொடர்புகளைத்தான் சமூகம் என்பர். மனிதன் கொள்கின்ற தொடர்புகளெல்லாம் சமூகத் தொடர்பு ஆகிவிட்டது. சமூகம் என்பது புலனாக உள்சார்புடைய கருத்தியல் பொருள் ஆகும்.

சமுதாயம் என்பது "ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மனித இனத்தவர் தங்கள் தேவைகளை நிறைவு செய்துகொள்ள ஏற்படுத்திக்கொண்ட ஒரு கூட்டமைப்பு ஆகும். ஒரு சிறிய நிலப்பரப்பின் ஒரு பொது வாழ்க்கை வழியைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் மக்கள் தொகுதியே சமுதாயம் எனப்படும். இது மக்கள் ஒன்றுகூடி ஒன்றுபட்ட எண்ணத்துடன் ஓர் இடத்தில் வாழும் அமைப்பைக் குறிக்கும்"[2] என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகின்றது. சமூகக் கட்டமைப்பில் இதனை அடித்தளமாகக் குறிப்பிடலாம்.

**சமூகம் பற்றி அறிஞர்கள் கருத்துக்கள்**

கூட்டமாக வாழும் மக்கள் வாழ்க்கை முறைகளை அறிஞர்கள் பலர் விளக்கியுள்ளனர். கிங்சுலி தேவிசு என்ற அறிஞர் "சமுதாயம் சமூக வாழ்க்கையின் அனைத்து நிலைகளையும் கொண்டிருக்கின்ற சில நிலப்பகுதியில் உள்ள குழுவைக் குறிப்பதாகும்"[3] என்று கூறுகிறார்.

"சமூக உறவுமுறைகள் சமூகத்தை உருவாக்குகின்றன. ஒத்த தன்மைகளையும், பொதுவான தன்மைகளும், கூட்டுறவும்தான் சமூகத்தின் அடித்தளங்கள் ஆகும். ஆகவே சமூகம் என்பது ஒரு குழுவாகச் சேர்ந்து வாழும் மக்கள் அமைப்பே ஆகும்"[4] என்கிறார் திருமதி வெ.கனகசுந்தரம்.

"ஒரு குறிப்பிட்ட எல்லைப் பகுதியில் மிகுதியான காலம் வாழ்கின்ற மக்கள் பொதுவான கருத்துக்கள், பரம்பரைக் கருத்துக்கள், ஒருவரோடு ஒருவர் தோழமை உணர்வுடன் பழகுதல் போன்ற பல சமூகப் பண்புகளை வளர்த்துக் கொள்ளுதல் தவிர்க்க முடியாததாகிறது. இவ்வாறான சமூக வாழ்க்கையும் குறிப்பிட்ட பொதுவான பகுதியுமே சமுதாயத்தை உருவாக்குகின்றன"[5] என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகின்றார்.

**தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பு**

சமூகத்தில் தனிமனிதன் ஓர் அங்கம். ஆதலால் சமூக உறவுகள் தனிமனிதரது பங்கையும் சமூக அமைப்பையும் கலைஞன் நுணுக்கமாக அணுகுதல் வேண்டும். "ஒரு படைப்பாளி எந்த நிகழ்ச்சியைப் புதினமாகப் படைக்க விழைகிறானோ அந்த நிகழ்ச்சியின் பொதுப் போக்கையும், அதற்குரிய இயக்கத்தையும் தனி நிகழ்வுகளின் பின்னின்று இயங்கும் சமூக வலிமைகளையும் விளங்கிக் கொள்ளுதல் வேண்டும்"[9] என்பர் சோ.கிருஷ்ணராசர்.

மனிதனை இலக்கியம் சமூகத்தின் அடிப்படை அலகாகப் பார்க்கின்றது, "மனிதனை சமூகவியல்புடைய விலங்கு என்பர். மனிதன் விலங்கிலிருந்து தோன்றினான் என்பர். மனிதனை 'மா' வினின்று பிரித்துக் காட்டவே சமூகவியல்புடைய விலங்கு என்னும் சொற்றொடர் வழங்குகின்றது. எனவே மனிதனை விலங்கினத்திலிருந்து பிரிப்பதே இந்தச் சொல்தான் என்பதை உணர வேண்டும்"[10] என்கிறார் அ.மு.பரமசிவானந்தம்.

சமூகம் என்பது மனிதனால் உருவாக்கப்பட்டது. சமூக நிறுவனங்களும் மனிதனால் உருவாக்கப்பெற்றவை "மனிதனைப்

பற்றியும், அவனது ஆக்கங்களையும் நடத்தையை பற்றியும் மானுடவியல் விரிவாக ஆராய்ந்துள்ளது. தனிமனிதன் அன்றி மானுடக் குழுக்கள், இனங்கள், சமூகங்கள் பற்றிய ஆய்வுத் துறையாக மானுடவியல் அமைகின்றது. அது மனிதனைச் சமூக மனிதன் என்ற நிலையில் வைத்து ஆராய்கிறது."[11] சமூகத்தில் மனிதன் எவ்வாறு சூழலுக்கு ஏற்ப நடந்து கொள்கிறான் என்பதை இலக்கியங்கள் அந்தந்தக் காலத்தில் பதிவு செய்கின்றன.

"வாழ்க்கையைப் படைத்துக் காட்டுவது இலக்கியம். அந்த வாழ்க்கையைச் சித்தரிப்பதும் ஒரு சமூக நிகழ்ச்சிதான். இதை அறிகின்றபொழுது இலக்கியத்திற்கும், சமுதாயத்திற்கும் இடையே அமைந்துள்ள உறவு தெளிவாகும்"[12] என்கிறார் டாக்டர் திருமதி வெ.கனகசுந்தரம்.

இலக்கியத்தைப் படைக்கின்ற படைப்பாளன் சமுதாயத்தின் ஓர் உறுப்பினராக நின்றே படைப்புத் தொழிலைச் செய்கின்றான். பணம் படைத்தவன், பதவியில் இருப்பவன், பண்பில் உயர்ந்தவன் எனப் பல்வேறுபட்ட மனிதர்கட்கும் சமுதாயத்தில் ஓர் உயர்நிலை இருக்கின்றது. அதைப் போலவே படைப்பாளனுக்கும் சமுதாயத்தில் ஓர் உயர்நிலை உண்டு, சமுதாயத்தில் இன்று ஓர் உயர்ந்த மதிப்பையும், உரிய இடத்தையும் பெற்றே அவன் விளங்குகின்றான். இந்த உயர்வு அவனுக்குத் தன் பார்வை பட்டுத் தெறிந்த அறிவினால் கிடைத்த உயர்வாகும். அறிவுடையோனாறு அரசுஞ் செல்லுமாறு போலவும் பண்புடையார் பட்டுண்டுலகம் போலவும் இஃது ஓர் உயரிய சிறப்பாகும். அனால் எழுத்தாளன் எழுதுவது ஏதேனும் ஒருவகையில் சமுதாயத்தை நோக்கியதாகவே அமைந்துள்ளது.

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகள் சமுதாயக் கூர்மையும், சிக்கல்களைக் கண்டறிந்து படைப்பாக மாற்றும் சிறப்பும் கொண்டவை. தனிமனிதனுக்கும் சமுதாயத்தில் தவிர்க்க இயலாத உணர்வுப் பூர்வமான தொடர்பையும் நன்கு விளக்கியுள்ளது.

சமுதாய விலங்காகிய மனிதன் வாழ்வில் சக மனிதர்களோடு கலந்து வாழ்கிறான். தன்னலத்தை மறந்து பொதுநலத்தைப் பேணிக் காத்து ஒற்றுமையுடன் வாழ முடியாத நிலையும் சமுதாயத்துடன் நல்லுறவு கொள்ளமுடியாத நிலையும் இன்று காணப்படுகின்றது. மக்களிடையே காணப்படும் முரண்பாடுகளுக்கு சில கூறுகள் காரணங்களாக அமைகின்றன. "சாதிசார் பெண்ணியம், தொழிலியல் அமைதியின்மை, குற்றமும் அறநெறிப் பிறழ்வும் ஆகியவை பெரும் சமூகப் பிரச்சினைகளில் சிலவாகும்"[13] என்கிறார் முனைவர் அ.அந்தோனிகுருசு.

**மனித மனஙங்கள்**

சமூக உளவியல் அறிஞர் எர்க்ஃபிராம், மக்களுடைய குண இயல்புகளின்படி ஆராய்ந்து மனிதர்களை நான்கு வகையாகப் பாகுபாடு செய்துள்ளார். அவையாவன, "இணக்க உணர்வினர், சுரண்டல் உணர்வினர், பதுக்கும் இயல்பினர், சந்தை வயதினர் என்பனவாகும். இந்நான்கு குணங்களும் அனைத்து மனிதரிடமும் கலந்து இருக்கும்"[14] என்பது அ.அந்தோனிகுருசு என்பவரின் கூற்றாகும். மேலும் மனிதர்களை பற்றிக் கூறும்போது,

" ♦ ஆதிக்க மனோபாபம்
♦ சீரழிக்கும் மனோபாபம்
♦ சூழலுக்கேற்ப மாறிக்கொள்ளும் மனோபாவம்"[14]

என மனித மனங்களைக் கொண்டு மனிதர்களை வகைப்படுத்துகிறார்.

“மனிதர்களின் இருப்பை அவர்களது உணர்வுகள் தீர்மானிக்கவில்லை. ஆனால் அதற்கு மாறாக அவர்களது சமூக இருப்பே அவர்களது உணர்வுகளைத் தீர்மானிக்கிறது”[15] என்று ஜார்ஜ் தாம்சன் குறிப்பிட்டுள்ளார். மனிதன் மனிதனாக வாழ அவனுடைய மனமே அடிப்படையாகக் காரணமாக விளங்குவதை அறியமுடிகிறது.

மனித மனத்தில் தோன்றுவதுதான் மனிதநேயம். “ஆறறிவதுவே அவற்றொடு மனமே”[16] என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இதற்கு அடிப்படை மனம் ஆகும். மனிதன் என்ற சொல்லின் அடியாக மனம் என்ற சொல் தோன்றியிருக்க வேண்டும். மனத்தை உடையவன் மனத்தன் என்றிருந்து, பின்பு மனிதன் என்று ஆகியிருக்கலாம். மானிடம் என்றும் ஆகியிருத்தல் வேண்டும். மனித மனத்துக்கு உரிய பண்புகள் இல்லையெனில் உருவத்தில் மட்டுமே மனிதனாகவும், உள்ளத்தில் விலங்காகவும் மதிப்பீடு செய்யப்படுகிறான்.

“மனம் திருந்தின் இனம் திருந்தும்
இனம் திருந்தின் நாடு திருந்தும்
நாடு திருந்தின் உலகமே திருந்தும்”[17]

உலகம் திருந்தும் போது தான் மனிதநேயம் சிறக்கும். உலகம் திருந்துவதற்கு அடிப்படை ஒவ்வொரு தனி மனிதனின் மனமேயாகும். மனம் என்பதைக் குறிக்க “நெஞ்சம், உள்ளம், சிந்தை, சித்தம், அகம், இதயம்”[18] போன்ற சொற்கள் தமிழில் வழங்கப்படுகின்றன.

இந்திய தத்துவவாதிகள் “மனம், புத்தி, அகங்காரம், சித்தம்” என நான்கு வகையாகக் கூறுவர். “உளம் ஒரு தனிப் பொருள் அன்று. உயிரி வளர்ச்சி பெறுங்கால் பல படிகளில் காணப்படும் தொழிலே உளம் என்றும், அதனை வெளியிலிருந்து வரும் தூண்டல்களுக்கு

இயைத்துலங்கும் தொகுதியே மனம்"[19] என்றும் உளவியல் அடிப்படையில் மனம் என்பதற்கு முனைவர் சுந்தரசண்முகனார் குறிப்பிடுகிறார்.

ஐம்பொறிகளான மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து சுரப்பிகளும் தசையும் தண்டுவடத்தின் வாயிலாக மூளையோடு தொடர்பு கொள்கின்றன. அதுபோலவே மூளையும் நேராகத் தொடர்பு கொள்ளாமல் தண்டுவடத்தின் வாயிலாகவே பொறிகள், சுரப்பிகள் முதலியவற்றோடு தொடர்புகொள்கிறது. மூளையின் கீழ் தண்டுவடம் உள்ளது. தண்டுவடமானது பொறிகளில் இருந்து மூளைக்கும், மூளைகளில் இருந்து பொறிகளுக்கும் செய்திகளை வாங்கி அனுப்புகிறது. எனவேதான் தண்டுவடத்தை பல மாறி வினைகளின் இருப்பிடம்"[20] என்பர் அறிவியலார். இக்கருத்தை மாணிக்கவாசகர் திருவாசகர் திருவாசகத்தில்,

"மெய்ப்பால் நரம்பு கயிறாக
மூளை என்பு தோல் போர்த்த"[21]

என்றும்,

"என்பினை நரம்பிற் பின்னி
உதிரம் தோய்ந்து இறைச்சி மெத்திப்
பின்புறத் தோலைப் போர்த்து
மயிர்புறம் பொலிய வேய்ந்திட்டு
ஒன்பது வாயில் ஆக்கி
ஊர்பயில குரம்பை செய்தான்
முன் பெருந்தச்சன் மருள என்றான்"[22]

என்று திருத்தக்கத் தேவர் சீவகசிந்தாமணியிலும் கூறியுள்ளார். இக்கால அறிவியல், உளவியல் கருத்துகள் தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுக்கு

முன்பே தமிழர்கள் ‘நரம்பின் இயக்கமே மூளை’ என்ற கருத்தை கூறி இருப்பது வியக்கத்தக்கதாகும். எனவே மனம், அகம் என்பதை ஒன்றாகக் கருதலாம். மூளையின் இயக்கமே மனமாகும்.

சிறுகதை ஆசிரியர்கள் இயல்பான மனித மனத்தைத் தங்கள் கதைகளில் இடம்பெற்றுள்ள பாத்திரங்களின் வழியே சித்தரிக்கின்றனர். குடும்ப வாழ்க்கையில் மனதைச் செம்மைப் படுத்தியவர்களே வெற்றியடைகின்றனர். சிக்கல்களும், போராட்டங்களும் மனிதனின் வெற்றிக்குப் படிக்கட்டுகள் என்பதை உணர்த்தவே சிறுகதைகள் படைக்கப்படுகின்றன. சுப்ரபாரதிமணியனின் சிறுகதைகள் பலவும் இவ்வகையைச் சார்ந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

இயற்கைப் படைப்பின் மணிமுடியாக விளங்குபவன் மனிதன் தனக்கேயுரிய சிறப்புப் பண்புகளாலேயே மனிதன் பிற விலங்குகளின்றும் வேறுபடுகிறான். அவனுடைய அகமே அவ்வேறுபாட்டை உருவாக்குகின்றது. சமுதாய விலங்காகிய மனிதன் சகமனிதர்களோடு கலந்து வாழும்போது தன்னலத்தை ஓரளவு புறக்கணித்துப் பொதுநலத்தைப் பேணவேண்டியவனாகிறான். உள்ளத்தின் கட்டளைப்படி நடக்கும் மனிதன் தன் இனம், தன் நாடு, தன் மொழி, தன் உறவு என வாழாமல் “யாதும் ஊரே யாவரும் கேளிர்” என்ற உயர்ந்த எண்ணத்தோடு வாழ வேண்டும். இவ்வாறு வாழ அவன் மனதில் அன்பு என்ற உணர்வு வேண்டும். அந்த அன்புணர்வு மாறுபடும்போதுதான் அவனது வாழ்க்கை பல்வேறு போராட்டங்களுக்கு வழியாகிறது.

**மனிதச் சிக்கல்கள் அமையும் முறை**

பொதுவாக மனிதனை உலுக்கும் சிக்கல்களை இராசராசன் பத்து வகையாகப் பிரித்துக் கூறுகிறார்.

“ 1. காதல் சிக்கல்

2. திருமணச் சிக்கல்

3. மகப்பேறின்மை சிக்கல்

4. உணவுக்கான சிக்கல்

5. இருப்பிடச் சிக்கல்

6. பணச் சிக்கல்

7. பகைமைச் சிக்கல்

8. நட்புச் சிக்கல்

9. மருத்துவச் சிக்கல்

10. வேலைவாய்ப்புச் சிக்கல்”[22]

என்பனவாம்.

மானுட வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களை வாழ்க்கைப் போராட்டம் எனக் கூறினால் அதனை அகப்போராட்டம், புறப்போராட்டம் என இருவகைப்படுத்தலாம். பிறப்பு முதல் இறப்பு வரை போராட்டங்களை வெற்றி கொள்வதே மனிதனுக்கு பெரும் சவாலாக அமைகிறது. இதனைச் சுப்ரபாரதிமணியன் பல சிறுகதைகளில் உணர்வுப் போராட்டங்களை நன்கு சித்தரித்துள்ளார்.

இப்போராட்டங்களை இவ்வாய்வில் அகப்போராட்டம், புறப்போராட்டம் என இருவகைப்படுத்தி ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**போராட்டம் விளக்கம்**

சமூகத்தில் தனிமனிதருக்கோ, குழுவினருக்கோ அடிப்படை உரிமைகள் மறுக்கப்படும் பொழுது அழுத்தம் அதிகரித்து நாளடைவில் போராட்டமாக உருமாற்றம் பெறுகின்றது. தனிமனிதருக்கு நிறைவேறாத ஆசைகள், எதிர்பார்ப்புகள், ஏக்கங்கள், எதிர்காலம் குறித்த

கனவுகள் போன்றவை மனத்தளவில் அகப் போராட்டமாக வெடிக்கின்றன. காதல், திருமணம், கணவன் மனைவி உறவு, குடும்ப வாழ்க்கை, வறுமை, வேலைவாய்ப்பின்மை, மகப்பேறின்மை, விதவை, முதிர்கன்னி போன்ற சிக்கல்களே அகப்போராட்டத்திற்கு வித்தாக அமைகின்றன. தனிமனிதர் சார்ந்த சமூக அமைப்பே புறப்போராட்டத்திற்கு காரணமாக அமைகின்றன. தொழில், சாதி, மதம், பண்பாட்டுச் சிதைவு, சுற்றுச் சூழல், வறுமை போன்ற காரணங்கள் புறப்போராட்டத்திற்கு ஆதாரமாக விளங்குகின்றன.

சிறுகதைகளில் போராட்டம் குறித்து இவ்வாய்வு நுட்பமாக விளக்கிச் செல்வதால், போராட்டம் குறித்து சமூகவியல் அறிஞர்களின் கருத்தை கீழே காணலாம்.

"போராட்ட உணர்வுகள் மனித உறவுகளில் எப்போதும் எல்லா இடங்களிலும் காணப்பெறும் நடைமுறைச் செயற்பாடுகளே. பொதுவாகக் கருத்து முரண்களில் தொடங்கி, மன உணர்வு மன உணர்ச்சியாகக் கிளர்ந்தெழுந்து அது ஒன்றன் எதிர்பார்ப்பாகவோ தடுப்பாகவோ அமைவது ஆகும்."[6]

"மற்றவற்றின் அல்லது மற்றவர்களின் விருப்பங்களுக்கு மறுப்பாக, எதிர்ப்பாக, வன்மையாக அமையும் திட்டமிட்ட முயற்சியே போராட்டம் ஆகும்"[7] என ஏ.டபுள்யூ கிளின் கூறுகிறார்.

"தனியொரு நபரோ, குழுவினரோ, எதிர்ப்புகளோடு நேரடியாகத் தேடி ஆராய்கின்ற முடிவுகளுக்காக வன்முறையாலோ எச்சரிக்கையாலோ விடுக்கிற சமூகச் செயல்பாடுகள்"[8] எனக் கிளின் மேகளின் குறிப்பிடுவர். இதனை, தனிநபர் போராட்டம், இனப்போராட்டம், வர்க்கப்

போராட்டம், அரசியல் போராட்டம், உலகியல் போராட்டம் எனப் போராட்டத்தை ஐவகையாகக் கூறுவார் கிளின்.

**அகப்போராட்டம்**

களவிலும் கற்பிலும் ஒவ்வொருவருக்கும் சிற்சில போராட்டங்கள் அமைவது இயல்பே. அக வாழ்க்கையில் எழும் போராட்டங்கள் பெரும்பான்மை உணர்வின்பால் அமைவனவாகும். காதல் உணர்வு மேலோங்கி நிற்கும்போது ஆணோ பெண்ணோ இருவரின் யாராயினும் அந்த உணர்வை எல்லோரிடத்திலும் வெளிப்படுத்துதல் இயலாத செயலாகும். ஆனால் காதலால் வருந்துவோர் தங்கள் துன்பத்தைக் குறைத்துக் கொள்ள வழி தேடுவது தவிர்க்க இயலாத ஒன்றாகும். ஏனெனில் இன்ப உணர்வைச் சொற்களில் வெளிப்படுத்தும்போது அது சொல்பவருக்கு மேலும் இன்பத்தைக் கொடுக்கும். துன்ப உணர்வைப் பிறரிடத்துக் கூறும்போது அத்துன்பம் குறையும். எனவே தான் அடைந்த துன்பத்தைக் குறைப்பதற்குக் காதல் வயப்பட்ட ஆணும் பெண்ணும் பிறரிடத்தில் தமது உணர்வுகளை வெளிப்படுத்துகிறார்கள்.

அவற்றைக் கேட்பதற்கு உரியவர்கள் அமையாத போது அவர்கள் தங்கள் நெஞ்சத்தை நோக்கித் தாமுறும் துன்பத்தை எடுத்துக்கூறி அதிலிருந்து விடுபட முயல்கின்றனர். இதுவே போராட்டத்தின் தொடக்கம் எனலாம்.

மேலும் உழைப்புச் சுரண்டல், ஒடுக்குதல், ஒதுக்குதல் என்பன தன் உறவுகளிலோ அல்லது சமூகத்திலோ எழும் போது அவை ஒரு போராட்ட உணர்வாக மாறுகிறது.

இவ்வகையில் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் கதைமாந்தர்கள் எதிர்கொள்ளும் அகப்போராட்டங்களையும், புறப்போராட்டங்களையும் பின்வருமாறு இங்கு வரிசைப்படுத்தலாம்.

குடும்பச் சூழல்களாலும், தன் உறவுகளினாலும் மக்கள் பல போராட்டங்களுக்கு ஆளாகின்றனர். இவற்றை இவ்வாய்வில் அகப்போராட்டமாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. அவையாவன,

1. காதல்
2. திருமணம்
3. முதிர்கன்னி
4. மகப்பேறின்மை
5. பாலியல்

போன்றவை அகப்போராட்டத்திற்கு கருவாக அமைகின்றன. இக்கூறுகளை ஆய்வுக்குரிய சிறுகதைகளின் வாயிலாக திறனாய்வு செய்யப்படுகிறது.

**காதல் போராட்டம்**

ஆண் - பெண் ஈர்ப்பானது இயற்கையானது. பாலின்ப நாட்டம் மனித இனத்திற்கு மட்டும் உரியதன்று. அது உலகில் வாழும் அனைத்து உயிர்களுக்கும் பொருந்தும். இதனைத் தொல்காப்பியர்,

"எல்லாவுயிர்க்கும் இன்பமென்பது
தானமார்ந்து வரூஉம் பற்றாகும்"[25]

என்று சுட்டுவார். 'காதலடைதல் உயிர் இயற்கை' என்பார் பாரதிதாசன். காதலை உளவியல் நோக்கில் காணும்போது, காதல் பான்ப வேட்கைப் போன்றது எனலாம். எல்லா காலங்களிலும் எல்லா நாடுகளிலும் கவிஞர்களைக் கவர்ந்து வந்துள்ள கருது பொருள் காதலென்பதில்

கருத்து வேறுபாடில்ல. உலக இலக்கியங்களில் குறிப்பிடத்தக்க பகுதி காதல் உறவு பற்றியதாக அமைந்துள்ளது.

இங்கு காதல் போராட்டம் என்னும் தலைப்பில் ஒருதலைக் காதல், கணவன், மனைவி உறவு குறித்த விளக்கங்கள், இலக்கியங்களில் கணவன் மனைவி உறவின் மேன்மை, கணவன் மனைவிக்கிடையே காணப்படும் அன்புகலந்த காதல் உறவு ஆகியவை விளக்கப் பெறுகின்றன.

பழந்தமிழின் வாழ்வியல் நெறியே காதல் நெறியாகும். கால ஓட்டத்தில் இந்த அன்பு வாழ்வில் மிகுதியாகப் போராட்டங்கள் தோன்றிய வண்ணம் அமைந்து வருகிறது. காதலரும் பெற்றோரும் போராட்டங்களுக்கு ஆளாகின்றனர். வரைமுறையற்ற உறவுகளாலும் போராட்டங்கள் ஏற்படுகின்றன.

ஒத்த வயதுடைய ஆணோ, பெண்ணோ யாராவது ஒருவர் மற்றவரை நேசிப்பதே ஒருதலைக் காதல் எனக் கூறுவர். சங்க இலக்கியங்களில் இதனைக் ‘கைக்கிளை’ உறவென்பர்.

மனித மனதில் ஏற்படும் மன மகிழ்ச்சிக்குக் காரணம் இதுதான் என வரையரை செய்ய இயலாது என்பதை ‘அப்பா’ என்ற சிறுகதையில் பதிவு செய்துள்ளார். சீதா, இராமகிருஷ்ணனை நேசிக்கிறாள். ஆனால் அவனிடம் அதைச் சொல்லவில்லை. அவனைப் பார்க்கும் போதெல்லாம் அவன் மீது அளவுகடந்த அன்பு ஏற்படும் சீதாவுக்கு. ஆனால் அவன் திருமணம் ஆனவன் என்று பின்புதான் தெரியவந்தது.

“என்ன இப்படி இளைச்சுப் போயிட்டீங்க?
உடம்புக் கென்ன?”

என்னன்னு சொல்ல. மெண்டல் டிப்ரசன்னு டாக்டர் சொல்றார். கல்யாணமாயிட்ட எல்லாமும் சரியாப் போகுமுன்னு டாக்டர் சொல்றார். என்றபடி கீழே தாழ்ந்திருந்த கண்களை என்மேல் பரவ விட்டாள். நான் எனக்கு கல்யாணமான விஷயத்தை அவளிடம் சொல்லவில்லை ஞாபகம் வந்தது."[26] காதலன் கணவனாக அமையவில்லை என்கின்ற சூழலில், அக்காதலனை மீண்டும் சந்திக்கும் போது ஒரு பெண்ணுக்கு ஏற்படும் மனப்போராட்டம் இங்கு சித்தரிக்கப்படுகிறது.

'பின்னல்' என்ற சிறுகதையில் வரும் தனபால் என்பவரை ரோகினி காதலிக்கிறாள். ஆனால் தனபால் கமலம் என்ற பெண்ணைத் திருமணம் செய்துகொள்கிறான். ரோகினி அவனையே நினைத்து வாழ்கிறாள். கமலத்திற்கு தெரியவந்ததும் ரோகினிக்கு ஆறுதல் கூறுகிறாள்.

"அவர் உனக்குப் பண்ணுன துரோகம் அல்லது நான் உனக்குப் பண்ணுன துரோகந்தா இப்படியெல்லாம் சீரழிக்குதுன்னு நெனைக்கிறேன்."[27]

காதலித்த ஒருத்தியை விட்டு தன்னைத் திருமணம் செய்து கொண்டானே எனத் தன் மனத்துக்குள் கமலத்திற்கு பெரும் போராட்டமாக அமைகிறது. இவ்வகையில் ஒரு பெண்ணின் எதிர்காலம் இங்கு போராட்டமாகிறது. இவ்வாறு ஒருதலைக் காதல் இன்றய சூழலில் சமூகத்தில் மிகப்பெரிய போராட்டக் களமாக மாறிவருவதை இவரது கதைகள் சுட்டிக்காட்டியுள்ளன.

**கணவன்**

ஆய்வுக்குரிய சிறுகதைகளில் கணவன் பாத்திரம் சிறப்பூட்டப் பெறுகின்றது. கணவன், மனைவி, குடும்பம் போன்ற உறவில்

அகப்போராட்டம் தொடங்குகிறது. குடும்ப உறவு மேம்பட கணவன் மனைவிக்கிடையே நிலவும் உறவுமுறையானது சுமூகமாகச் செல்ல வேண்டும். ஒரு பெண்ணை மணந்துகொண்ட ஆடவன், கணவன் எனப்படுகிறான். குடும்ப உறவில் கணவன் என்பவனே முதன்மையாகின்றான். கணவன் என்ற சொல்லுக்கு "அகத்தான், அகத்தோன், அகமுடையோன், அடிகள், அத்தான், ஆத்துக்காரர், ஆள், ஊராளன், ஐந்தான், கணவன், கணவாளன், கழுத்தகமுடையான், கிழவன், கொழுநன், தலைவன், நாயகன், புரசன், மகிழ்நன், மச்சான், மணமகன், மணவாளன், மணாளன், மாப்பிள்ளை, மாமன், மாமா, வரன், வீட்டுக்காரர், வேட்டான், நாயகன், தலைவன், துணைவன்"[28] ஆகிய சொற்கள் வழங்கப்படுகின்றன. கணவன் என்ற சொல்லுக்கு பிங்கல நிகண்டு,

"கணவன் கொழுநன் காந்தன் கேள்வன்
மணமகன் தைலன் வல்லவன், உரியோன்
பதி, தவன், கொண்கன், பத்தா, துணைவன்
தலைமகன், தலைவன், மணவாளன், தன்பெயர்"[29]

எனப் பொருள் வரிசைப்படுத்துகிறது. கணவன் என்பதற்கு "கண் போன்றவன் என்பது பொருளாகக் கொள்ளப்படுகிறது. கணவன் என்ற சொல்லைப் பிரித்தால் 'கண்+அவன்' எனப் பொருள் தருவதாக தாயம்மாள் அறவாணன் தம் நூலில் குறிப்பிடுகிறார். மேலும் கணவனை "கண்ணாளன்" என்றும் "மணவாளன்" என்ற சொல்லிலும் அழைக்கின்றனர்.

**இலக்கியங்களில் கணவன்**

கணவன் குறித்த சொல்லும் விளக்கமும் இலக்கியங்களில் காணப்படுகின்றன. "தொல்காப்பியத்தில் "நீத்த கணவன் நீர்த்த

வேலின்"[30] என்னும் புறநானூற்றில் "மனைக்கு விளக்காகிய வாணுதல் கணவன்"[31] என்னும் "ஒலியிருங் கதுப்பி ஆயிழை கணவன்"[32] என்றும் நாலடியாரில் "என் கணவன் என் தோள் மேல் சேர்ந்து எழினும்" என்னும் சிறுபஞ்சமூலத்தில் "கணவனுக்கு... கற்புடைய பெண்ணமிர்து"[33] என்றும் சிலப்பதிகாரத்தில் "கணவனை இழந்தோர்க்கு"[34] என்றும் பயின்று வருகிறது. இத்தகு சிறப்பிடம் பெற்ற 'கணவன்' என்ற உறவு சிறுகதைகளில் மிகப் பெரிய ஆளுமையைப் பெற்றுள்ளது. இங்கு அகப் போராட்டக் களங்கள் கணவனைச் சுற்றியே அமைந்துள்ளன.

**மனைவி**

மனைவி என்ற சொல் ஆண் பெண் உறவுநிலையில் முக்கியப் பங்கு வகிக்கிறது. மனைக்கு 'விளக்காக' விளங்குபவளே 'மனைவி' என்றும் கூறுவர். மனைவி என்ற சொல்லுக்கு "தேவி, நல்லாள், பெண்டாட்டி, பெண்டு, பெண்சாதி, போகமகள், மணவாட்டி, மனையாள், மனையோள், மனைவி, வது, வாழ்க்கைத் துணைவி, வீட்டுக்காரி, வேட்டாள், ஸ்திரி, சம்சாரம், இல்லாள், துணைவி, கிழத்தி, தலைவி, இல்லக்கிழத்தி, ஆத்துக்காரி, இல்லோள், தாரம், மகடுஉ, மகள், இல்லவள்"[35] ஆகிய பொருள்கள் வழங்கிவருகின்றன என்று பிங்கல நிகண்டும் சுட்டுகிறது.

"மணமகள், உரிமை, வல்லவி, தாரந்
துனைவி, வாழ்க்கைத்துணை, மணவாட்டி
பாரி, இல்லாள், விருந்தனை
இல்லாள், குடும்பின், களமே காந்தை
இன், மனை, காதலி, நாயகி, பெண்பெயர்"[36]

என்று மனைவியின் பெயர்களை தாயம்மாள் அறவாணன் குறிப்பிடுகிறார்.

### இலக்கியங்களில் மனைவி

தலைவி என்பதற்குக் "கிழத்தி, இற்கிழத்தி, மனைக்கிழத்தி, மனையாள், மனையோள், வாழ்க்கைத்துணை"[37] போன்ற சொற்கள் சங்க இலக்கியங்களுள் பயின்று வருகின்றன.

"பெரும்பொருள் வதுவை

தொல்முறை மனைவி"[38]

என்று தொல்காப்பியம் மனைவியைச் சுட்டுகிறது. அகநானூற்றில் "மனை முதல் வினையொடும் உவப்ப" என்றும் குமரேசசதகத்தில் "மனையாட்டி சற்றும் எண்ணாள்" என்றும் "மனையாளையஞ்ச மறுமையிலாள்" என்றும் வழங்கப்பட்டு வருகின்றன. மனைவியைத் துணை என்றும் வாழ்க்கைத்துணை என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

வாழ்க்கைத்துணையை "உயிர்த்துணைவி" எனவும் "பாவையன்ன நின் துணைப் பிரிந்து" எனவும் "குறநெடுந் துணையொடு"[39] எனவும் இலக்கியத்தில் பல எடுத்துக்காட்டுகள் காணப்படுகின்றன.

### திருமணம்

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் குடும்பத்தின் அடித்தளமாக மனைவி உள்ளமையை அறிய முடிகிறது. உறவுகள் சிதையாவண்ணம் கட்டிக் காப்பவர்களாகப் பெண்கள் உள்ளனர் என்பதை அறியமுடிகிறது. ஒவ்வொரு சமூகமும் தன் பண்பாட்டு வளர்ச்சிக்கும் தேவைக்கும் ஏற்பக் கணவன் மனைவியுறவு பற்றிய கொள்கைகளை வகுத்துப் போற்றி வருகின்றது. இக்கொள்கைகளை அளவுகோலாகக் கொண்டு ஒரு சமூகத்தின் பண்பாட்டுச் சிறப்பை அளந்தறியலாம். பண்பட்ட தமிழினம் பன்னெடுங்காலத்திற்கு முன்பே பல

நிறுவனங்களை உருவாக்கி, ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு கொள்கைகளை உருவாக்கிப் போற்றியுள்ளது. கணவன் மனைவி உறவு பற்றித் தமிழர்கள் உருவாக்கியிருந்த கொள்கைகள் சங்ககாலத்திலேயே தொன்மையானவையாகக் கருதப்பட்டன.

திருமணச் சடங்குகள் இயற்றப்படுவதற்கு முன்னர் ஆண் பெண்ணுறவில் நெகிழ்ச்சியான போக்கு சங்ககாலங்களில் நிலவியது என்பதனை,

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[40]

எனத் தொல்காப்பியர் சுட்டுவதன் மூலம் உணரலாம். திருமணச் சடங்கு வரையறுக்கப்பட்ட காலம் இன்னதெனக் கூற இயலாதெனினும், அது தொன்மையான காலமெனலாம். பண்டைத் தமிழகத்தில் வழக்கிலிருந்த திருமணமுறைகள், கணவன் மனைவியிடையே அமையும் உறவின் தன்மைகள் பற்றிய குறிக்கோள்கள், நடைமுறைக் கூறுகள் ஆகியவை பற்றிச் சங்க இலக்கியம் பல செய்திகளைத் தன்பால் கொண்டுள்ளது.

திருமணத்தை ஒரு நிறுவன அமைப்பாகப் பார்க்கும்போது அது சமூகப் பண்பாட்டு மாற்றங்களுக்கு உட்பட்ட ஒன்றாகவே காட்சியளிக்கிறது. தன் ஒப்புதலின்றி வயதுக்கு வந்த ஆணும், பெண்ணும் நெருங்கி உறவாடுதலைத் தமிழ்ச் சமூகம் சங்ககாலத்தில் ஏற்றுக் கொள்ளவில்லை. சங்ககாலத்தில் பல வகையான மணமுறைகள் வழக்கிலிருந்தன. அவை அனைத்திலும் குடும்பப் பெரியோரின் விருப்பத்திற்குச் சிறப்பிடமிருந்தது.

**திருமணமுறைகள்**

1. களவுத் திருமணம்

2. விலை கொடுத்துப் பெண்ணை மணத்தல்

3. போரில் வெற்றிப் பெற்று பெண்ணை மணத்தல்

4. ஏறுகோள் மணம்

5. விலை கொடுத்து இரண்டாவது திருமணம் என்று சங்ககாலத் தமிழர்களின் திருமணமுறை இருந்துள்ளமையை அறிகிறோம். இவ்வாறு பல்வேறு திருமணமுறைகள் சங்ககாலங்களில் வலியுறுத்தப்பட்டு வந்துள்ளது. கணவன், மனைவி குறித்த இப்பின்புலத்தில் இவர்களுக்கிடையே நிலவும் உறவுகளை ஆதித்யரின் சிறுகதைகள் நன்கு உணர்த்துகின்றன.

**காதல் உறவு**

கணவன் மனைவி உறவில் ஏற்படும் காதல் உறவை ஆய்வுக்குரிய சிறுகதைகளின் அடிப்படையில் பின்வருமாறு ஐந்து வகைகளாகப் பாகுபாடு செய்யப்பட்டு விளக்கப் படுகிறது. அவையாவன:

1. கணவனுக்காக எதையும் விட்டுக்கொடுக்கும் மனைவி

2. மனைவி மீது தீராக் காதல்

3. கணவன் மீது தீராக் காதல்

4. மனைவியே தன் பலமாகக் கருதும் கணவன்

5. முதுமைக் காதல்

போன்ற கூறுகள் சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

**விட்டுக்கொடுக்கும் மனைவி**

அகப் போராட்டத்தின் ஒரு கூறாக விட்டுக்கொடுக்கும் மனைவி திகழ்கிறாள். கணவன் மனைவி உறவில் கணவனுக்காக எதையும்

விட்டுக்கொடுத்துச் செல்லும் மனைவியை ‘கை குலுக்க நிறையச் சந்தர்ப்பங்கள்’ என்ற சிறுகதையில் சுப்ரபாரதிமணியன் சித்தரிக்கிறார். இதில் சுகந்தி திருமணமான நாள் முதல் ஒவ்வொன்றையும் கணவனுக்காக பார்த்துப் பார்த்து செய்கிறாள். முதல் நாள் நடந்த திருமணச் சடங்கில் தொடங்கி “கல்யாணமாகி இத்தனை வருஷங்களில் அவரின் விருப்பத்திற்கு மாறாக நான் நடந்ததில்லை. அவரின் விருப்பப்படி நடப்பதில் தான் நான் திருப்தி அடைகிறேன் என்கிறாள்.”[41]

ஒருமுறை திருமண வீட்டுச் சடங்கு விழாவில் இருவரும் குடத்தில் கல்போட்டு யார் எடுப்பது என்ற விளையாடியபோது அவள் விட்டுக்கொடுத்தது தான் நான் வென்றேன் என்று எனக்கு தெரியவந்தது என்கிறான்.

“நானே வெற்றி பெற்றுவிட வேண்டும் என்ற என் வெறியும், ஆக்ரமிப்பும் எவ்வளவு முட்டாள்தனமானது, ஒரு வகையில் கேவலமானது என்று உணர்ந்தேன்”[42] என்று கணவன் தனக்குள் நினைத்துக் கொள்கிறான். இவ்வாறு கணவன் மனைவி உறவை அழகுறச் சித்தரிக்கிறார்.

**கணவனின் காதல்**

‘ஒரு சின்ன பிரயாணத்திலும்கூட’ என்ற சிறுகதையில் மனைவி தலையில் வைக்கும் பூவை ரசிப்பவனாக கணவன் பத்மன் உள்ளான். தன் தாய் வீடு சென்று வரும் மனைவி சசியை எதிர்பார்த்துக் காத்திருப்பவனாக கணவன் காட்டப்படுகிறான்.

“ஒருமுறை தனியே ஊர்போய் வந்தாள். காலை ஒன்பது மணிக்குப் பஸ்ஸிலிருந்து இறங்கிய அவளைப் பார்த்தபோது திக்கென்றது பத்மனுக்கு தலையில் பூ இல்லை. தலையைத் தொட்டு ‘ஏன்டா’ என்றான் பத்மன்.”[43]

இவ்வகையில் கணவன் மனைவி உறவில் கணவன் மனைவி மீது கொண்டுள்ள காதல் வெளிப்படுகிறது. ‘கிணற்றலை’ என்ற சிறுகதையில் கணவன் மனைவி மீது வைத்திருந்த காதல் சித்தரிக்கப்படுகிறது. திருமணமாகி வந்த வீட்டில் கிணறு இருக்கிறது. அதைப் பார்த்து அப்பெண் பயம் கொள்கிறாள். ஏனெனில் கிணற்றை பார்த்தாலே சிறுவயதிலிருந்தே அவளுக்குப் பயம். அதனால் கணவன் வீட்டில் தன் தாய், தந்தையின் பேச்சையும் கேட்காமல் அக்கிணற்றை மூட நினைக்கிறாள். இதனால் வீட்டில் உள்ள அனைவரும் அவனைக் கேலி பேசுகின்றனர். எதனையும் பெரிதாக அவன் எடுத்துக் கொள்ளவில்லை. தன் மனைவியின் மகிழ்ச்சி ஒன்றை மட்டுமே நினைக்கிறான்.

“புதுப் பொண்ணுக்கு இவ்வளவு காவல் தேவையா? எத்தனை நாட்களுக்கு என்ற கிண்டல் சிரிப்பையும் வரவழைத்தது அவனுக்கு”[44] இதன் மூலம் கணவன் மனைவியின் அன்புக் காதல் வெளிப்படுகிறது.

**மனைவியின் காதல்**

‘சில வேறு தினங்கள்’ என்ற சிறுகதையில் சேவற் சண்டையில் பெரும் விருப்பமுள்ளவர் அப்பா. அதில் கிடைக்கும் கொச்சைக்கறியின் மீது கொள்ளைப் பிரியம் அப்பாவிற்கு. இவரின் விருப்பமே அம்மாவிற்கு வேதம். கஷ்டத்திலும் அப்பாவைக் குறை சொல்லமாட்டாள் அம்மா. “உடம்பு வர அகப்பை, அகப்பையா நெல்சாதமும் கறியும் வேண்டியதில்லை. சந்தோஷம் போதும் என்பாள்

அம்மா. அவரின் எந்தப் பேச்சையும் மறுதலிக்காத குணமும் கொண்டவள்"[45] அப்பா சுகம் இல்லாமல் இருக்கும்போது "நா போயிருவேன், சாவு எனக்குப் பின்னால் தான் வரும் என்று அழுகையுடன் சொன்னாள். நீ தேருக்குப் போன நாங்க தரிசனத்திற்கு வருவோம் என்றாள்"[46] இதன் மூலம் கணவனைப் பிரிந்து வாழமுடியாத மனைவியின் காதல் வெளிப்படுகிறது. இவ்வாறு அன்புள்ளம் கொண்ட கணவன் மனைவி உறவை சுப்ரபாரதிமணியன் தனது கதைகளில் வெளிப்படுத்துவதை அறியமுடிகிறது.

**முதுமைக் காதல்**

ஒவ்வொருவரின் வாழ்வில் முதுமைப் பருவத்தில் கணவன் மனைவி உறவில் மிகப் பெரிய அகப்போராட்டத்தைச் சந்திக்கின்றனர். தன் பிள்ளைகளுக்குத் திருமணம் முடித்து வைத்த பிறகு கணவன் மனைவி உறவில் உண்டாகும் நிம்மதியே உண்மையான மகிழ்ச்சியாக உணர்கின்றனர். அப்போதும் ஒருவரை ஒருவர் அன்போடு வாழ்வதே நிறைவான வாழ்க்கையாக அமைகிறது. சிவராமரெட்டியும், சிவகாமியும் கணவன் மனைவி வயதானவர்கள். இவர்கள் தனக்குள் நடக்கும் சண்டைகளை நினைவுபடுத்திப் பார்க்கின்றனர்.

"நீ அழுது முகம் சிவந்திருக்கும் என்னைப் பார்த்தும் விறுவிறுன்னு உள்ளே போயி காபி போட்டுட்டு வந்துவே, அப்புறம் சிடுசிடுப்போ, மொகச்சுளிப்போ இருக்காது. சண்டை போடற நாளைக்கு நல்ல சமையல் இருக்கும். நல்ல ருசியான சமையல் சாப்பிடறதுக்குன்னே உன்னோட சண்டை போடணும் போல இருக்கும்"[47] என்று சொல்லி சிவராமரெட்டி சிரித்தார். அதேபோல்

ஒருமுறை சிவகாமி சண்டை போட்ட அன்று காணவில்லை. எங்கும் தேடிப்பார்த்த சிவராமரெட்டி பதறிப்போகிறார்.

"சிவகாமி... சிவகாமி என்றார். முணுமுணுப்பாகவே நின்று விட்டதோ என்ற சந்தேகம் வந்தது உரக்கச் சொன்னார். நடந்து போய்க் கொண்டிருந்தவர்களில் சிலர் திரும்பிப் பார்த்தார்கள். ஏழு நாட்களாகப் பக்கத்து சீட்டிலேயே காத்திருந்தார். அவரிடம் சொல்லாமல் கீழேகூட இறங்க மாட்டாள். உரக்கக் கத்தினார். குரல் நெகிழ்வடைந்து தடுமாறுவது தெரிந்தது. நிச்சயம் சகபயணிகளுடன் போயிருக்க மாட்டர். இன்னும் உரத்து அவள் பெயரைச் சொல்லி கத்த வேண்டும் போலிருந்தது. முடியவில்லை."[48]

சிவகாமியை காணவில்லை என்றதும் சிவராமரெட்டி படும் பாடு அவர் மனைவி மீது வைத்திருந்த காதலைக் காட்டுகிறது. இவ்வகையில் கணவன் மனைவியின் முதுமைக் காதல் ஆழமானது என்பதை ஆசிரியர் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியிருக்கிறார். இதில் இவரின் அகப்போராட்டம் வெளிப்படுகிறது.

**கணவன் மனைவியுறவில் ஊடல்**

அகப்போராட்டத்தில் 'ஊடல்' கணவன் மனைவி உறவில் முக்கியப் பங்கு வகிக்கிறது. உறவில் பிணைப்பு ஏற்படுவதற்கு ஊடல் பெரும்பங்கு வகிக்கிறது. ஆய்வுக்குரிய சிறுகதையில் ஊடல் பல்வேறு காரணங்களால் ஏற்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

குடும்பங்களில் நாள்தோறும் நடக்கும் பிரச்சனைகளின் மூலம் கணவன் மனைவி இடையே பல்வேறு வகையான ஊடல்கள் ஏற்படுகின்றன. திருவள்ளுவர் ஊடலின் வகைகளைச் சுட்டும்போது

நிலத்தோடு நீர் எப்படி பொருந்துமோ அதுபோல ஒன்றுபட்ட நெஞ்சம் உடையவரிடத்தில் ஊடலில் காணப்படுவது போன்ற இன்பம் தேவருலகிலும் உண்டோ? என்று தலைவி கேட்பதை,

"புலத்தலிற் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு

நீரியைத் தன்னார் அகத்து"[49] (குறள்.1323)

என்னும் குறள் வழியே விளக்கியுள்ளார். ஊடல் என்பதை தலைவியே விரும்பி ஏற்றுக் கொண்டதை இதில் அறியலாம். ஊடலே காமத்திற்கு இன்பம். அதைவிட இன்பம் இருவரும் கூடி இன்பம் பெறுதலே ஆகும். இதனை,

"ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்

கூடி முயங்கப் பெறின்"[50] (குறள்.1330)

என்று வள்ளுவர் ஊடலின் தன்மையைப் போற்றியுள்ளார். சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளிலும் கணவன் மனைவியிடையே ஏற்படும் ஊடல்களை ஆசிரியர் அழகாகச் சித்தரிக்கிறார்.

**வறுமையால் ஏற்படும் ஊடல்**

சுப்ரபாரதிமணியனின் 'சமாதானம்' என்னும் சிறுகதையில் கணவன் மனைவியுறவில் வறுமையால் ஏற்படும் ஊடலைச் சித்தரிக்கிறார்.

வீட்டில் சமைப்பதற்குச் சிலிண்டர் வாங்க முடியாமல் மண்ணெண்ணை ஸ்டவ் வைத்து சமைக்கின்றனர். இந்த பழைய ஸ்டவ்வும் அடிக்கடி ரிப்பேர் ஆகிவிடுகிறது. இதைப் பழுதுபார்க்க நேரிடும் போதெல்லாம் இருவருக்கும், சுதாகருக்கும், மனைவி ராஜேஸ்வரிக்கும் இடையே ஊடல் ஏற்படுகிறது.

*“ராஜேஸ்வரியை கோபப்படுத்த ஏதாவது காரணம் தேடினால் உடனே ஸ்டவ் ஞாபகம் வந்துவிடும். ஸ்டவ் ரிப்பேர் என்றால் முகம் சுளிப்பாள் நாலைந்து வசவு வார்த்தைகள் வந்துவிடும் அவளுக்கு எப்போது இருட்டும் என்று மார்க்கெட்டுக்கு எடுத்துச் செல்வான். ஒன்றுக்கு இரண்டாக கேஸ்சிலிண்டர்கள் வந்துவிட்ட காலத்தில் இன்னும் ஸ்டவ்வை ரிப்பேருக்கு எடுத்துச் செல்ல சங்கடமாகத்தான் இருக்கும் அவனுக்கு”*[51] என்று சுதாகர் மனைவியுடன் ஊடல் ஏற்படுவதற்கு வறுமை காரணமாக உள்ளதே என நினைத்துக் கொள்கிறான். இருப்பினும் சமாதானம் செய்துவிடலாம் என நினைக்கிறான்.

இந்நிலை ஒளிபொருந்திய இழையணிந்த தலைவி இன்றும் என்னோடு ஊடி நிற்பாளாக யாம் இவளை வேண்டி ஊடல் தீர்த்தாள் பொருட்டு இரவும் தொடர்ந்து வளர்ந்து போகட்டும் என்று நினைப்பதாக அமையும் திருவள்ளுவரின் கருத்தோடு ஒத்து வருகிறது.

*“ஊடுக மன்னோ ஒளியிழை யாமிரப்ப*

*நீடுக மன்னோ இரா”*[52] (குறள்.1329)

என்னும் இக்குறளில் உள்ள செய்தியை இக்கதை நினைவு கொள்ளச் செய்கிறது.

### வேறுபட்ட ரசனையால் வரும் ஊடல்

‘கரு’ என்ற சிறுகதையில் பிரேமாவுக்கும் அவள் கணவனுக்கும் எப்போதும் சண்டை வந்துகொண்டேதான் இருக்கும். அதிலும் பிரேமாவிற்கு மாடுகளைப் பார்த்தால் கொள்ளைப் பிரியம். ஆனால் அவள் கணவனுக்கு எதிர்மறை, மாடுகள் என்றாலே பிடிக்காது.

பிரேமா மாடுகளைப் பற்றி பேசினாலே அவனுக்குப் பிடிக்காது. அருவருப்பாக உணருவான். இதனைப் பற்றி பேசினாலே இருவருக்கும் சண்டைதான். ஒருமுறை அவன் கோபத்தில் பிரேமாவைத் திட்டியதோடு, “மாட்டிறைச்சிக்காக ஆசைப்படுபவளுடன் இனி படுக்கையைப் பகிர்ந்து கொள்ள முடியுமா என்ற சந்தேகம் அவனுக்கு வந்துவிட்டது.”[53]

இவ்வாறு கணவன் மனைவி இருவரின் சின்னச் சின்ன ஊடல்களை சுப்ரபாரதிமணியன் வெளிப்படுத்தியுள்ளார். குடும்பத்தில் இதுபோன்ற சண்டைகள் வரும் போகும் என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.

ஊடலினால் தோன்றும் சிறிய துன்பம் அன்பு வாடிவிடக் காரணமாக இருந்தாலும் மீண்டும் அன்பு வளர்ந்து பெருமைபடத் துணை செய்யும் என்னும் கருத்தை குறிப்பிடுகிறது.

‘உறுத்தல்’ என்ற சிறுகதையில் கணவனோடு சண்டையிட்டு மனைவி தன் தாய்வீடு சென்று விடுகிறாள். சங்கரும் காத்திருக்கிறான். மனைவி வசந்திக்கு இது ஒன்றும் புதியதல்ல. திரும்பி வந்துவிடுவாள் என சங்கர் காத்திருக்கிறான். வசந்தியைக் கண்டதும் வீட்டில் அவள் பெற்றோர் புரிந்துகொள்கின்றனர். அவள் அப்பா பேசும்போது, “உள்ளூர் மாப்பிள்ளை எடுத்தது எவ்வளவு பெரிய மடத்தனம், ஏதோ கல்யாண அவசரத்திலெ மாப்பிள்ளை உள்ளூர்னா போய்வர செலவு மிச்சம் அப்பப்போ நெனப்பு வந்தப்போ பொண்ணெ கண்ணுலெப் பாத்துக்கலாமுன்னு நெனச்சேன்”[54] இவள் தொட்டதுகெல்லாம் சண்டையிட்டுக் கொண்டு வந்துவிடுகிறாளே என வசந்தியின் பெற்றோர் பேசிக்கொள்கின்றனர். மீண்டும் வசந்தி கணவன் வீடு திரும்பத் தயாராகிறாள். இவ்வகையில் ஆசிரியர் கணவன் மனைவி

ஊடல் ஏற்படுவதும் பின் தனிவதும் இயற்கையான ஒன்று எனத் தன் சிறுகதைகளில் சுட்டிச் செல்கிறார்.

### முதிர்கன்னி

அகப்போராட்டத்தில் இக்கூறு ஒரு சமூக அவலமாகக் குறிப்பிடலாம். திருமண உறவைக் குறிப்பிட்ட வயதில் சந்திக்காத பெண் மிகப்பெரிய போராட்டத்தைச் சந்திக்கிறாள். இதனைப் பல கதைகளில் நன்கு சித்தரித்துள்ளார்.

திருமணம் ஆகாமல் இருக்கும் பெண்ணை முதிர்கன்னி என்கிறோம். வறுமையின் காரணமாகப் பருவம் வந்தும் திருமணம் ஆகாமல் இருக்கும் பெண்ணைச் சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதையில் சுட்டுகிறார்.

இதனால் திருமணம் என்பது சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுபவை அல்ல. ரொக்கத்தில் தான் நிச்சயம் ஆகின்றன எனலாம். சுப்ரபாரதிமணியன் சிறுகதையில் வரும் திருமணம் ஆகாத பெண்களை மூன்று வகையாகச் சுட்டலாம்.

- வறுமையில் உள்ள பெண்
- ஊனம் உற்ற பெண்
- அழகின்மை

போன்ற வகையில் பிரித்துக் குறிப்பிடலாம்.

### வறுமையால் திருமணம் ஆகாத பெண்

'அப்பா' என்ற சிறுகதையில் ராமகிருஷ்ணனின் தங்கை சீதா, அவனின் மனைவி பத்மா. ராமகிருஷ்ணனும், பத்மாவும் இருக்கும் வீட்டில்தான் சீதாவும் இருக்கிறாள். பனியன் கம்பெனியில் வேலை

செய்கிறான் ராமகிருஷ்ணன். போதிய வருமானம் இல்லை, சீதாவை திருமணம் செய்து வைக்க, இவர்கள் இருக்கும் வீட்டில் சீதா தூங்க தனி அறைகூட இல்லை. அனைவரும் ஒரே அறையில் தான் தூங்க வேண்டும். "சீதா ஒருபுறம் குப்புறப் படுத்துக் கொண்டிருக்க, இன்னொரு பாயின் ஓரத்தில் சேர்ந்தமாதிரி கணவன் மனைவி இருவரும் படுத்திருந்தனர். அந்த விஷயங்கள் சீதாவைக் குலைத்திருக்கும்."[55]

இங்குத் திருமணம் ஆகாத பெண்ணின் மனப்போராட்டத்தை சுப்ரபாரதிமணியன் தன் கதைகளில் காட்டுகிறார். 'எஞ்சியது' என்ற சிறுகதையில் ரவீந்திரன் பழைய மரச்சாமான்கள் வாங்கச் செல்லும் வீட்டில் சுஷ்மா என்ற பெண்ணைச் சந்திக்கிறான். வறுமையால் பருவம் வந்தும் திருமணம் ஆகாமல் இருக்கிறாள். அவள் தந்தை, "சாரீ, டீ கூட குடுக்க முடியலே... எங்க பொருளாதார நிலைமை அப்படி ஒவ்வொரு சாமான வித்துகிட்டிருக்கிறோம். வர்றவங்களுக்கு உபசாரம்கூட பண்ண முடியாத பலவீனம்"[56] என்ற தந்தையின் வார்த்தைகளில் அவர்களின் குடும்பநிலையை ஆசிரியர் சுட்டுகிறார்.

ஒரு தந்தையின் மனப்போராட்டத்தை இக்கதையில் சுப்ரபாரதிமணியன் சுட்டுகிறார்.

**ஊனமுற்ற பெண்**

திருமணததிற்கு பொருளாதாரம் மட்டும் காரணம் இல்லை. உடல் ஊனமும் ஒரு காரணமாக துளசிக்கு அமைகின்றது என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

"பெண் பார்த்துச் சென்றவர்கள் வேண்டாம் ஏதோ பரம்பரை வியாதியாக இருக்கலாம், பெண் கால் சூம்பி உள்ளது எனக் கூறிச்

செல்கின்றனர். அப்பா கோபத்தில் வசைபாட ஆரம்பித்து மகாலெட்சுமி மாதிரியான எம் பொண்ணை இப்படிச் சொல்லுராங்களே எனக் கத்துகிறார்."[57]

துளசியின் தம்பி சுந்தரேசன் அக்காவிற்கு ஆறுதல் கூறுகிறான். எனக்கு ஒன்றும் இது புதிதில்லையே பழகிப் போச்சுடா தம்பி என்று கூறிச் செல்கிறாள். "அக்கா எந்தக் கவலையும் இல்லாமெ தூங்குக்கா என்றான். துளசி லேசாகப் புன்னகைத்தாள். அக்கா கண்ணில் நீர் தளும்பச் சிரித்து எத்தனை நாளிக்கும் என்று நினைத்துப் பார்க்கிறான்."[58]

இக்கதையில் துளசியின் மனப்போராட்டத்தை ஆசிரியர் சுட்டுகிறார். திருமணம் ஆகாமல் இருக்கும் இவளை ஊனத்தால் மறுப்பவர்களை நினைத்து ஒரு பெண் மனம் எவ்வளவு துன்பப்படும் என்று சுட்டுகிறார்.

**அழகற்ற தோற்றம் உடைய பெண்**

'கூடவரும் அவர்கள்' என்ற சிறுகதையில் ஜெயராமின் தங்கைகள் மூவர் உள்ளனர். அவர்கள் ஒவ்வொருவரும் தோற்றத்தால் விகாரமாக உள்ளனர். முகமே பெண் என்ற கலையின்றி ஆண் போன்று தோன்றுகின்றனர். இதில் கடைசிப் பொண்ணு பரவாயில்லை முகத்தில் பருக்களும், தளும்புகளும் தான் உள்ளன என ஜெயராமின் நண்பன் நினைக்கிறான்.

"மூணுலே இது தேறுமா... இதுவாவது சுமாரா இருந்தா கல்யாணமுன்னு ஒண்ணு சீக்கிரம் இதுகாச்சும் வழி உண்டே... மொகம் பூராவும் அம்மைத் தழும்பு, பெரிய அம்மை பாவம், அந்த ரெண்டு பொண்ணுக மாதிரிதான் இதுவும். வெளியே வர சங்கடப்பட்டோ

என்னமோ உள்ளேயே இருக்குதுங்க. மூணு பொண்ணுகளையும் நெனச்சா பாவமாத்தான் இருக்கு"[59] ஜெயராம் நண்பன் இவர்களை பார்த்தவுடன் இவர்களின் மனநிலையை எண்ணி வருத்தப்படுகிறார். சுப்ரபாரதிமணியன் முதிர்கன்னியான இவர்களின் மனநிலையை வேற்றவர் பார்க்கும் இவர்களின் நிலையினையும் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

**மகப்பேறின்மை**

அகப்போராட்டத்தில் முதிர்கன்னி வறுமை உடல் ஊனம் போன்ற கூறுகளைப் போல், மகப்பேறு ஒரு பெண்ணின் வாழ்வில் மிகப் பெரிய சோகத்தை ஏற்படுத்துகிறது. குழந்தைப் பேறு இல்லாத பெண் 'மலடி' என்று சமூகத்தால் புறக்கணிக்கப்படுகிறாள். இது ஒரு சமூகச் சிக்கலாக மக்களிடையே நிலவுகிறது. ஆசிரியரின் கதைக்கருவும் மகப்பேறு குடும்பத்தில் பெரும் போராட்டம் நடைபெறுவதை பல கதைகளில் சுட்டிக் காட்டியுள்ளார்.

திருமணம் ஆன பெண் குறிப்பிட்ட காலத்தில் தாய்மை அடையவில்லை என்றால் இச்சமூகம் அவளை பார்க்கும் நோக்கமே வேறு. குழந்தை இல்லையென்றால் அப்பெண்ணைவிட்டு வேறு ஒரு பெண் அந்த ஆணுக்கு மணம் முடிப்பதும் உண்டு. இல்லையெனில் அதிஷ்டம் இல்லாதவள் என்று கருதி மங்கல விழாக்களுக்கு எல்லாம் ஒதுக்கி வைப்பதும் இச்சமூகத்தில் நடக்கும் செயலாகும். மகப்பேறின்மையால் பெண் எதிர்கொள்ளும் போராட்டங்களை சுப்ரபாரதிமணியம் தம் சிறுகதைகளில் அகப்போராட்டங்களாகச் சித்தரித்துள்ளார்.

குழந்தைச் செல்வத்தின் முக்கியத்துவத்தை வள்ளுவரும் சுட்டுகிறார்.

"குழல்இனிது யாழ்இனிது என்பர்தம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"[60] (குறள்.66)

தம் மக்களின் மழலைச் சொல்லைக் கேட்டு அதன் இனிமையை நுகராதவரே குழலின் இசை இனியது யாழின் இசை இனியது என்று கூறுவர். வள்ளுவரின் கூற்றும் இங்கு குறிப்பிடத் தக்கது.

'புது வேலை' என்ற சிறுகதையில் வரும் ரோகிணி என்ற பெண் தனக்கு குழந்தையின்மையால் வேறு யாராவது ஒருவருடைய குழந்தையைச் சந்திக்கும்போது அக்குழந்தையை தூக்கி கொஞ்சவேண்டும், அதுபோல் தனக்கும் ஒரு குழந்தை இருந்தால் நன்றாக இருக்குமே எனத் தன் மனதுக்குள்ளே நினைத்துக் கொள்வாள். இதனை, "கொழுகொழு குழந்தைகளைத் தொடும்போது இவ்வகை பயம் அவள் உடம்பில் உள்ளிறங்கும். குழந்தை இல்லாத தனிமையை நினைக்கையில் பயம் பன்மடங்கு ஆகிவிடும்"[61] என்பதன் மூலம் ரோகிணியின் துயரத்தை அவள் மனப் போராட்டத்தை சுப்ரபாரதிமணியன் இங்கு வெளிப்படுத்துகிறார்.

'யோகம்' என்ற சிறுகதையில் சரஸ்வதி என்ற பெண்ணுக்கு குழந்தையின்மையால் அவளை அவ்வூரே அதிஷ்டமற்றவள் என்றே பேசும். இதனையே கேட்டுக் கேட்டு தான் உண்மையிலேயே துரதிஷ்டசாலிதானே என்ற எண்ணம் சரஸ்வதிக்கும் தோன்றும். அவளது நிலத்தில் கிணறு வெட்டும்போது தண்ணீர் வந்ததால் ஊரே ஆச்சரியப்படுகிறது. இவ்வூருக்கே இனி தண்ணீர் பஞ்சம் அவளால் தீரும்

என சந்தோசம் கொள்கிறாள் சரஸ்வதி. "மலடிக்கு யோகம் இருக்குமா என்று பரிசீலித்தார்கள். நமுட்டுச் சிரிப்பாய் குழந்தை இல்லாதத்தனம் பேசப்பட்டது. அவள் உடம்பின் குதிரைத் திமிர் பேச்சானது." இதனை அறிந்த சரஸ்வதி எனக்கும் யோகம் உண்டு எனக்கூறி, "நான் மலடியில்லே... நான் மலடியில்லை என்ற சரஸ்வதியின் குரல் மெஷினின் இரைச்சலை மீறி உடம்புகளை மோதினபடி திரிந்தது."[62]

இவ்வாறு சுப்ரபாரதிமணியன் தம் சிறுதைகளில் குழந்தை இன்மையால் அவர்களுக்கு ஏற்படும் மனப்போராட்டங்களை வெளிப்படுத்துகிறார்.

**காலந்தோறும் சமூக அமைப்பில் பெண்ணின் நிலை**

பரத்தமை, சங்க இலக்கியம் தொல்காப்பியம், திருக்குறள் முதலிய நூற்கள் எல்லாம் பரத்தமை பற்றி விரிவாகப் பேசுகிறது. திருக்குறள் பரத்தமையுறவை வன்மையாகக் கண்டிக்கிறது. தமிழின் முதுபெரும் காப்பியமான சிலப்பதிகாரத்தில்,

1. கணிகையர்
2. காவற்கணிகையர்
3. ஆடற் கூத்தியர்
4. பூவிலை மடந்தையர்
5. கடை கழி மகளிர்
6. வம்பப் பரத்தையர்
7. எண்ணெண் கலையோர்
8. பண்ணியன் மடந்தையர்
9. தாசியர்
10. நாடக மகளிர்

எனப் பல்வேறு வகையான பொதுமகளிர் வாழ்ந்ததாகக் கூறுகிறது. இதில் சிலருக்கு விளக்கமும் அளிக்கிறது. ஆயக்கலைகள் அறுபத்தி நான்கிலும் வல்லவர்களாக விளங்குபவர்களை எண்ணெண் கலையோர் எனவும் இசையில் வல்லவர்களாக விளங்குபவர்களை பண்ணியன் மடந்தையர் என கூறுகிறது. பரத்தையர்,

1. காதற் பரத்தையர்
2. சேரிப் பரத்தையர்

என இருவகையினராக அழைக்கப்பட்டனர். சங்க இலக்கியங்களில்,

1. விலைநலப்பெண்டிர்
2. பொருட் பெண்டிர்
3. பொது மகளிர்
4. விலைமகளிர்

ஆகிய பெயர்களில் அழைக்கப்பட்டனர்.

சுப்ரபாரதிமணியன் சிறுகதைகளில் வரும் பரத்தையர் எவ்வகையில் இதில் தள்ளப்பட்டனர் என்பதைக் கொண்டு நான்கு வகைகளில் பகுத்துப் பார்க்கலாம்.

1. காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள்
2. மனநிலை சரியில்லாத பெண்
3. வறுமையின் காரணமாக தள்ளப்பட்ட பெண்
4. வேலைக்குச் செல்லும் பெண்

என்று பரத்தையர் தொழிலில் ஈடுபவோரையும், சூழ்நிலை காரணமாக இக்குழியில் தள்ளப்பட்டவர்களையும் ஆசிரியர் தம் சிறுகதைகளில் சித்தரிக்கிறார்.

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்

உயிரினும் ஓம்பப் படும்"[63]

என்ற குறள்நெறிக்கேற்ப வாழவேண்டும். ஒழுக்கம் தவறி வாழும் மக்களையும் அவர்களின் செயல்பாடுகளையும் இங்கு பதிவு செய்துள்ளார் ஆசிரியர்.

**காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள்**

காதலால் ஏமாற்றம் அடைந்தவர்கள் பாலியல் தொழிலுக்குத் தள்ளப்படுகின்றனர். தன் ஊருக்கு சுற்றுலா வந்த ஒரு வெள்ளைக்காரனைக் காதலித்து அவனை நம்பி வெளிநாட்டுக்கு வந்தேன். இங்கு வந்த பின்புதான் தெரிந்தது.

"பணத்துக்காக... அந்த ஜெர்மன்காரனுக்கு பெரும்பணம் தேவைப்பட்டது விற்றுவிட்டான். இந்தியாவில் சுற்றுலாப் பயணியாக இந்தியப் பணத்தில் பணக்காரனாக எனக்குத் தெரிந்தவன். இங்கு வந்த பின் தான் தெரிந்தது சாதாரண தோட்டத் தொழிலாளி என்று"[64] அழுது தேம்பினாள் தன்னுடன் பஸ்ஸில் பயணித்த ஒருவரிடம் இதனைப் பகிர்ந்து கொண்டாள். அவர் கூறிய வார்த்தைகள் ஆறுதல் அளித்தது.

"புது ஆண்களிடம் தப்பித்தவறி நான் அழுதுவிடுகிறபோது, என்னைக் கொட்டித் தீர்க்கிறபோதோ இந்த வெள்ளைத்தோல் ஆண்கள் கட்டி அணைத்துக் கொள்வார்கள். முத்தமிடுவார்கள். நிறைய ஆறுதல் சொல்வார்கள். அது ஏதோ ஒன்றின் ஆரம்பமாக இருக்கக்கூடும். அது பாதுகாப்பு எனத் தோன்றும். அது தற்காலிக பாதுகாப்புதான்"[65] என்று அப்பெண் தன் மனதில் நினைத்துக் கொள்கிறாள். இவ்வகை நிலைக்கு ஆளாகும் பெண்களை ஆசிரியர் தம் சிறுகதையில் நன்கு சித்தரிக்கிறார்.

‘அர்த்தநாரீஸ்வரம்’ என்ற சிறுகதையில் வரும் ‘கோகிலா’ ராமகிருஷ்ணனை காதலிக்கிறாள். ஆனால் அவன் திருமணம் ஆகி மூன்று குழந்தைகளுக்குத் தந்தை. ஆனால் அது தெரியாமல் அவனைக் காதலித்து ஏமாறுகிறாள். பின்பு தெரிந்ததும் அவனை நிராகரிக்கிறாள். ஆனாலும் முடியாமல் தவிக்கிறாள்.

“வேண்டா.... பொம்பளே வேணுமுன்னு எங்கிட்ட வர்றது
என்னைக் கேவலப்படுத்துது
உனக்கு பாதுகாப்பு வேண்டாமா?

பாதுகாப்புக்கென்று ஒரு வளையம் தேவைப்பட்டது அவளுக்கு. ஒரு வளையமாய் அவன் இருப்பது தெரிந்தாலும் அதை மீறிக் கொண்டு நுழையும் கால்களைத் தடுப்பது பெரிய கஷ்டமாகவே இருந்தது.”[66]

இனி அவள் திருமணம் செய்து வாழமுடியாது எனத் தெரிந்து அவனுக்கு அடங்கிப் போய்க்கொண்டு வாழ்கிறாள். இவ்வாறு கோகிலாவின் மனப்போராட்டத்தை ஆசிரியர் சுட்டுகிறார்.

‘நீலப்படமும் சுசித்ராவும்’ என்ற சிறுகதையில் சுசித்ரா என்ற பெண்ணை ஒருவன் காதலிக்கிறான். அவளைத் திருமணம் செய்து மகிழ்ச்சியாக வாழவேண்டும் என்று கனவு காண்கிறான். ஆனால் ஒருநாள் நீலப்படம் பார்க்க வேண்டும் என்று சபலப்பட்டு குறுந்தகடு வாங்கிவந்து அதைப் பார்க்கிறான். அதில் அவன் காதலித்த பெண் சுசித்ரா வருகிறாள். அதிர்ந்து போகிறான். “முகத்திலிருந்து உடம்பு முழுவதுமாக ஒரு பெண்ணின் உருவம் திரையில் வந்தபோது உடம்பு பயத்தால் கவ்விக் கொள்வது போலிருந்தது. உடம்பு ஒருவகைப் பதற்றத்துடன் நடுங்க ஆரம்பித்தது. உடம்பின் காமக்கிளர்ச்சியின் தருணத்தில்தான் அகப்பட்டிருக்கிறேனோ என்பதை மறுதலித்துப்

பார்த்தேன். ஆனால் உடம்பு பயத்தால் நடுங்கிக் கொண்டிருப்பது தெளிவாயிற்று"[67] அப்பெண் சுசித்ரா என்பது தெளிவானது.

அவன் அதனைப் பார்த்து அழுது புலம்புகிறான். தன்னை இப்படி ஏமாற்றிவிட்டாளே இவளையா காதலித்தேன் என்று யாரிடமும் சொல்லவும் முடியாமல் ஒருவகை மனப்போராட்டத்திற்கு ஆளாகிறான். இச்சிறுகதையில் பெண்களால் ஏமாற்றம் அடையும் ஆண்களைச் சுட்டுகிறார் ஆசிரியர். அதனால் அவர்கள் எதிர்கொள்ளும் மனப்போராட்டத்தையும் சித்தரிக்கிறார்.

**மனநிலை சரியில்லாத பெண்கள்**

அகப்போராட்டத்தில் இன்றைய சமுதாயத்தில் செல்வந்தர்களாக வாழும் பலருக்குத் தங்கள் குடும்பத்தில் மனநிலை பாதிக்கப்பட்ட குழந்தைகள் பிறந்தால் அவர்களை அவமானமாகக் கருதுகிறார்கள். அதனால் அவர்களை எங்காவது கொண்டு போய் விட்டுவிடுகின்றனர். அவர்கள் பல சீரழிவிற்கு ஆளாகின்றனர். இவர்களை வைத்துப் பராமரிக்கும் சில காப்பகங்களும் இவர்களைத் தவறாகப் பயன்படுத்துகிறது. இதனை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் பதிவுசெய்கிறார்.

'தொடுகை' என்ற சிறுகதையில் மனநிலை காப்பகத்தில் தியாகு வேலைசெய்கிறான். அவனைக் காண அவன் காதலி தனலெட்சுமி வருகிறாள். அப்போது அவள் பார்க்க நேர்ந்த சில சம்பங்கள் அவளை உரையவைக்கிறது. அந்த நீண்ட காம்பவுண்ட் அருகில், சிலர் மனநிலை சரியில்லாத பெண்களிடம் தவறாக நடந்துகொள்கின்றனர். இதனை, "எதற்காக இவர்கள் இப்படி நிற்கிறார்கள் என்று நினைத்தபடி கூர்ந்து

கவனிக்கிறாள். உடம்பு நடுங்குகிறது. பச்சை கவுன் சீருடை அணிந்த பெண்ணின் கழுத்துக்கு கீழே ஒருவனின் இரு கைகளும் இருந்தன. அந்த நோயாளிப் பெண்ணின் முகத்தில் விகாரமாய் சிரிப்பெழுந்தது. அவ்விடத்திலிருந்து வந்த நாற்பது வயதுக்காரன் பேண்ட்டை மேலிழுத்து சரி செய்து கொண்டான். தலை மயிரை ஒதுக்கினபடி இருட்டிலிருந்து வந்த பெண்ணின் பச்சைநிறக் கவுன் மாறுமாறாய் இருந்தது."[68]

இதனைக் கண்ட தனலெட்சுமி நிலைகுலைந்து போகிறாள். இப்பெண்களைப் பாதுகாக்க வேண்டிய இவர்களே இவ்வாறு இருக்கின்றனரே என அழுகிறாள். தியாகுவிடம் சொல்லி ஆண்களை நம்பவே கூடாது குழந்தையாகப் பார்க்க வேண்டிய இவர்களை இவ்வாறு செய்கின்றனரே என மனம் வேதனைப்படுகிறாள்.

இக்கதையில் தனலெட்சுமியின் வாயிலாக மனப்போராட்டத்தை, ஆசிரியரின் உள்ள வெளிப்பாட்டை வெளிக்காட்டுகிறார்.

**வறுமைக் காரணமாக பாலியல் தொழிலுக்கு தள்ளப்பட்டவர்கள்**

இச்சமூகத்தில் பாதி தவறுகள் நடப்பதற்கு காரணம் வறுமை. வறுமையின் காரணமாக பாலியல் தொழிலுக்குத் தள்ளப்பட்டவர்கள் பலரை இச்சிறுகதையில் ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

'நெருப்புக் கோளம்' என்ற சிறுகதையில் ரோகிணி என்ற பெண் தன் வறுமைக்கு முற்றுப்புள்ளி வைக்கவும், ஆறுதல் அற்ற நிலையிலும் மூர்த்தி என்ற ஒருவனுடன் பழகுகிறாள். பின்பு அவன் திருமணம் ஆனவன் என்று தெரிந்தும் அப்பழக்கத்தை விடாமல் தொடர்கின்றனர். பின்பு அதுவே அவளுக்குத் தொழிலாகிறது.

"ரோகிணியின் குரல் நெகிழ்வடைந்தது. கண்கள் பனித்தன. கன்னங்களில் உருண்டோடிய நீரை அவன் சாவகாசமாய் பார்த்துக் கொண்டிருந்தான்."[69] தன் வாழ்க்கை இப்படி ஆகிவிட்டதே என மூர்த்தியிடம் எப்போதுமே அவள் அழுவதுண்டு. இவ்வாறு சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதையில் வறுமையே தான் இத்தொழிலுக்குப் போனதற்குக் காரணம் என்று சித்தரிக்கிறார்.

'ரூபங்கள்' என்ற சிறுகதையில் வரும் பெண் அவளைச் சந்திக்க வரும் ஆண்களை நினைத்துப் பார்க்கிறாள். ஒவ்வொருவரும் அவளை எவ்வாறு கொடுமைப்படுத்துகின்றனர் என்று அவள் மனதில் எண்ண அலைகள் ஓடுகிறது. தன் நிலை இப்படி உள்ளதே கடைசிகாலத்தில் தனக்கு யார் துணை என நினைத்து வேதனை கொள்கிறாள். அவளை இச்சமூகம் எப்படி பார்க்கிறது என்பதை, "மளிகைக் கடையில் காய்கறிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். காய்கறிகளைத் தேர்வு செய்து போடுவதற்காக அவள் சிவப்பு பிளாஸ்டிக் கூடையைத் தேர்வு செய்தாள். மின் ஒளியில் முகத்திற்கு வெகு அருகில் இருந்த சிவப்பு பிளாஸ்டிக்கின் எதிரொளித்த வெளிச்சம் அவள் முகத்திற்குக் கடுமையைக் கொண்டுவந்திருந்தது."[70]

இதனைக் கடைக்கு அருகில் சில ஆண்கள் அவளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவளுக்கே அவளை நினைத்து வெருப்பாக இருந்தது. இனி தன் அடையாளம் இப்படித்தான் இருக்கும் என்று நினைத்துக் கொள்கிறாள். இவள் மனப்போராட்டத்தையே சுப்ரபாரதிமணியன் தம் கதையில் வெளிப்படுத்துகிறார்.

‘உடல் முடிச்சுகள்’ என்ற சிறுகதையில் வரும் சித்ராவின் கணவன் பரத்தையைத் தேடிச் செல்பவன். இதனை அறியும் போதெல்லாம் தடுத்தும் பார்த்தால் இரண்டு பிள்ளைகள் இருந்தும் இது தவறு எனச் சுட்டிக்காட்டியும் அவன் கேட்கவில்லை.

அவன் இத்தவறைத் தொடர்ந்து செய்துகொண்டே இருந்தான். இக்கதையில் வரும் பரத்தையின் உடல் வலிகளை ஆசிரியர் சுட்டுகிறார். “கனத்த பெருமூச்சொன்று அவள் முகத்தில் பரவியது. ரசாயன நெடி கலந்த மண் வாசனை. சுவற்றில் சாய்ந்த வாக்கிலேயே அவளைக் களைப்புறச் செய்துவிட்டான். அவள் உடம்பு அசதியால் மீண்டும் கண்களை மூடிக்கொண்டாள். ஐந்து நிமிடத்திற்கு ஒருமுறை விழிப்பு என்கிறமாதிரி இருந்தது.”[71]

சுப்ரபாரதிமணியன் இச்சிறுகதையின் மூலம் சித்ரா தன் கணவன் அடுத்தவளைத் தேடிச் செல்கிறானே என்ற அவளின் அக உணர்வும், பாலியலில் ஈடுபடும் பெண்களின் வலிகளையும் உளப் போராட்டமாக தன் சிறுகதையில் வெளிப்படுத்துகிறார்.

‘பாதுகாப்பு’ என்ற சிறுகதையில் வரும் கீதா என்ற கதைமாந்தர் பாலியல் தொழிலில் ஈடுபடுவதற்கு அவள் உறவினரே காரணமாகின்றனர். பெற்றோர் இல்லாத கீதா உறவினர் அரவணைப்பில் வளர்கிறாள். அங்கு இருக்கும் உறவுக்காரன் பழனிவேல் அவளை பலாத்காரம் செய்கிறான். தப்பித்துச் செல்கிறாள். ஆயினும் அத்தொழிலிலேயே தள்ளப் படுகிறாள். இதனை சக பெண் ஒருத்தியிடம் சொல்கிறாள்.

“பாத்திரம் கழுவி பொழப்பு நடத்தலாமுன்னு பாத்தா கூட என் வயது இடஞ்சலா இருக்கு. அழுகை கிளம்பியது. அவளது சிவந்த

முகத்து உப்பிலனை பட்டு மின்னியது கன்னம்”[72] என்று அவள் தோற்றத்தையும் அவள் இத்தொழிலுக்கு வரக் காரணம் அவள் உறவினரே என்று அவள் புலம்புவதன் மூலம் அவளின் மனப் போராட்டம் உணர்த்தப்படுகிறது.

**வேலைக்குச் செல்லும் இடத்தில்**

அகப்போராட்டத்தில் வேலைக்குச் செல்லும் பெண்கள் படும் பாலியல் சிக்கல்களும் ஒன்றாகக் கூறலாம். அதிகார வர்க்கம் சிறுசிறு வேலைக்குச் செல்லும் இடத்தில் காமுகர்களில் எத்தனை துன்பத்திற்கு ஆளாகின்றனர் என்பதை தம் சிறுகதைகளில் வெளிக்காட்டுகிறார்.

‘சிதைவு’ என்ற சிறுகதையில் வரும் ருத்ரம்மா வீட்டு வேலைக்குச் செல்லும் பெண் அங்கு பாலியல் தொல்லைக்கு ஆளாக நேரிடுகிறது. அவ்வீட்டின் முதலாளியும், அவன் மகனும் இதனையே தொடர்ந்து செய்கின்றனர். ருத்ரம்மா அவ்வீட்டிலிருந்து வெளியேர முடியாமல் தவிக்கிறாள். அங்கு தோட்டத்திற்கு வரும் ஆட்டைக் கல் எறிந்து விரட்டுகிறாள். அப்போது அவள் மனதில் “தனக்கு பிடிக்காதவர்களை இப்படிக் கல்லெறிந்து துரத்தினால் எப்படியிருக்கும் என ஒரு கணம் ஆசுவாசப்படுத்திக் கொண்டு குரூரத்திருப்திபடலாம் என்று பட்டது. தான் கல்லெறிய வேண்டிய முதல் ஆள் முதலாளியாகத்தான் இருக்கும். கூடவே சின்னவரின் சில்மிஷங்கள் அவளுக்கு அருவருப்பூட்டின. அரும்புகிற மீசையினூடே அவனின் அத்துமீறல்கள் இருந்துகொண்டே இருந்தன”[73] என்ற ருத்ரம்மாவின் எண்ணம் அவளின் மன வேதனைகளை வெளிப்படுத்துகிறது. வேலைக்குச் செல்லும் இடங்களின் பெண்கள் எத்தகைய பாதிப்புக்கு ஆளாகின்றனர் என்பதைச் சித்தரிக்கிறார்.

இவ்வாய்வில் மனித வாழ்வில் மனிதன் சந்திக்கும் அகப்போராட்டக் கூறுகள் மிகுதியான களங்களில் காணப்படுவதை தெளிவுபடுத்தியுள்ளார். காதல் முதல், பாலியல் வரை பெண்கள் இன்பத்திலும் துன்பத்திலும் பல போராட்டங்களை எதிர்கொள்வதை நன்கு சித்தரித்துள்ளார். பெண்ணுக்குரிய போராட்டமும் ஆணுக்குரிய போராட்டமும் வேறுவேறாக அமைந்துள்ளன. திருமணத்திற்கு முன்பும், பின்பும், பணிக்குச் செல்லும் இடத்திலும் ஆணைவிட பெண்ணே மனதளவிலும், உடலளவிலும் பாதிக்கப்படுகிறாள் என்பதை நன்கு அறியமுடிகிறது.

**புறப்போராட்டம்**

அகப்போராட்டம், தன்னிலிருந்தும், குடும்பத்திலிருந்தும் பெரும்பாலும் உருவாகிறது. ஆனால் புறப்போராட்டம் சமூக அமைப்பு, பின்னணி போன்றவற்றால் ஏற்படுகிறது.

தன்னைச் சுற்றியுள்ள உறவுகளாலும் அகப்போராட்டத்திற்கு உட்பட்டதைப் போன்று தான் சார்ந்துள்ள சமூகத்திலிருந்து பலவகைப் போராட்டங்களுக்கு ஆட்படுகிறான். இதனைப் பல சிறுகதைகளில் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். அவையாவன,

1. நட்புறவு
2. உழைப்பின் சிறப்பு
3. கலவரம்
4. சுற்றுச்சூழல்
5. வேலையின்மை
6. வறுமை
7. அதிகார வர்க்கம்

8. சாதி - மதம்

9. கலாச்சாரச் சீரழிவு

போன்றவை புறப்போராட்டங்களுக்குக் காரணமாக அமைகின்றது. ஆசிரியர் தம் உள்ளத்து உணர்வுகளைக் கதைகளில் வரும் பாத்திரங்களில் அழுத்தமாகக் கூறிச் செல்கிறார். இவை சமுதாய அக்கறை உள்ள ஒரு மனிதனை அடையாளம் காட்டுகிறது. அச்சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் இப்புறப் போராட்டங்களை இவர் தம் சிறுகதைகளில் சுட்டுகிறார்.

**சமுதாய உறவு**

குடும்ப உறவுகளோடு மனிதன் வாழ்வு முற்றுப்பெறுவதில்லை. ஒவ்வொரு தனி மனிதனும் அவன் வாழும் சமுதாயத்தின் உறுப்பினராக விளங்குகிறான். அவனுக்கும் அவன் வாழும் சமுதாயத்திற்கும் இடையிலான உறவும், அத்தனி மனித வாழ்க்கையில் மகிழ்ச்சியையும், வருத்தத்தையும், நிறைவையும் தீர்மானிக்கும் ஒரு கூறாக அமைகிறது. எனவே ஒருவன் தன் குடும்பத்தோடும் தன் வாழ்வை பேணிக் காப்பதோடு அவன் வாழ்வு நிறைவடைவதில்லை. இச்சமூகமே அவனை வடிவமைக்க துணைநிற்கின்றது எனலாம்.

இச்சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் தங்கள் நிலையில் ஆற்றவேண்டிய கடமை உண்டு என்பதைச் சங்ககாலப் புலவர் அக்கால நிலைக்கேற்ப எடுத்துரைக்கிறார்.

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே

ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்

களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[74]

என்று சங்கப்புலவர் உரைக்கும் சமுதாயக் கடமைகள் குறிப்பிடத்தக்கன. இப்பாடல் ஒருவன் சமுதாயத்திற்கு ஆற்றவேண்டிய கடமைகளையும் அச்சமுதாயத்தினின்று பெற்றுக்கொள்ளும் பயன்களையும் இணைத்துக் கூறுகிறது.

தாய் மகனை ஈன்றெடுப்பதும், தந்தை அவனை வீரம் பொருந்தியவனாக்குவதும் ஆகிய அவர்தம் கடமைகள் கூறப்பட்டுள்ளன. அவ்வீரனுக்குத் தேவையான வேலினை வடித்துக் கொடுப்பது அவ்வீரன் வாழும் சமுதாயத்தின் மற்றோர் உறுப்பினரான கொல்லனின் கடமையாகிறது. இவ்வாய்ப்புக்களையெல்லாம் பெற்ற அவ்வீரன் தன் நாட்டிற்காகப் போரிடும் போது பகைவனின் யானைப்படையை அழித்துப் பகைவர்களைத் தோற்று ஓடச் செய்து போரிலே வென்று நாட்டிற்குப் புகழைத் தேடித்தருவது அவ்வீரனின் கடமையாகிறது.

வீரன் ஈட்டும் புகழானது அவனுக்கு மட்டுமே உரியதன்று. அப்புகழ் அவ்வீரனின் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் மன்னனுக்கும் என அனைவருக்கும் உரியதாகும். எனவே சமூகத்தில் ஒவ்வொருவரும் ஆற்றும் கடமை அச்சமூகத்தின் மேம்பாட்டுக்கு அவர்கள் ஆற்றும் பங்காக அமைகிறது.

சமுதாய உறவுநிலையை இருவகையாகப் பிரித்துக் காணலாம். அவை, மக்களுக்கிடையிலான உறவு, மன்னனுக்கும் மக்களுக்கும் இடையேயான உறவு. இன்றைய நாளில் மன்னன் என்பது மக்களாட்சி நிலவுகின்ற சூழலில் அரசினைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

சமுதாய உறவினைப் பற்றிச் சித்தரிக்கும் ஆசிரியர் 'நதிக்கரையும், கான்கிரீட் வனங்களும்' என்ற சிறுகதையில் சுரேந்திரன் தன் சொந்த ஊருக்குப் பல வருடங்கள் கழித்து வருகிறான். வேலை காரணமாக சென்றவன் பட்டணத்திலேயே தங்க வேண்டிய நிலை அவனுக்கு. சந்தோஷத்தோடு ஊருக்கு வருகிறான்.

தனக்கு அறிமுகம் இல்லாதவர்களும் அவனோடு பேசும் விதத்தில் மகிழ்ச்சி அடைகிறான். சமுதாயத்தைப் பற்றி நினைக்கும்போது, சமுதாயத்தின் ஒரு பங்கான ஊரினையும் பதிவு செய்கிறார். தான் சந்தித்த தோணிக்காரர் அவனிடம் பாசமாக நடந்துகொள்கிறார். நகர மக்களுக்கும் இங்குள்ளவர்களுக்கும் எத்தனை வித்தியாசம் என்று வியக்கிறார்.

"என்ன தோணிக்காரரே ரொம்ப ஜாலியா இருக்காப்பலே இருக்கு. அவர் அவனைப் பார்த்துச் சிரித்தார். என்ன பட்டணத்து தம்பி... இங்கதா இருக்கீங்களா... ஊருக்கு போயிட்டிங்களோன்னு நினைச்சேன். பட்டணத்துக்காரங்க இந்த ஊரிலே ரெண்டு நாளைக்கு மேல் தங்க மாட்டாங்களே... காலெல்லா பரபரன்னு இருக்குமே."[75]

நகரத்தில் தன் வீட்டிற்கு பக்கத்து வீட்டுக்காரர்கள் யார்? என்று தெரியாமல் வாழும் நகரமக்களை நினைக்கையில், இந்த கிராம மக்கள் எத்தனை நல்லவர்கள் என நினைத்துக் கொள்கிறான் சுரேந்திரன். சமுதாயத்தில் உறவு என்பது எந்தவித பிரதிபலனும் பார்க்காமல் அதுவாக அமைந்து ஒரு புதிய உறவை உருவாக்கி மலர்வதை இச்சிறுகதையின் மூலம் சித்தரிக்கிறார்.

நல்ல விஷயங்கள் சொந்தபந்தங்களில் இருந்து கற்றுக்கொள்வதை விட சமுதாயத்தில் உள்ள உறவுகளின் மூலமும் கற்றுக்கொள்ள முடியும் என்பதை இச்சிறுகதையில் சித்தரிக்கிறார்.

**நட்புறவு**

ஒவ்வொரு மனிதனுக்கும் உறவின் முதல்நிலையாக அமைவது அவனுடைய குடும்ப உறவாகும். அம்மனிதன் குடும்ப உறவைத் தாண்டி வெளியுலகோடு தொடர்பு கொள்ளும்போது அவன் அடையும் அடுத்த உறவாக நட்புறவு அமைகிறது. எனவே, குடும்ப உறவின் மேம்பாட்டில் கருத்தைச் செலுத்த வேண்டிய அதே அளவிற்கு நட்பு மேம்பாட்டிற்கும் உரிய இடம் வழங்க வேண்டும். இதனால் நட்புறவின் மேம்பாடு தனிமனித வாழ்க்கையில் இன்றியமையா இடம் வகுப்பதை அறியலாம். மனித உறவுகளில் நட்பு தனியிடம் வகிக்கின்றது. குடும்பம் மற்றும் சமூக உறவுகளிலிருந்து நட்பு வேறுபட்டு நிற்கிறது.

குடும்ப உறவுகள் இரத்த உறவின் அடிப்படையில் நமது விருப்பத்திற்கு இடமில்லாத வகையிலும் அமைகின்றன. பெற்றோரும் பிள்ளைகளும் நமது உணவிற்கும் விருப்பு வெறுப்புகளுக்கும் ஏற்ப அமையும் உவுகள் என்று கூறிவிட முடியாது. ஆனால் நட்புறவில் ஒருவர் தமக்குரிய நண்பனை தேர்ந்தெடுத்துக்கொள்ள வாய்ப்புள்ளது. இரு உள்ளங்களுக்கிடையே மலர்வதற்கு அடிப்படையாக அன்பு இருத்தல் வேண்டும். அந்த அன்பு அவ்விருவரையும் நெருங்கச் செய்யும் ஆர்வம் கொடுக்கும். அந்நெருக்கம் நட்பை உருவாக்கிவிடும்.

**நட்பின் மேன்மை**

பண்டைத்தமிழர் சமுதாயத்தில் நட்புக்கு உயர்ந்த இடம் வழங்கியுள்ளனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று கூறுகின்றன. நண்பராகக் கலந்துவிட்ட இருவரில் ஒருவரது உள்ளம் புண்படக்கூடாது என்பதில் மற்றொருவர் பெரிதும் கருத்துடையவராக இருப்பர். நண்பர் மனம் விரும்பி நஞ்சினைக் குடிக்கக் கொடுத்தாலும் அதனை ஏற்றுக் குடித்துவிடும் மனத்தைப் பெறுவதே நட்பிற்கு அடையாளம் என்றும் மறுத்தால் அவரது மனம் வருந்தும் என்றெண்ணி அதற்காகவே நஞ்சைக் குடிப்பதும் நட்பிற்கு உரிய சான்றும் என்றும் நற்றிணை கூறுகிறது.

“முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்”[76]

என வரும் நற்றிணை அடிகள் தமிழர் நாகரிகம் நண்பர்கள் வாயிலாக வெளிப்படும் உயர்ந்த பாங்கினை வெளிப்படுத்துவதோடு நட்பின் சிறப்பினை எடுத்துக் காட்டுவதாகவும் அமைகிறது. திருவள்ளுவரும் நட்பின் பெருமையை விளக்குவதற்கு இதே கருத்தினை எடுத்துக்கூறியுள்ளார்.

“பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்”[77]

என்னும் குறள் இங்குச் சுட்டிக் காட்டத்தக்கதாகும். தனிமனித வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் நட்பு பெறும் உயர்ந்த இடத்தை வள்ளுவர் தெளிவாக எடுத்துரைக்கிறார். திருக்குறளில் நட்பு குறித்து ஐந்து அதிகாரங்களை அமைத்திருப்பது வள்ளுவர் நட்பிற்கு வழங்கியிருக்கும் இன்றியமையாமையை உணரலாம். பழைமை என்னும் ஐந்து அதிகாரங்கள் நட்பெனும் உறவு ஒவ்வொரு மனிதனின்

வாழ்விலும் ஏற்படுத்தும் விளைவுகளை நன்கு விளக்குகின்றன. தனிமனித வாழ்வில் உயர்வதற்கு நண்பர்களில் தகுந்த அறிவுரைகள் காரணமாக அமைகின்றன. தன்னிலையில் இருந்து ஒருவன் தாழ்வதற்கும் சில நேரங்களில் பேரழிவைச் சந்திப்பதற்கும்கூட நட்பே காரணமாக இருக்கிறது என்பதை வள்ளுவர் வலியுறுத்திக் கூறவே ஐந்து அதிகாரங்களை அமைத்துள்ளார் எனலாம்.

**இலக்கியங்களில் நட்பு**

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான புறநானூறு பண்டைத் தமிழரின் நட்புச் சிறப்பைப் பதிவுசெய்துள்ளது. பறம்பு மலையின் மன்னனான பாரிக்கும் பைந்தமிழ்ப் புலவரான கபிலருக்கும் இடையே தோன்றிய நட்பைப் புறநானூறு புலப்படுத்துகிறது. பாரி இறந்தபின் அவனது புதல்வியருக்கு மணம் முடிக்கும் பொறுப்பைக் கபிலர் ஏற்றுக்கொள்கிறார். அவர்கள் இருவரையும் இருங்கோவேளிடம் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்துகிறார்.

"நெடுமாப் பாரிமகளிர் யானே
தந்தை தோழன் இவர்கள் மகளிர்"[78]

என்று அவர் குறிப்பிடுமிடத்து மன்னனோடு புலவர் நண்பராயிருத்தல் கூடும் என்பது புலப்படுகிறது. நட்பின் ஆழத்தை உணர்த்தும் சொல்லான தோழன் என்னும் தொடர் பாரி - கபிலர் நட்பு மேம்பாட்டை உலகிற்கு வெளிப்படுத்தும் என்பதில் ஐயமில்லை. சங்க இலக்கியமான புறநானூறு காட்டும் நட்புறவில் கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையார் நட்பு சிறப்புடையதாகும்.

இருவரும் ஒருவரை ஒருவர் காணாது நட்புக் கொண்டவர்கள் என்பதை இலக்கியம் சுட்டுகிறது. புற வாழ்க்கையில் உறவுகளைக்

காட்டிலும் நட்பு பெரிதாக மதிக்கப்படுவதை அறியமுடிகிறது. தமிழ் இலக்கியங்களில் நட்பு பற்றிய பதிவுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. சுப்ரபாரதிமணியன் நட்பால் ஏற்படும் போராட்டங்களை அடையாளம் என்ற சிறுகதையில் சிறப்பாக விளக்கியுள்ளார்.

'அடையாளம்' என்ற சிறுகதையில் சுரேஷ், சீனிவாசன் நல்ல நண்பர்களாக உள்ளனர். சுரேஷ் திருமணத்திற்கு சீனிவாசன் தன் மனைவி திலகவதியுடன் வருகிறான். சுரேஷிற்கு மாப்பிள்ளைத் தோழனாக இருக்கிறான். சில சம்பிரதாயங்களில் மாமனுக்கு பதில் சுரேஷ் சீனிவாசனை அமரவைத்து கௌரவிக்க நினைக்கிறான்.

"மாப்பிள்ளையின் தோழன் மச்சானாக இருக்க வேண்டும் என்கின்றனர். சீனுவே இருக்கட்டுமே, சீனு நீயே குடை பிடிடா... சுரேஷின் வார்த்தைகளை மறுக்கிறதில் அவனின் முதல் விருப்பமே அடிபட்டுப் போகும் என்ற வருத்தத்தைத் தவிர்க்கிற பொருட்டு ஒரு நிமிஷம் சீனிவாசன் யோசித்தான்."[79]

சுரேஷ் தன் நண்பன் தோழனாக வரட்டும் என சொல்லி அவனை தன் குடும்பத்தில் ஒருவனாக நினைக்கிறான். ஆனால் சிறிது நேரத்தில் இது சம்பிரதாயக் கல்யாணம் எனச் சொல்லி அவனை மேடையைவிட்டு கீழ் இறங்கச் சொல்கின்றனர். இதனைக் கண்ட திலகவதி தன் கணவனுக்கு அவமானம் ஏற்பட்டுவிட்டதே என வருந்துகிறாள். அங்கிருந்து சென்றுவிட நினைக்கிறாள்.

"சீனிவாசன் திலகவதியைப் பெண் கும்பலில் தேடினான். தன் வெளியேற்றம் குறித்த நிராகரிப்பு அவளைத் தாக்கியிருக்கக்கூடும். இது

மாதிரிச் சமயங்களில் பெண்களைத் தேற்றுவதற்கான உபாயங்கள் எளிதானவையல்ல என்பது நன்கு தெரிந்தது."[80]

திலகவதி உங்கள் நண்பரால் நீங்கள் அவமானப்பட நேரிட்டதே எனக் கூறி அழுகிறாள். அவன் என்னை பெருமைப்படவைக்க நினைத்தான். ஆனால் அவனுக்கு இந்த அவமானத்திற்கும் சம்பந்தம் இல்லை எனக் கூறி நண்பனை விட்டுக் கொடுக்காமல் பேசுகிறாள். பெண்கள் தனக்குத் தலைகுனிவு என்றாலும் தாங்கிக்கொள்வார்கள். தன் கணவனுக்கு என்றால் பொருக்க மாட்டார்கள் என்பதை திலகவதி உணர்த்துகிறாள். இங்கு இவளின் மனப்போராட்டத்தை அறியமுடிகிறது. ஆசிரியர் நட்பின் மேன்மையை உணர்த்தி இச்சிறுகதையில் திலகவதியின் உள்ளப் போராட்டத்தையும் சுட்டிக்காட்டுகிறார்.

சமூகத்திலிருந்து மனிதன் சந்திக்கும் பிரச்சனைகளில் நண்பர்களாலும் ஒருவருக்கு பல போராட்டங்களுக்கு ஆளாக நேரிடுகிறது என்பதை தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

**உழைப்பின் சிறப்பு**

ஒரு சமுதாயத்தில் தனி மனிதனுக்குக் கொடுக்கப்படும் முக்கியத்துவம் அவரது பொருளாதார நிலையைக் கொண்டுதான் நிர்ணயம் செய்யப்படுகிறது. இத்தகைய பொருளாதார முன்னேற்றத்திற்கு உழைப்பு அச்சாணியாக அமைகிறது. நம் முன்னோர்கள் உழைப்பின் மேன்மையை உணர்ந்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் வேளாண் முறைகளைக் கடைப்பிடித்து வந்தனரே தவிர அன்று தொழில் நுட்பங்களின் வளர்ச்சி இல்லை. கற்கால மனிதர்கள் வேட்டையாடும் தொழிலை அடுத்து அறிவுப்பூர்வமாக மேற்கொண்ட தொழில் வேளாண்மையாகும். அவர்கள் தங்கள் சமுதாயத் தேவையை

உணர்ந்து கடுமையாக உழைத்தனர். ஆகவே, ஒவ்வொரு மனிதனும் நாட்டின் வளர்ச்சிக்குத் தங்களின் பங்கு என்ன என்பதை உணர வேண்டும். இங்கு உழைப்பாளரின் பங்களிப்பைப் போன்று நகர்ப்புறங்களில் நவீனத் தொழில் பெருக்கத்தால் தொழிலாளர்களின் பெருக்கமும் அதிகரித்து வருகிறது. தொழில் வளர்ச்சியைப் பொருத்தவரையில் உழைப்பாளரும் தொழிலாளரும் ஒரேமாதிரியான சமுதாய மதிப்பீட்டைப் பெறுகின்றன.

**தொழிலின் போராட்டம்**

சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் நெசவுத்தொழில் நலிவு, அம்மக்களின் பொருளாதாரப் பற்றாக்குறைக்கு காரணமாகிறது என்பதைச் சுட்டுகிறார்.

நெசவுத் தொழில் நலிவடைந்து வருவதை ஆசிரியர் பின்வரும் சிறுகதைகளில் சுட்டிக்காட்டுகிறார்.

1. நசுக்கம்
2. நவீனம்
3. சிதறல்
4. தகனம்
5. கூரிய நாடா

நெசவு நூற்கும் ஆண், பெண் இருபாலரும் எத்தகைய துன்பத்திற்கு ஆளாகின்றனர் என்பதையும் அவர்களின் வாழ்க்கைத் தரத்தையும் தம் சிறுகதைகளில் குறிப்பிடுகிறார்.

'நசுக்கம்' என்ற சிறுகதையில் நெசவுத்தொழில் செய்பவன் வாழ்க்கைத்தரம் உயரவேயில்லை. பலவகையான வண்ணங்களில்

அவன் ஆடை செய்கிறான். அவன் வாழ்க்கை வண்ணமற்று இருண்டு உள்ளது என்பதை தம் சிறுகதையில் சுட்டுகிறார்.

“பஞ்சுத் துகள்களின் மூச்சில் திணறிப் போவான். வாயைத் திறந்துகொண்டுதான் சுவாசிக்க வேண்டி வந்துவிட்டது. நுரையீரல்களைச் சுற்றிப் பஞ்சுத்துகள்கள் மேகங்களாய்ப் படர்ந்தன. நீருக்காக ஏங்கும் பறவையின் அலகு போலப் படுக்கையின் அவன் வாய் திறந்திருக்கும். புரண்டு அலுத்துப்போய்ப் படுக்கையை விட்டுத் தரையிறங்கிக் கிடப்பதைத் தரை ஈரத்தால் அவனால் உணரமுடிந்தது.”[81]

இவ்வாறு நெசவுத்தொழில் செய்பவன் உடலும் உள்ளமும் நைந்துபோய் இருப்பதை உணரமுடிகிறது. தொழில் நலிவு அதனைச் சார்ந்திருக்கும் மக்களை வறுமைக்கு தள்ளுகிறது என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் சித்தரித்துள்ளார்.

‘நவீனம்’ என்ற சிறுகதையில் பொன்னுச்சாமி நெசவுத் தொழில் செய்பவர். அதில் வரும் வருமானத்தைக் கொண்டு தன் தம்பியை படிக்கவைத்து, தன்னைப்போல் இந்த தறிக்குழிக்குள் கஷ்டப்பட வேண்டாம் என நினைத்துப் படிக்கவைத்தார். அவன் படித்து வேறு வேலை செய்யும்போது இவர்களை வந்து பார்க்கிறான்.

“கொடுத்து வெச்சவன் படிச்சதுனாலே இந்த தறிக்குழியிலெ உக்காரதிலிருந்து தப்பிச்சே. உங்கண்ணன் பண்ணின பெரிய காரியம் உன்னெப் படிக்க வெச்சது. நல்ல புண்ணியத்தை கட்டிட்டான் உங்கண்ணன்.”[82]

இந்த நெசவுத் தொழிலைச் செய்தால் வாழ்வில் முன்னேற முடியாது. காலம் முழுவதும் கஷ்டப்படவேண்டும் என அம்மக்கள்

நினைக்கும் நிலையில் உள்ளது அத் தொழில் என்பதை சுட்டுகிறார் ஆசிரியர்.

'சிதறல்' என்ற சிறுகதையில் சின்னமினி என்பவர் நெசவு நூற்கும் குடும்பம். மனைவியும் அவரும் அதில் கஷ்டப்பட்டு வேலைசெய்து தன் பிள்ளைகளைப் படிக்க வைக்கின்றனர். அப்போது சின்னமினியின் மனைவி அதில் படும் கஷ்டத்தால் புலம்பிக்கொண்டே இருப்பாள். இதனை, "அந்தக்காலத்தில் 'வேன்' வைத்திருந்த பெரிய குடும்பம். ஓட்டல் வைத்து உபகாரமாய் இருந்த தாத்தா... போக்கற்று நெசவு குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டது. நெசவுக் குழிக்குள்ளே அமிழ்ந்துபோன வாழ்வு, இனி மீளாது மீளாது என்பாள்."[83]

இவளின் கஷ்டத்தை புலம்பித் தீர்க்கட்டும் என்று அவனும் கண்டுகொள்ள மாட்டான். தன் பிள்ளைகளாவது மீளட்டும் என நினைத்துக் கொள்வான் சின்னமினி.

"இந்த தறிக்குழியிலிருந்து அவங்களாச்சும் மீளனும்... தப்பிக்கணும். தலைமுறை தலைமுறையா தறிக்குழி நமக்கெல்லா சவக்குழியா இருந்தது போதும்"[84] என்று சின்னமினியின் எண்ணம் இத்தொழில் இருக்கும் நிலையை நமக்கு காட்டுகிறது. அத்தொழில் வளர்ச்சியின்மையால் மக்களுக்கு இந்நிலை ஏற்படுகிறது என்பதை ஆசிரியர் இப்பாத்திரங்கள் வழி வெளிப்படுத்துகிறார்.

நெசவுத் தொழிலில் ஈடுபடும் மக்கள் தொடர்ந்து போராட்டங்களைச் சந்திக்கின்றனர். பசியும், பட்டினியும் இவர்கள் அவ்வப்போது சந்திப்பதால், இத் தொழிலை 'சவக்குழி' என்றே ஆசிரியர் குறிப்பிடுகிறார். கல்வி, வேலைவாய்ப்பு, தொழில் முன்னேற்றம போன்றவற்றுக்காக

போராட்டங்களைச் சந்தித்து வருவதை இவரது கதைகள் தெளிவாக உணர்த்துகின்றன.

**கலவரம்**

புறத்திலிருந்து மனிதன் சந்திக்கும் முக்கியப் போராட்டங்களில் கலவரமும் ஒன்று. யாரோ ஒருவருக்காக நடக்கும் கலவரத்தில் தனிமனிதன் பாதிப்படைகிறான். இதனால் அவனது வாழ்வாதாரம் பாதிக்கப்படுகிறது. எனவே சமூகத்திலிருந்து சந்திக்கும் முக்கிய போராட்டங்களில் கலவரமும் ஒன்றாகும்.

மனிதனின் உரிமைகள் மறுக்கப்படும்போதும், அவனது ஆசைகள் நிராகரிக்கப்படும்போதும் அங்கு எழும் உரிமைப் போராட்டமே கலவரமாக மாறுகிறது. இக்கலவரங்கள் மக்களுக்கு இடையூறாக அமைந்து அவர்களின் அன்றாட வாழ்க்கையை பாதிக்கிறது என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்துகிறார்.

கலவரங்களைச் சுட்டிக்காட்டும் சிறுகதைகள் பின்வருமாறு:

| சிறுகதை | கதைமாந்தர்கள் |
|---|---|
| 1. வெடி | சுப்பையா |
| 2. தீயாப் பறவைகள் | சண்முகம், பிரபு |
| 3. நரகத்திலிருந்து நகரத்திற்கு | அருள், சாந்தி |
| 4. முற்றுகை | சின்னசாமி |
| 5. ஒரு துப்பாக்கியும் சில பறவைகளும் | மகுடேஷ்வரன், சின்னசாமி |
| 6. குவியல் பலிகள் | கதையாசிரியர் |

போன்ற சிறுகதைகள் மக்கள் எதிர்கொள்ளும் புறப்போராட்டங்களைச் சிறப்பாக வெளிப்படுத்துகின்றன.

‘வெடி’ என்ற சிறுகதையில் சுப்பையா என்ற கதைமாந்தர் தன் ஊரில் குடிக்க நீரின்றி மக்கள் அவதிப்படுவதால் கிணறு வெட்டுகிறான். பாதி வெட்டிய நிலையில் இன்னும் சிறிது வெட்டினால் நீர் வந்துவிடும் நிலை. ஆனால், ஒரு பாறை உள்ளது. அதை வெடிவைத்து தகர்த்தால் நீர் வரும். அப்போது அவ்வூரில் மொழிப்பிரச்சனை ஏற்பட்டு கலவரமாக மாறுகிறது. யாரும் வெடி வெடிக்கக்கூடாது எனக் காவல்துறை ஆணை பிறப்பிக்கின்றது. இதனைக் கேட்டதும் சுப்பையன் வருந்துகிறான்.

“கிணறு வெட்டுகிறவன் உபயோகப்படுத்தும் வெடிமருந்து கூட விற்கப்படக் கூடாது என்று வெடிமருந்துக் கடைகள் சீலிடப்பட்டன. வெடி மருந்துகள் இல்லாமல் எத்தனை நாளைக்குத் தான் பாறைகளை கடப்பாரையால் தகர்த்துக் கொண்டிருக்க முடியும்”[85] என்று கூறி வருத்தப்படுகிறான். ஒருசிலரின் தவறான நோக்கத்தால் சாதாரண பாமர மக்களும் பாதிக்கப்படுகின்றனர் என்பதை ஆசிரியர் இக்கதையில் சுட்டிக்காட்டுகிறார்.

‘தீயாப் பறவைகள்’ என்ற சிறுகதையில் சண்முகம், பிரபு இருவரும் பள்ளியில் பயிலும் மாணவர்கள். இருவரும் அவ்வூரில் பறவைகளையும், ஹெலிகாப்டர்களையும் பார்த்து தானும் அதுபோல் பறக்கவேண்டும் என ஆசைப்படுவார்கள். ஹெலிகாப்டர் போகும்போதெல்லாம் அதனை நானும் ஓட்ட வேண்டும் எனச் சொல்லிக் கொள்வார்கள். ஒருமுறை ஹெலிகாப்டரில் இருந்து குண்டுகள் விழுந்து வெடித்ததை இருவரும் பார்த்து அதிர்ந்து போகின்றனர். அதிலிருந்து அவ்வாசையே இருவருக்கும் விட்டுப் போகிறது. மற்றொரு முறை நடந்த குண்டு வெடிப்பில் பிரபுவின் வீடு

கருகியிருக்கிறது. சண்முகம் தேடிவந்து பார்த்ததும் பயத்துடன் நிற்கிறான்.

"குண்டு விழுந்து குழியான முற்றம் பிறந்து விரிந்தும் இருந்த கதவுகள். இப்போது யாருமில்லை என்பதன் அடையாளமாகத் திறந்து கிடந்தன. தீவைத்துக் கொழுத்தினதின் மிச்சம்போல இருந்தன."[86]

இதுபோன்ற கலவரங்களைப் பார்க்கும் பெரியவர்களோடு, மாணவர்களும் பாதிப்புக்கு உள்ளாகின்றனர். இவர்களின் வருங்காலக் கனவுகளும் குழைந்துபோகிறது என்பதை சுப்ரபாரதிமணியன் சுட்டுகிறார்.

**சுற்றுச்சூழல்**

மனித வாழ்க்கையில் ஐம்பெரும் பூதங்களாகக் கூறப்படும் நீர், நிலம், நெருப்பு, காற்று, வான் ஆகியவை தற்காலத்தில் மிகப்பெரிய போராட்டங்களுக்கு வித்திடுகின்றன. இயற்கையோடு இயைந்த வாழ்வே போராட்டம் இல்லாத வாழ்க்கையாகும்.

இயற்கை, வாழ்க்கை, இலக்கியம் என்ற இம் மூன்றும் ஒன்றுக்கொன்று நெருக்கமான தொடர்புடையவை. ஒன்றிலிருந்து மற்றொன்று தோன்றுவதற்கும் இடமானவை. நிலம், நீர், காற்று போன்றவை தூய்மையாக இருப்பது மனித சமுதாயத்திற்கு மட்டுமின்றி அனைத்து உயிர்களின் வாழ்விற்கும் அடிப்படை ஆதாரமானவை. இப்பொருள்களின் தூய்மை குன்றும்போது அது உயிர்களின் உடல் நலத்திற்குக் கேடு விளைவிக்கும். மனிதனைப் பொறுத்தவரை உடல்நலம் குன்றும்போது அவன் உள்ளத்தாலும் பாதிக்கப்படுகிறான்.

**சுற்றுப்புறச் சூழ்நிலை**

"ஈக்கோலஜி' என்ற சொல்லானது வீடு அல்லது நிலையம் என்ற பொருள் கொண்ட 'ஆய்க்கோஸ்' (oikos) என்ற கிரேக்க மொழிச் சொல்லிலிருந்து உருவானதாகும். ஆகவே இயற்கையின் குடும்ப அமைப்பு எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது என்று ஆராய்வது சுற்றுப்புறவியல் (Ecology) ஆகும். பொதுவாகச் சொல்லின், உயிர்களுக்கும் அவை வாழும் சுற்றுப்புறத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பை ஆராயும் அறிவியல் சுற்றுப்புறவியல் எனப்படும். எனவே இயற்கையான நிலைகளில் வாழும் உயிரிகளுக்கும் அவைகளின் சூழ்நிலைகளுக்கும் இடையேயுள்ள உறவுகள் எவ்வாறு அமைந்துள்ளன என்று அறிவதே சூழ்நிலையியலின் நோக்கமாகும்."[87]

மக்களின் சுயதேவை கருதி உலகளவில் காடுகள் வெகுவாக அழிக்கப்பட்டு வருகின்றன. அறிவியல், தகவல் தொழில்நுட்பம் முதலிய அதிவிரைவான வளர்ச்சிப் போக்குகள், இயற்கையிலிருந்து மனிதனைப் பிரித்துக் கொண்டுள்ளன.

ஒரு நாட்டின் பரப்பளவில் குறைந்தளவு 33 விழுக்காடு காடு இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அந்நாடானது எல்லாவகையான வளங்களும் நிறையப் பெற்று, மக்கள் ஆரோக்கியத்துடன் வாழ்வதற்கு ஏற்ற நிலையைப் பெறும் என்று பி.எல்.மணி அவர்கள் சுட்டுகிறார்.

இன்று உலகம் தழுவிய பொதுவான தட்பவெட்பக் காலநிலையாக மாற்றமடைந்து வருவதைப் பலரும் இப்பொழுது உணர்கிறோம். உலக நாடுகள் யாவும் நிலச் சீர்கேடு நீர்ச் சீர்கேடு, காற்று மாசுபாடு, ஒலி மாசுபாடு என்ற நிலையில் பாதிக்கப்பட்டுள்ளன.

இயற்கை என்று சொல்லும்போது பெரிய மலைத் தொடர்கள், அங்கு வீழ்கின்ற அருவி, குளிர்ந்த நீரோடைகள், பருவத்திற்கு ஏற்ப பூத்த மலர்கள், வண்டுகளின் ரீங்காரம், பறவைகளின் சப்தம் போன்றவைகள் இன்று கற்பனையில் மட்டுமே பார்க்கும் காட்சிகளாகிவிட்டன. எனவே சுற்றுப்புறச் சூழல் பற்றிய விழிப்புணர்வு கட்டாயம் தேவைப்படும் ஒன்றாகும்.

பண்டைய மக்கள் இயற்கை சார்ந்த வாழ்க்கையை வாழ்ந்தனர். எனினும் இயற்கை வளங்களின் பயன்பாடு வேண்டப்படும்போது அதற்கான விழிப்புணர்வுடன் செயல்பட்டனர். வனங்களின் பெருக்கம் பயனுடையது என்பதை அறிந்திருந்தனர். எனவே இயற்கைச் சூழலுக்கேற்பத் தமது வாழ்க்கை முறைகளை அமைத்துக்கொண்டு வாழ்ந்தனர்.

இவர்தம் படைப்புகளில் சுற்றுச்சூழல் பாதிப்பை விரிவாகவும், விளக்கமாகவும், உயிரோட்டமாகவும் காட்டுகிறார். இவர் சுற்றுச்சூழலில் ஆர்வம் கொண்டவர் என்பதை இவர்தம் படைப்புகள் வெளிப்படுத்துகின்றன.

'சார்ந்து நிற்க ஒரு மரம்' என்ற சிறுகதையில் அருண் இயற்கையை மிகவும் நேசிப்பவன். தன் வாழ்க்கை இயற்கையோடு இயைந்ததாகவே இருக்க வேண்டும் என ஆசைப்படும் ஒரு மாந்தர். இதனை, "கண்களுக்குள் ஆகாசப் பரப்பை இவ்வளவு தூரம் அடக்க முடியுமா? பொது சுமக்கும் இத்தனை மேகங்களை ஆகாயம் தாங்கிக் கொள்ள முடியுமா? தொடு வானம் என்பதை இன்றுதான் காண முடிந்தது. இயற்கையோடு ஒன்றிப்போகிற சுகத்தை அனுபவிப்பது ஒரு பெண்ணை

நுகர்கிற மாதிரியானது என்ற உணர்வு உடம்பு பூராவும் பரவி நின்றது."[88]

இயற்கையை மனிதன் நேசிக்க ஆரம்பித்தாலே சுற்றுச்சூழல் சிறப்பாக இருக்கும் என்பதை அருண் என்ற கதைமாந்தர் வாயிலாக சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

'மணல்' என்ற சிறுகதையில் செந்தில் என்ற கதைமாந்தர் தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் கழிவுகள் எத்தகைய பாதிப்புகளை ஏற்படுத்துகின்றன, இதே நிலை நீடித்தால் தலைமுறைகள் என்னவாகும், ஆறு, குளம் எல்லாம் கழிவுநீர் என வருந்துகிறார். இச்சிறுகதையில் நொய்யல் என்ற ஆறு எத்தகைய பாதிப்புக்கு ஆளாகியுள்ளது என்பதை வெளிக்காட்டுகிறது.

"மாட்டுவண்டிகளில் சிலர் கழிவுகளைக் கொண்டுவந்து பாதைகளின் ஓரத்தில் கொட்டிவிட்டுப் போவது சமீபகாலமாய் அதிகரித்திருந்தது. ஆற்றின் கரை என்பது சௌகரியமானது என்பது போல் மழைக் காலத்தில் அவை உருகி ஆற்றில் கலந்துவிடும்."[89]

நொய்யல் சலசலத்து மெல்லச் சாயக் கழிவுகளாய் ஓடிக் கொண்டிருந்தது. இருபுறமும் வறண்ட சாயத்துணுக்குகளாய் மணல் நிறம் மாறி விரிந்திருந்தது" என்று கூறுவதிலிருந்து நொய்யல் என்ற ஆறு சாயக்கழிவால் எத்தகைய நிலைக்கு ஆளாகியுள்ளது என்பதையும், இயற்கையின் பொக்கிஷமான ஆறு, குளங்களை நாம் பாதுகாக்காததால் நாம் எத்தகைய இடர்ப்பாடுகளைச் சந்திக்கின்றோம் என்பதையும் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளார்.

‘ஈரம்’ என்ற சிறுகதையில் மக்கள் வசிக்கும் ஊருக்கு அருகே தொழிற்சாலைகள் இருப்பதால் அதிலிருந்து வெளிவரும் இரசாயனக் கழிவுகள் அங்குள்ளவர்களுக்கு எத்தகைய பாதிப்பை ஏற்படுத்துகிறது என்பதையும் அங்கள்ள ஆறு, குளம் ஆகியவற்றில் ரசாயனக் கழிவு கலப்பதால் அதில் உள்ள உயிர்களும் அழிந்து போகின்றன என்பதையும் அங்குள்ள மனிதர்களுக்கு ஏற்படும் நோய்களையும் தம் சிறுகதையில் சுட்டுகிறார்.

“சாயக் கழிவு மழைத் தண்ணீரோடு கலந்து பதினைந்து இருபது மைல்களுக்குப் பரவ எல்லா சாயமாகிவிடுகின்றன என்று தூரத்து ஊர்க்காரர்களெல்லாம் அலறிக்கொண்டிருந்தனர். வீட்டிற்கு வரும் பூச்சிகளை முதலில் கொசு என்றுதான் நினைத்தோம். அவை கொசுக்களல்ல என்று தெரிவதற்கே பல மாதமாகிவிட்டது. அவை ஏதோ ஒரு வகை பூச்சிகள். ரசாயனப் பூச்சிகள்.”[90]

‘நொய்யல்’ என்ற சிறுகதையில் ராமன் தன் சிறுவயதில் இந்த நொய்யல் ஆறு எப்படி இருந்தது. இன்று தொழிற்சாலைக் கழிவுகளால் ரசயானச் சாக்கடையாகிவிட்டதே என்று வருந்துகிறான். இந்த ஆற்றை கடந்து செல்லும் யாருக்கும் மனம் உறுத்தவில்லையா என்று தன்னையே கேட்டுக்கொள்கிறான். இதே நிலை நீடித்தால் மனிதர்கள் அனைவரும் ஒருநாள் இறக்க வேண்டிவரும் என நினைத்துக் கொள்கிறான். அவை, “இரண்டாம் குடிநீர்த்திட்டம், மூன்றாம் திட்டம் என்றெல்லாம் வந்துவிட்ட பின்பும் ஒரு குடம் நீர் ஒரு ரூபாய்க்கு வாங்கும் கேவலம் குறித்து யாராவது முணுமுணுக்க மாட்டீர்களா? பட்டறைகளின் கழிவுகளின் கிடங்காகிவிட்டது. ஆறு வெவ்வேறு வகையான சாயக் கலவைகள் ஒன்றுசேர்ந்து கறுத்த சாக்கடை போல்

எங்குமாய் வியாபித்து ஓடிக்கொண்டிருந்தது. உடம்பு முழுக்க சொறிபிடித்து அலையும் விநோதப் பிராணி போலாகிவிட்டது நொய்யல்"[91] என்று கூறுவதிலிருந்து ஆற்றுநீர் எவ்வகையில் பாதிப்படைந்து கொண்டிருக்கிறது, நாம் நீர்நிலைகளை பாதுகாக்காது பாழாக்கிக் கொண்டு இருக்கிறோம் என்பதை தம் சிறுகதைகளில் ஆதங்கத்துடன் சுப்ரபாரதிமணியன் சித்தரித்துள்ளமையை அறியமுடிகிறது.

நிலம், நீர், காற்று ஆகியவை மனித வாழ்க்கை இயங்குவதற்கு அடிப்படையானவை. ஆனால் இன்றைய சுற்றுச் சூழல் மாசடைவதால் மக்கள் பல சிக்கல்களை, போராட்டங்களை அனுபவித்து வருகின்றனர். இவை உலகந் தழுவிய சமூகவியல் போராட்டமாக மாறும் என்பதை இவரது சிறுகதைகள் உணர்த்துகின்றன.

**வேலையின்மை**

பொருளாதாரப் பற்றாக்குறை காரணமாக இருப்பது வேலையின்மையே. படித்துவிட்டு எத்தனையோ இளைஞர்கள் வேலையில்லாது கஷ்டப்படுகின்றனர். படிக்கும்போதே இச்சந்தேகம் தொடங்கிவிடுகிறது. சமூகத்தில் நடக்கும் பல பிரச்சனைகளுக்கு வேலையின்மையும் ஒரு காரணமாகிறது. படித்தவனுக்கு வேலையின்மை ஒரு விரக்தியை ஏற்படுத்துகிறது. இதனைச் சுப்ரபாரதிமணியன் பல சிறுகதைகளில் சுட்டிக்காட்டுகிறார்.

'சூழல்' என்ற சிறுகதையில் தங்கவேல் படித்துவிட்டு நல்ல வேலைக்கு காத்திருக்கிறான். ஆனால் கிடைக்கவில்லை. அப்போது வீட்டிலும் அவனுக்கு ஆண்பிள்ளை வேலைக்குச் செல்லாமல் இருக்கிறானே என நச்சரிப்பு தொடங்குகிறது. பணம் கொடுத்தால் தான் வேலை கிடைக்கும் என்ற சூழலை வீட்டில் சொல்கிறான். ஆனால்

பணம் தயார் செய்ய முடியவில்லை. அவன் குடும்பத்தாரால் இதனையே "இனி எம்ளாய்மென்ட் எக்சேஞ்சுக்கு நடக்க வேண்டியதுதா. அந்த ஆபிசர் அப்பாதுரை ஏதாச்சும் பண்ணுவாரா? காசு குடுக்கணும், இல்லாட்டி ஒண்ணும் நடக்காது. டெம்ப்ரவரி போஸ்ட்டுக்கே ஆயிரம் ஆயிரமா கேக்கறாங்க"[92] என்று கூறுவதன் மூலம் சமூக அவலம் வெளிப்படுகிறது. வேலைவாங்க திறமை தேவையில்லை. அரசியல் பலமும், பணபலமும் இருந்தால் போதும் என்ற நிலையை சுப்ரபாரதிமணியன் தன் சிறுகதையில் சமூகநிலையை வெளிப்படுத்துகிறார்.

'எல்லோருக்குமான துயரம்' என்ற சிறுகதையில் வேலையில்லாத ஒருவன் தன் குடும்பத்தையும் நடத்தமுடியாமல் அவர்களாலும் வெறுக்கப்பட்டு நண்பர்களின் முன்பும் தலைகுனிந்து நிற்கிறான். வாழ்க்கையையே வெறுக்கும் ஒரு இளைஞனாக மாறிவிடுகிறான். இதனை, "மனநோயாளி மாதிரி ஏண்டா இப்படித் திரியறே... நீ பிரண்ட்ஸ்களோடு தங்கறது சரி... ஆனா வேலையில்லாதவன்னா இப்படித்தா இருக்கணுமா. வாழ்க்கையை நல்லா பார்க்க முடியாதா, கூச்சத்தையோ தாழ்வு மனப்பான்மையையோ விட்டுத் தள்ளு"[93] என்று நண்பன் ஆறுதல் சொல்லுகிறான். இவ்வகையில் வேலையின்மை இளைய தலைமுறையினரை எவ்வளவு மனவிரக்திக்கு ஆளாக்குகின்றது என்றும் எதிர்காலத்தில் மிகப் பெரிய போராட்டம் வெடிக்கும் என்பதையும் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் குறிப்பிடுகிறார்.

**வறுமை**

புறப்போராட்டத்தில் மனிதன் தன் அடிப்படைத் தேவைகளைக் கூட நிறைவு செய்யமுடியாத நிலையில் இருப்பவனை வறுமை

நிலையில் உள்ளவன் என வரையறைச் செய்வர். வறுமையே ஒருவனைத் தவறுசெய்யத் தூண்டுகிறது எனலாம். இவ்வறுமையை வள்ளுவரும்,

"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு"[94] (குறள்.752)

பொருள் இல்லாதவரை வேறு நன்மை உடையவராக இருந்தாலும் எல்லாரும் இகழ்வார். செல்வரை வேறு நன்மை இல்லை என்றாலும் சிறப்புச் செய்வர் என்கிறார். ஔவையும் 'கொடிது கொடிது வறுமை கொடிது' என்கிறார்.

சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் வறுமையில் உள்ள கதை மாந்தர்களை, அவர்களின் வாழ்க்கைத்தரத்தினை படம்பிடித்துக் காட்டுகிறார். பெரும்பான்மையான கதைகளில் வறுமை நிலையினை விளக்குகிறார். அவையாவன:

| **சிறுகதை** | **கதைமாந்தர்கள்** |
|---|---|
| 1. வசந்தவிஹார் | சிவராம் |
| 2. ஒரு தற்காலிக உறவு | நடராஜன் |
| 3. மாறுதடம் | சிவக்குமார் |
| 4. அரேபியக் கிராமம் | சொக்கநாதன் |
| 5. கடைசிப் பார்வை | வயதானப் பெரியவர் |
| 6. எல்லையா | எல்லையா |
| 7. நிலை | துரைராஜ் |
| 8. வதை | பொன்னுசாமி |
| 9. வருகை | சுதாகர் |
| 10. வருகை | செல்லம்மா |

போன்ற சிறுகதைகளில் வறுமையால் இப்பாத்திரங்களின் நிலையினைக் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்துகிறார்.

‘வசந்த விஹார்’ என்ற சிறுகதையில் சிவராம் என்ற கதைமாந்தர் தன் வீட்டின் ஒரு பகுதியை வாடகைக்கு விட்டு அதில் வரும் பணத்தில் தன் குடும்பத்தை நடத்துகிறார். அந்த வருமானமே அனைவருக்கும் போதுமானதாக இல்லை. இந்த நிலையில் சிவராமின் மகன் போதைக்கு அடிமையாகி இன்னும் சிவராமிற்கு கஷ்டத்தைக் கொடுக்கிறான். ஒருமுறை ராமகிருஷ்ணன் போதையில் எழாமல் இருக்கிறான். இதனை, “இவனுக்குத் தூக்கமே தெளியலீங்க. ஆஸ்பத்திரிக்குப் போறோம். பயமாயிருக்குங்க. சிவராமிற்கு ஆறுதலாய் வார்த்தைகள் எதுவும் சொல்லத் தோன்றவில்லை. வைத்தியச் செலவிற்கான பணம் பற்றித்தான் யோசனை வந்தது. ஐம்பது ரூபாய் அட்வான்ஸ் வாங்கிப் பாக்கெட்டில் வைத்திருப்பதும் ஞாபகம் வந்தது.”[95]

சிவராம் தான் வைத்திருக்கும் ஐம்பது ரூபாயில் வைத்தியம் செய்யமுடியாது என்று வருந்துவதாக கதை வருகிறது. மருத்துவச் செலவைக்கூட சமாளிக்கமுடியாத குடும்பங்களை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் காட்டுகிறார். இவ்வகையில் வறுமையில் வாடும் மக்களை ஆசிரியர் அடையாளம் காட்டுகிறார்.

‘ஒரு தற்காலிக உறவு’ என்னும் சிறுகதையில் நடராஜன் என்பவர் வயதான பெரியவர். இவர் பிள்ளைகள் இல்லாத நிலையில் தன் மனைவி சிவகாமியுடன் வசித்து வருகிறார். இவர்கள் தனக்குச் சொந்தமான வீட்டை வாடகைக்கு விட்டுவிட்டு தான் ஒரு சிறிய அறையில் வசித்துவருகின்றனர். அந்த வாடகைப் பணத்தில்தான் இவர்களின் மருத்துவச் செலவுக்கு ஆதாரம். இவர் வீட்டில் குடியிருப்பவர் சம்பத் வீட்டின் வசதிபோதவில்லை என்று வேறு வீடு பார்க்கிறார். இதை

அறிந்த நடராஜன் வருத்தப்படுகிறார். இந்த வாடகைப் பணம் கிடைக்காவிட்டால் எப்படி குடும்பம் நடத்துவது என்று கலங்குகிறார்.

"என்னங்க... நான்கூட வேற எடத்துக்கப் போகலாமுன்னு பார்க்கிறேன். நடராஜிற்கு சட்டென முகம் இருண்டுவிட்டது. கலவரச் சூழலை உணர்ந்தவர் மாதிரி ஆகிப்போனார். சொல்லியிருக்க வேண்டாமோ எனப்பட்டது சம்பத்திற்கு."[96]

இவ்வாராக நடராஜனின் குடும்பச் சூழல் அமைந்துள்ளதை ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். வயதான முதியவர்கள் சம்பாதிக்கமுடியாத நிலையில் அவர்கள் வாழ்க்கை எவ்வாறு ஓடும் என்பதைச் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் உணர்த்தியுள்ளார். இவரின் பல சிறுகதைகள் வறுமையைச் சுட்டும் விதத்திலேயே அமைந்துள்ளன.

'மாறுதடம்' என்ற சிறுகதையில் சிவக்குமார் என்பவர் தனியார் நிறுவனத்தில் வேலை செய்பவர். முதலாளியிடம் ஏற்பட்ட மனக்கசப்பின் காரணமாக வேலையில் இருந்து நீக்கப்பட்டார். பின்பு எங்கும் வேலையில் சேரமுடியவில்லை. குடும்பமே அவர் ஒருவரின் வருமானத்தைத்தான் நம்பி இருந்தது. பின்பு போதைப்பொருள் கடத்தல் தொழிலில் இறங்கிவிடுகிறார்கள். இதனை,

"எத்தனை பொட்டலம் வேணும்...?"

உட்கார்நதிருந்தவன் காலில் செய்த சிகரெட்டில் உள்ளங் கையிலிருந்த துகள்களை நிரப்பினான். புகை விட்டான்,

"எட்டு..."

"செரி எதுக்கும் ஜாக்ரதை"

பொட்டலமொன்றைப் பிரித்துப் பார்த்து நசுக்கிப் பார்த்தான்."[97]

இவ்வாறு நடராஜன் வேலையில்லாத நிலையில் தவறான பாதையை நோக்கிப் பயணிப்பதை பார்க்க முடிகிறது. வறுமை மனிதனை தவறான பாதைக்கு அழைத்துச் செல்கிறது என்பதையே சுப்ரபாரதிமணியனின் இச்சிறுகதை சுட்டுகிறது.

வறுமை மனிதனை எந்த நிலைக்குத் தள்ளும் என்பதை ஆசிரியர் இக்கதை மூலம் உணர்த்துகிறார். எனவே புறப்போராட்டங்களுள் முக்கியக் காரணமாக இருப்பது இவ்வறுமையே என்பதை உணரமுடிகிறது.

**அதிகார வர்க்கம்**

பணம் படைத்தவர்கள் அவர்களிடம் வேலைசெய்யும் ஏழை மக்களை வாட்டி வதைப்பதும் பதவியில் உள்ளவர்கள் சாதாரண மக்களை துன்புறுத்துவதும் சகஜமாகிவிட்டது. இவ்வகையினரை அதிகார வர்க்கம் என்கிறோம். இவ்வர்க்கத்தினர் தன் பணம், பதவி, பலத்தினை அவர்களின் சுயநலத்திற்கு எவ்வாறு பயன்படுத்துகின்றனர் என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்துகிறார். அவை, ‘எல்லோருக்குமான நேசம்’ என்ற சிறுகதையில் சிவக்கண்ணு பேப்பர் புரக்குபவன். அவன் ரோட்டில் படுத்திருக்கையில் போலீஸ்காரன் ஒருவன் தடியால் அடித்து எழுப்புகிறான். பயந்துபோய் எழுகிறான் சிவக்கண்ணு. ஒரு அலுக்குப் பை வைத்திருக்கிறான். அதில் கொஞ்சம் சில்லரை உள்ளது. அது என்ன கொலுசா எனக் கேட்டு மிரட்டுகிறான் போலீஸ்காரன். இதனைக் கொடு என அப் பையைக் காவல்நிலையத்திற்குக் கொண்டு செல்கிறான். சிவக்கண்ணு நான் என்ன செய்யவேண்டும்? எனக் கேட்க அதற்கு போலீஸ்காரன் இப்பகுதியில் ஒரு காளைமாடு திரிகிறது அதனைப் பிடித்துக்கொண்டுவா எனக் கூறிச்

செல்கிறான். அவை "போலீஸ்காரர் சிவக்கண்ணனின் தலைமுடியைப் பிடித்தார். விர்ரென்று மேலே இழுத்தார். மயிர்க்கால்கள் குத்திட்டு வலி தந்தது அவனுக்கு. அய்யோ என்றான். எந்திரிடா கால்ல வுழுந்ததுனாலே தப்புச்சே... என்னடா போலீஸ்காரன் வந்ததும் என்ன பண்ணனும்னு கேட்டுக்கிட்டு முழங்கால்ல மண்டி போட வேணாமா? சொல்லுங்கசார் செய்யறேன். தெருவுல ஒரு காளைமாடு திரியுது புடுச்சுட்டுவா... பையை ஸ்டேஷனில் வந்து வாங்கிக்கோ"[98] என்றான்.

இவ்வாறு பதவியில் இருப்பதால் அவர்களின் பதவியின் பலத்தை சாதாரண ஏழைமக்களிடம் காட்டுகின்றனர். அவர்களின் வேலைக்கு சிவக்கண்ணு போன்ற மக்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஏழைகளிடம் இருக்கும் பணத்தையும் தட்டிப்பறித்துக் கொள்கின்றனர். எதிர்த்து பேசினால் செய்யாத தவறுக்குத் தண்டனை கொடுக்கின்றனர். இவரைப் போன்ற அதிகாரிகள் இருக்கும்வரை ஏழை மக்கள் நிம்மதியாக வாழ முடியாது என்பதையே சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் சுட்டிக்காட்டுகிறார்.

'புகை' என்ற சிறுகதையில் தர்மராஜ் என்ற முதலாளி தன் நிறுவனத்தில் வேலைசெய்யும் கௌசி என்ற பெண்ணை அடைய நினைக்கிறான். அவர்களின் வறுமையைப் பயன்படுத்திக் கொள்ள நினைக்கும் முதலாளியாக தர்மராஜ் உள்ளான். அவன் நிறுவனத்தில் எந்தப் பெண்ணாக இருப்பினும் அவன் ஆசைக்கு இணங்க வேண்டும். இல்லையேல் அங்கு பணிபுரியமுடியாது. இதனை, "சில்மிஷங்கள் அவளுக்குப் பழகிவிட்டதைப் போல அவள் வேலை செய்த கம்பனிகளில் பல நடந்துவிட்டன. எல்லாவற்றுக்குமாக சகிப்புத்

தன்மையும், செரணையற்றதனமும் வந்துவிட்டது குறித்து அவளுக்கே எரிச்சலாக இருக்கும்.”[99]

இவ்வாறு முதலாளி வர்க்கத்தினர் அங்கு பணிபுரியும் பெண்களை எத்தகைய துன்பத்திற்கு ஆளாக்குகின்றனர் என்பதை இவரின் இச்சிறுகதையின் வாயிலாக உணர்த்துகிறார்.

‘வருகை’ என்ற சிறுகதையில் செல்லத்தாயி என்ற வயதான பெண் அவள் ஊரில் திருவிழா போன்று இருந்தது எதற்கு எனக் கேட்க அங்கு அணுஉலை வரப்போவதால் பிரதமர் வருகைக்காக அந்த திருவிழா. அவர் வரும்போது என்ன பேச வேண்டும், எப்படி பேசவேண்டும் என பாடம் நடத்தப்படுகிறது. ஊர் மக்களுக்கு அங்கு அணுஉலை வருவதில் விருப்பம் இல்லை. இருந்தும் அவர்களால் நிராகரிக்க முடியவில்லை. பிரதமர் வந்து செல்லத்தாயிடம் ஆங்கிலத்தில் நலமா? எனக் கேட்க மொழிபெயர்ப்பு செய்யப்பட்டு அவள் நாங்க என்னைக்கு நல்லாயிருந்தோம் என்று கூற, நல்லாயிருக்கோம் என மொழிபெயர்ப்பானது. என்ன சாப்பாடு? எனக் கேட்க வழக்கம்போல் கேல்வரகு எனக் கூறுகிறாள். கறிச்சோறு என மொழிப்பெயர்ப்பாகிறது. அணுஉலையால் ஒன்றும் கஷ்டமில்லையே? என்று கேட்க கஷ்டம் எனக் கூற இல்லை என மொழிப்பெயர்ப்பானது. அவர் சென்றதும் செல்லத்தாயி வீட்டில் இருந்த குடத்தை ஒருகால் உதைத்துவிட்டுச் சென்றது. மண்குடம் உடைந்து நீர் ஓடியது. இதனை, “பிரதமரிடம் யாரோ போகலாம் என்றனர். சரி என்று கிளம்பினார் செல்லத்தாயிக்கு முன்னால் வலிமையான மனிதர்கள் பலர் நின்று கொண்டிருந்தார்கள். கும்பல் பிரதமருக்குப் பின்னால் போனது. புழுதி அவள் மூச்சைச் சிரமப்படுத்தியது. சட்டென ஒரு பூட்ஸ் கால் தண்ணீர் இருந்த

குடத்தை மிதித்தது. பளாரென்று குடம் உடைந்து நீர் தரையில் இறங்கியது."[100]

அதிகார வர்க்கத்தினர் சுதந்திரமாக நம்மைப் பேசக் கூட விடுவதில்லை என்பதையும், அரசியல் தலைவர்களுக்கு மக்களுக்குமான உரைகள் இச்சிறுகதை போன்றுதான் மொழிப்பெயர்க்கப்படுகிறது என்பதை ஆசிரியர் இச்சிறுகதையின் வழி வெளிப்படுத்துகிறார். மனிதனின் புறப்போராட்டங்களுக்கு அதிகார வர்க்கமும் ஒருவகை காரணமாகின்றன எனலாம்.

**சமூக அவலம்**

புறப்போராட்டத்தில் கல்வியறிவு வளர்ந்துவிட்ட காலங்களிலும் சாதி, மத பேதங்களை ஒழிக்க இயலவில்லை. 'சாதிகள் இல்லையடி பாப்பா' என்று பாரதி முதல் இக்கால கவிஞர்கள் வரை போதித்தாலும் அவை வெறும் ஏட்டுச் சுரக்காயாகவே அமைந்துள்ளது. மனிதனின் போராட்டங்களுக்கு சாதி மத பேதங்களும் காரணமாக அமைகின்றன. இப்பிரிவினைகளால் மனிதன் பல சிக்கலுக்கு ஆளாகிறான் என்பதை சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதைகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

பல கலவரங்களுக்கு இப்பிரச்சனைகளே காரணமாக அமைகின்றன என்பதையும் ஆசிரியர் தம் சிறுகதையின் வழி சுட்டுகிறார். உயர்வு தாழ்வு பிறப்பில் இல்லை மனிதன் செயலில்தான் உள்ளது என்பதை கதைகளின் வழி உணரவைத்துள்ளார் ஆசிரியர்.

'தீட்டு' என்ற சிறுகதையில் சில பிரிவினர் மட்டும் கொண்டாடும் சம்பிரதாயங்கள், திருவிழாக்களில் மேல்சாதியினர் என்று அவர்களுக்கு முன்னுரிமை கொடுப்பது போன்ற காரணங்களால், மாணவர்களிடம்

சாதி என்ற ஒன்றை நாம் விதைக்கிறோம் என்பதையே கதை சொல்லி வாயிலாக ஆசிரியர் குறிப்பிடுகிறார். பள்ளியில் பயிலும் இரண்டு மாணவர்கள் பேசிக்கொள்வது போன்று கதை அமைந்துள்ளது. இருவரும் ஊர் திருவிழாவில் கரகம் ஆடுவதை பார்க்கின்றனர். அவர்கள் வீட்டிலும், கரகம் கீழ்சாதியினர்தான் எடுப்பார்கள் எனப் பேசியதைக் கேட்டு இருவரும் பேசிக்கொள்கின்றனர்.

"கரகாட்டமெல்லா கீழ் ஜாதிக் காரங்க ஆட்டமாமா அப்புறம் நாங்க உங்களவுட தாழ்ந்தவங்களாமா... சும்மா இல்லடா... சொல்லுறாங்க... உன்னெத் தொடக் கூடாதாம்மா... தொட்டாத் தீட்டாமா... ஏதாவது தீட்டு கொணம் நமக்கு வரப்போகுதுன்னு அழுதுட்டாங்கடா"[101] என்று சொல்லி முடித்தான் ஒரு மாணவன்.

வீட்டில் பெரியவர்கள் தான் குழந்தைகள் மனதில் இவைபோன்ற நஞ்சைப் பாய்ச்சுகிறோம். நம்மைப் பார்த்தே பிள்ளைகள் வளர்வார்கள் என்று எண்ணலாம். சாதி என்ற ஒன்றை அந்த குழந்தைகள் மனதிலும் பாய்ச்சுகின்றனர் என்பதைச் சுப்ரபாரதிமணியன் தம் சிறுகதையில் சுட்டிக் காட்டியுள்ளார்.

'எதிர்' என்ற சிறுகதையில் தன் மதத்தையே பெரிதாக நினைக்கும் ஒருவரை ஆசிரியர் சுட்டுகிறார். சுகந்தி பிரசவத்திற்காக கிறித்துவ மருத்துவமனை ஒன்றில் சேர்க்கிறார் அவள் கணவர். பிரசவித்து வரும் போது அங்கு சில வரையறைக்ள வைத்துள்ளனர். பைபிள் கொடுத்து, பூமாலையை மேரி மாதாவின் மீது போட்டு, மெழுகுவர்த்தி ஏற்றிய பின் செல்லவேண்டும். அவ்வாறு கொடுக்க சுகந்தியின் கணவன் மறுக்கிறார். சுகந்தி அதனை வாங்கி செய்துவிட்டு வருகின்றனர்.

இதனை, "வாங்கின மாலையை வைத்தபடி நின்றேன். சுகந்தி பக்கம் வந்து குழந்தையைக் கொடுத்துட்டு என்னிடம் இருந்த பொருளை வாங்கிக்கொண்டாள். சுகந்தி விறுவிறுவென்று போய் கன்னிமேரிக்கு மாலை போட்டாள் மெழுகுவர்த்தி ஏற்றினாள் வந்து இதில் என்ன இருக்க என்றாள்."[102]

இறைவன் ஒருவன் தான் வணங்கும் முறையும், உருவங்களும் தான் வேறு என்பதை சுகந்தியின் வழியாக ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். அவள் கணவனுக்கு இல்லாத மத நல்லிணக்கம் சுகந்திக்கு இருப்பதை அறியமுடிகிறது.

சுப்ரபாரதிமணியன் சுகந்தியின் வழி மத ஒருமைப்பாட்டைச் சுட்டுகிறார். சாதி பேதம் இல்லாத நாட்டை ஆசிரியர் தம் சிறுகதைகளின் மூலம் தம் தேச ஒற்றுமையை வலியுறுத்தியுள்ளார்.

தமிழ்நாடு மற்றும் இந்தியாவெங்கும் சாதிக் கலவரம், மதம் சார்ந்த கலவரங்கள் குறிப்பிட்ட சிலரால் உருவாக்கப் படுகின்றன. இப் போராட்டங்கள் மக்களைக் கூறுபோட்டு தேசவிரோதச் செயல்களுக்கு வித்திடும் என்பதை ஆசிரியர் எச்சரித்துள்ளார்.

**கலாச்சார சீரழிவு**

இன்றைய சமூக அமைப்பில் பண்பாட்டுக் கலாச்சார சீரழிவு பல புறப் போராட்டங்களுக்கு ஆணி வேராகும். பண்பாடு என்பதற்குப் பண்படுதல், சீர்படுதல், திருந்துதல் என்று பல பொருள் உண்டு. கலாச்சாரம் என்பது ஓர் இனத்தின் வாழ்வோடும், வளர்ச்சியோடும் இணைந்தது. சிறப்பு பண்பு நெறிகளே மனிதர்களை நல்லவர்களாகவும், சமூகப் பொறுப்பானவர்களாகவும் அடையாளப் படுத்துகின்றது.

*“பண்புடையார் பட்டுண்டு உலகம் அஃதின்றேல்*

*மாண்புக்கு மாய்வது மன்”[103] (குறள்.996)*

*என்கிறார் வள்ளுவர். மக்களின் பண்டைய கால வரலாற்றில் அவர்கள் பயன்படுத்திய கருவிகள் சமூகப் பழக்கம், வழக்கம், நம்பிக்கை, சமயம் முதலியவற்றைப் பண்பாடு என்ற சொல்லால் குறிக்கின்றனர். இத்தகைய பண்பாடு காலத்தால் மாறுபட்டு பின்பு அழித்தே விடுகின்றது.*

*இத்தகைய கலாச்சார சீரழிவைத் தம் சிறுகதைகளில் சுப்ரபாரதிமணியன் உணர்த்துகிறார்.*

*‘சில வேறு தினங்கள்’ என்ற சிறுகதை திருப்பூரைச் சுற்றியுள்ள கிராமங்களில் சேவல் சண்டைக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கின்றனர் என்பதை தம் சிறுகதையில் சுட்டிக்காட்டுகிறார். சேவல் சண்டை ஒரு குடும்பத்தின் கௌரவமாகக் கருதப்படுகிறது. இதனை, “சேவல்கட்டு, கோழிச் சண்டை எனக் கூறுவர். வாரம் இருமுறை என்ற விகிதத்தில் நடக்கும். ஞாயிறும், புதனும் அப்பா தவறாமல் சேவல்சண்டைக்குப் போவார். இதை ஒரு தொழில்முறை மாதிரியே செய்துவந்தார். நாங்கள் வாழ்க்கையை நகரத்தில் தொடங்கியபின் அது ஒரு அனுபவமாகவே போனது என்று அப்பா வருத்தப்படுவார். கால மாற்றத்தால் நம் பழக்கவழக்கங்கள் கூட மாறிப்போகிறது.”[104]*

*இச்சிறுகதையின் மூலம் நம் பழக்கங்கள் மாறி வருகின்றது. அதையே நாம் நாகரிகம் எனக் கூறிக்கொண்டு இருக்கின்றோம். நம் சின்னசின்ன அலச்சியங்களே நம்மை பெரிய இழப்பிற்கு அழைத்துச் செல்கிறது என்பதை இக்கதையின் வழி அறிவுறுத்துகிறார்.*

'கண்ணாமூச்சுகளும் முகமூடிகளும்' என்ற சிறுகதையில் துளசி தன் சின்னவயதில் தாய் வீட்டில் சோலை போன்று இருந்த விளை நிலங்கள் கொஞ்ச காலத்தில் அவள் திருமணம் ஆகிப் போனபின் மீண்டும் தாய் வீடு வருகிறாள். சோலையாய் இருந்த நிலங்கள் இன்று கட்டிடங்களாக காட்சியளிப்பதைக் கண்டு மனம் வேதனைப்படுகிறாள். இப்படி விளைநிலங்களை எல்லாம் அழித்துக் கொண்டு இருந்தால் மனிதன் எப்படி உண்பான். விவசாயம் என்னவாகும் என்று இக்கதையின் வழி சுப்ரபாரதிமணியன் தன் மன வேதனையை வெளிப்படுத்தியுள்ளார்.

"சமீபத்தில் அப்பாவின் சஷ்டியப்த பூர்த்திக்குச் சென்றிருந்தோம். வீட்டு எதிரில் இருந்த தோட்டம் முழுசாய் அழிந்துவிட்டது. எல்லாம் மனை இடங்களா கான்கிரீட் வனம், நாங்கள் ஓடி ஒளிந்த இடங்கள் பூதங்களாய் விசுவரூபித்து நின்றன."[105]

இவ்வகையில் விளைநிலங்கள் எல்லாம் மனையிடமாக மாறிவருவதைச் சுட்டுகிறார் ஆசிரியர். இந்த நிலை நீடித்தால் என்னவாகும் என நம்மை எண்ணிப்பார்க்க வைத்திருக்கிறார் ஆசிரியர்.

'இன்னும் மீதமிருக்கிற பொழுதுகளில்' என்ற சிறுகதையில் மல்லிகார்ஜுன் செட்டியார் அவ்வூரில் யாருக்கு திருமணம் என்றாலும் மாப்பிள்ளைக்கு டர்பன் வாடகைக்குக் கொடுத்து அதைக் கட்டிவிடுபவர் அவர்தான். அவருக்கு ஒருகாலத்தில் ஏகப்பட்ட கிராக்கி, இன்றோ நாகரிகத்தின் காரணமாக மாப்பிள்ளைகள் யாரும் டர்பன் கட்டுவதில்லை. அவருக்கும் வருமானம் இல்லை. நாகரிகத்தால் அவரின் தொழில் முடங்கிப்போனது என்பதை ஆசிரியர் சுட்டுகிறார்.

"மல்லிகார்ஜுனுக்கு ஏக மரியாதை அட்வான்ஸ் புக்கிங்கில்தான் 'டர்பன்' கிடைக்கும். பத்து முழ டர்பன் துணியை மடித்து, மாப்பிள்ளையின் தலையில் மடிப்பு மடிப்பாய் வெளித்தெரியும் மாதிரிக் கட்டி, ஒரு முனையைத் தொங்கவிட்டு பின் 'சீப்பு' என்ற விரிகோணத்தில், நிற்கும் ஆபரணத்தைக் கட்டி மாப்பிள்ளையை ஒரு பார்வை பார்த்தால்தான் "நம்ம வேலை முடிஞ்சது" என்ற ஆறுதல் மல்லிகார்ஜுனுக்கு இப்போது டர்பன் இல்லாமலேயே பையன்கள் கல்யாணம் செய்துகொள்கிறார்களே என வருத்தமாய் இருந்தது."[106]

சுப்ரபாரதிமணியன் நம் கலாச்சாரம் ஒவ்வொன்றாக அழிந்து வருவதையும் அவை நம் பண்பாட்டை இளைய தலைமுறை அறியாமலே செய்துவிடும் என்பதை தம் சிறுகதைகளில் எடுத்துக் காட்டியுள்ளார்.

தமிழரின் பழக்கவழங்கங்கள், மரபுவழியான சடங்குகள் போன்றவை நமது அடையாளமாகும். மரபுக்குத் தீமை வரும்போது அது பண்பாட்டுச் சீரழிவாக போராட்டமாக மாறுகிறது. எனவே நமது பண்பாட்டைப் போற்றிப் பாதுகாக்கவேண்டும் என சிறுகதைகளின் வழியாகக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

**முடிவுரை**

- ♦ தனி மனிதருக்கு நிறைவேறாத ஆசைகள், எதிர்பார்ப்புகள், ஏக்கங்கள், எதிர்காலம் குறித்த கனவுகள் அகப் போராட்டத்திற்கு அடித்தளமாய் அமைகின்றன. காதல் திருமணம், குடும்பம், வறுமை, பெண்கள் பிரச்சனைகள் போன்றவை அகப்போராட்டத்திற்கு வித்தாக அமைகின்றன.

- ♦ தொழில், சாதி, மதம், பண்பாட்டுச் சிதைவு, சுற்றுச்சூழல் போன்றவை புறப்போராட்டத்திற்கு ஆதாரமாய் விளங்குகின்றன.

♦ உழைப்புச் சுரண்டல், ஒடுக்குதல், ஒதுக்குதல் போன்றவை உறவுகளிலோ அல்லது சமூகத்திலோ எழும்போது அவை போராட்டக களமாக மாறும் உண்மையை இவ்வாய்வில் அறியமுடிகிறது.

♦ அகப் போராட்டத்தில் ஒருதலைக் காதல், கணவன், மனைவி உறவில் தருமணம் முதல் முதுமைவரை குடும்ப வாழ்க்கையில் இருவரும் சந்திக்கின்ற போராட்டங்களைப் பல சிறுகதைகள் வலியுறுத்தியுள்ளன.

♦ பெண்களில் குழந்தைப் பேறு இல்லாமை, விதவை, முதிர்கன்னி, பாலியல் தொழில் போன்றவை இச்சமூகத்தில் பெண்கள் சந்திக்கின்ற மிகப்பெரிய சமூக அவலமாக இவ்வாய்வு உறுதிப்படுத்துகிறது. பல சிறுகதைகள் இப் போராட்டக் களத்தைச் சுற்றி அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

♦ இங்கு பெண்ணுக்குரிய போராட்டமும் ஆணுக்குரிய போராட்டமும் வேறு வேறாக அமைந்துள்ளன. திருமணத்திற்கு முன்பும் பின்பும் ஆணை விட பெண்ணே மனதளவிலும் உடலளவிலும் பாதிக்கப் படுகிறாள் என்பதை இவ்வாய்வில் நன்கு அறியமுடிகிறது.

♦ அகப்போராட்டம் தன்னிலிருந்தும் குடும்பத்திலிருந்தும் பெரும்பாலும் உருவாகிறது. ஆனால் புறப்போராட்டம் சமூக அமைபபு, பின்னணி போன்றவற்றால் ஏற்படுவதை உணரமுடிகிறது. இச் சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் போராட்டங்களை பல சிறுகதைகள் மெய்ப்பித்துள்ளன.

♦ புறப்போராட்டத்தில் வறுமை, வேலைவாய்ப்பின்மை, சுற்றுச்சூழல் மாசு, இனக் கலவரங்கள், பண்பாட்டுச் சீரழிவை போன்றவை

பெரும் போராட்டங்களுக்கு வழிவகுக்கின்றது என்பதை ஆசிரியர் பல சிறுகதைகளில் வலியுறுத்தியுள்ளார்.

♦ நமது பாரம்பரிய நெசவுத் தொழில் அழிந்து வருவதையும் அத் தொழிலில் ஈடுபடும் மக்கள் சவக்குழியில் தள்ளப்படுவதையும் அதனால் பல போராட்டங்களை மக்கள் சந்தித்து வருவதையும் ஆய்வு முடிவுகள் மெய்ப்பித்துள்ளன.

♦ தமிழரின் பண்பாடு, கலாச்சாரம், பழக்க வழக்கங்கள், சடங்குகள் போன்றவை நமது அடையாளங்களாகும். இதனைப் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டும் எனவும் ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார்.

♦ தனியொரு மனிதன் தன்னுடைய நிலையில் இருந்து செயல்படுவதற்குத் தடையாக இருப்பதைப் 'போராட்டம்' எனப்படுகிறது. ஆண் - பெண் இருபாலருக்கும் ஒருதலைக்காதல் பெரும் போராட்டமாக அமைகின்றமையை அறியமுடிகிறது.

♦ புறப்போராட்டமாவது சமூகத்திலிருந்து மனிதன் எதிர்கொள்ளும் பிரச்சனைகள் அனைத்தும் புறப்போராட்டமாகும். நட்பு, ஆராய்ந்து கொள்ளவேண்டும் என்பதை வெளிப்படுத்துகின்றன.

♦ செய்யும் தொழில் நலிவடையும்போது அத்தொழிலை நம்பி வாழும் இனம் அழிக்கப்படுகிறது. சுற்றுச்சூழல் அழுத்தமாக ஆசிரியரால் காட்டப்படுகிறது. சிறு விசயத்தில் நம் கவனக்குறைவே பெரிய பாதிப்பை ஏற்படுத்துகிறது என்பதை வலியுறுத்துகிறார்.

♦ வேலையின்மை, வறுமை, சாதி, கலாச்சார அழிவு போன்றவையே பெரும் போராட்டங்களுக்கு வழிவகுக்கிறது என்பதை அறியமுடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

*1. இரா.கல்பகம், சமூகவியல், ப.28*

*2. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.168*

*3. கிங்களிதேவிஸ், சமுதாயம், ப.44*

*4. வெ.கனகசுந்தரம், சமூக உறவுமுறைகள், ப.86*

*5. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.182*

*6. ஆய்வுக்கோவை, பல்கலைக்கழகத் தமிழாசிரியர் கழகம், ப.260*

*7. மேலது, ப.261*

*8. மா.சாலமன், பெண்ணியச் சித்தரிப்புகள், ப.5*

*9. சோ.கிருஷ்ணராசன், சமூகவியல், ப.38*

*10. அ.மு.பரமசிவானந்தம், சமூகவியல், ப.13*

*11. சோ.கிருஷ்ணராசன், சமூகவியல், ப.19*

*12. வெ.கனகசுந்தரம், சமூக உறவுமுறைகள், ப.89*

*13. முனைவர் அ.அந்தோனி குருஸ், அசோகமித்திரன் புனைகதைகளில் மனிதன், ப.150*

*14. மேலது, ப.250*

*15. ஜார்ஜ் தாம்சன், மனத்தின் தோற்றம், ப.5*

*16. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம், நூற்பா.571*

*17. முனைவர் சுந்தரசண்முகனார், மனத்தின் தோற்றம், ப.3*

*18. எஸ்.இராமகிருஷ்ணன், க்ரியா தமிழ் அகராதி, ப.157*

*19. முனைவர் சுந்தரசண்முகனார், மனத்தின் தோற்றம், ப.5*

*20. மேலது, ப.6*

*21. சுவாமி சித்பவானந்தா, திருவாசகம் ஆசைப்பத்து, 676*

*22. திருத்தக்கத் தேவர், சீவகசிந்தாமணி, ப.255*

23. புலியூர் கேசிகன், புறநானூறு, ப.243

24. இராஜராஜன், உரையாடல் திறன், ப.87

25. தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியம் உணர்த்தும் மனித உறவுகள், ப.43

26. சுப்ரபாரதிமணியன், சிறுகதை, அப்பா, ப.13

27. பின்னல், ப.825

28. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.133

29. டி.கே.சுப்பிரமணியன் செட்டியார், பிங்கல நிகண்டு, ப.916

30. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.133

31. மேலது, ப.135

32. மேலது, ப.135

33. மேலது, ப.135

34. புலியூர் கேசிகன், சிலப்பதிகாரம், ப.140

35. டி.கே.சுப்பிரமணியன் செட்டியார், பிங்கல நிகண்டு, ப.88

36. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.133

37. மேலது, ப.133

38. மு.இராமலிங்கம், தொல்காப்பியம், ப.182

39. தாயம்மாள் அறவாணன், உறவுமுறைகள் ஆய்வு, ப.153

40. மு.இராமலிங்கம், தொல்காப்பியம், ப.111

41. சுப்ரபாரதிமணியன், கைகுலுக்க நிறையச் சந்தர்ப்பங்கள், ப.66

42. மேலது, ப.72

43. ஒரு சின்ன பிரயாணத்திலும்கூட, ப.113

44. கிணற்றலை, ப.622

45. சில வேறு தினங்கள், ப.37

46. மேலது, ப.39

*47.* தொலைதல், *ப.951*

*48.* மேலது, *ப.953*

*49.* திருக்குறள், *1323*

*50.* மேலது, *1330*

*51.* சமாதானம், *ப.447*

*52.* திருக்குறள், *1329*

*53.* கரு, *ப.715*

*54.* உறுத்தல், *ப.809*

*55.* அப்பா, *ப.5*

*56.* எஞ்சியது, *ப.199*

*57.* சமாதனம், *ப.447*

*58.* மேலது, *ப.449*

*59.* கூடவரும் அவர்கள், *ப.212*

*60.* திருக்குறள், *66*

*61.* புதுவேலை, *ப.925*

*62.* யோகம், *ப.937*

*63.* திருக்குறள், *131*

*64.* பாதுகாப்பு, *ப.793*

*65.* மேலது, *ப.795*

*66.* அர்த்தநாரீஸ்வரம், *ப.970*

*67.* நீலப்படமும் சுசித்ராவும், *ப.1013*

*68.* தொடுகை, *ப.785*

*69.* நெருப்புக் கோளம், *ப.819*

*70.* ரூபங்கள், *ப.847*

71. உடல்முடிச்சுகள், ப.884

72. பாதுகாப்பு, ப.794

73. சிதைவு, ப.778

74. புலியூர்கேசிகன், புறநானூறு, ப.353

75. நதிக்கரையும் கான்கிரீட் வனங்களும், ப.161

76. சா.வே.சுப்பிரமணியம், நற்றிணை, ப.55

77. திருக்குறள், 580

78. புலியூர்கேசிகன், புறநானூறு, ப.251

79. அடையாளம், ப.56

80. மேலது, ப.56

81. நசுக்கம், ப.379

82. நவீனம், ப.426

83. சிதறல், ப.455

84. மேலது, ப.459

85. வெடி, ப.103

86. தீயாப் பறவைகள், ப.154

87. இரா.பரமேஸ்வரன், சுற்றுச்சூழல் கல்வி, ப.37

88. சாய்ந்து நிற்க ஒரு மரம், ப.833

89. மணல், ப.870

90. ஈரம், ப.976

91. நொய்யல், ப.1068

92. சூழல், ப.567

93. எல்லோருக்குமான துயரம், ப.1085

94. திருக்குறள், 753

*95.* வசந்தவிஹாரர், *ப.243*

*96.* ஒரு தற்காலிக உறவு, *ப.252*

*97.* மாறுதடம், *ப.265*

*98.* எல்லோருக்குமான நேசம், *ப.181*

*99.* புகை, *ப.377*

*100.* வருகை, *ப.505*

*101.* தீட்டு, *ப.343*

*102.* எதிர், *ப.433*

*103.* திருக்குறள், *996*

*104.* சில வேறு தினங்கள், *ப.39*

*105.* கண்ணாமூச்சிகளும் முகமூடிகளும், *ப.176*

*106.* இன்னும் மீதமிருக்கிற பொழுதுகளில், *ப.25.*